# தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை

## மூன்றாம் தொகுதி

பதிப்பாசிரியர்

முனைவர் த.கோ.பரமசிவம்




தமிழ் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

# தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணை

## மூன்றாம் தொகுதி

*(1001 முதல் 1500 நூல்கள் வரை)*


*பதிப்பாசிரியர்*

**முனைவர் த. கோ. பரமசிவம்**

*தலைவர், ஓலைச்சுவடித்துறை*

*தொகுப்பாசிரியர்*

**முனைவர் வே. இரா. மாதவன்**

**புலவர் ப. வெ. நாகராசன்**





**தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.**

தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு: 79–3 ISBM 81-7090-091-3

திருவள்ளுவர் ஆண்டு-2018-கார்த்திகைத் திங்கள்-நவம்பர் 1987

பதிப்பாசிரியர் : **முனைவர் த. கோ. பரமசிவம்**

பதிப்பு : முதற் பதிப்பு.

விலை : உரூ. 85-00

அச்சு : சர்மாஸ் சானடோரியம் அச்சகம்,
புதுக்கோட்டை.

இந்நூல் மையஅரசின் தில்லி தேசிய ஆவணக்காப்பகம் வழங்கிய நல்கையின்வழி வெளியிடப்பெறுகிறது.

Published with the financial assistance of National Archives, Govt. of India, New Delhi.



# தமிழ்ப் பல்கலைக்கழகம்
## தஞ்சாவூர்

**முனைவர் ச. அகத்தியலிங்கம்**
*எம். ஏ., பிஎச்.டி. (கேரளா)*
*பிஎச்.டி. (இந்தியானா, அமெரிக்கா)*
*துணைவேந்தர்*

## அணிந்துரை

*தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் பல்வேறு பணிகளில் பண்டைத் தமிழ்ச் சான்றுகளைப் போற்றிப் பாதுகாப்பதும் அவற்றை வெளி உலகுக்குத் தெரியப்படுத்துவதும் ஒன்றாகும். தமிழகம் பழங்கால ஓலைச்சுவடிகளுக்குப் பெயர் பெற்ற ஒரு இடம் ஆகும். ஆயிரக் கணக்கான ஓலைச்சுவடிகள் தமிழகத்திலே இருப்பது வேறு எந்த நாட்டிலும் காணமுடியாத சிறப்பாகும். எனவே இவ்வோலைச் சுவடிகளைப் பாதுகாத்து அழியாத செல்வங்களாக வைப்பதும் இவற்றை அச்சில் வெளிக்கொணர்வதும் இன்றியமையாத ஒரு நல்ல தமிழ்ப் பணியாகும். இத்தமிழ்ப் பணியைக் கருத்தில் கொண்டுதான் தமிழ்ப் பல்கலைக் கழகம் இதற்கெனத் தனி ஒரு துறையைத் தோற்றுவித்துள்ளது.*

*கடந்த ஒரு சில ஆண்டுகளாகத் தமிழ்ப் பல்கலைக் கழக ஓலைச்சுவடித் துறையின் வாயிலாக 3,000 க்கும் அதிகமான சுவடிகள் தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் பெரும்பாலானவை நல்ல மனம் கொண்ட அன்பர்கள் பலரால் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டவை. இவை அனைத்திற்கும் விளக்க அட்டவணை ஒன்று தயாரித்து வெளியிடும் திட்டத்திற்குத் தில்லி தேசிய ஆவணக் காப்பகம் ரூ. 1,25,000 அளித்து உதவியது.*

இத் திட்டத்தின் வாயிலாக உருவாகியுள்ள நூல்களே இப்போது வெளிவருபவை. இரண்டாயிரம் சுவடிகளைப் பற்றிய விவரங்களை இந்நான்கு தொகுதிகளும் கொண்டுள்ளன. இது நிச்சயமாகத் தமிழ் ஓலைச்சுவடி ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள அறிஞர்களுக்கும் பொது மக்களுக்கும் பயன்படுவதாகும்.

இத் திட்டத்திற்கு நல்கை வழங்கிய தில்லி தேசிய ஆவணக் காப்பகத்தார்க்கும் இத்திட்டத்தில் இயக்குநராகவும்,பதிப்பாசிரியராகவும் இருந்து அண்மையில் ஓய்வு பெற்ற பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை அவர்களுக்கும் அதன்பின்னர் இத்திட்டத்தை நிறைவேற்றிய முனைவர் த. கோ. பரமசிவத்திற்கும் என்னுடைய பாராட்டுக்கள்.

தொகுப்புப் பணியில் ஈடுபட்ட முனைவர் வே. இரா. மாதவன், புலவர் ப. வெ. நாகராசன், மற்றும் இத்திட்டம் நிறைவேற ஒத்துழைப்பு நல்கிய அலுவலர் அனைவர்க்கும் என் பாராட்டுக்களும், வாழ்த்துக்களும் உரியன.

தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
நவம்பர் 13, 1987

ச. அகத்தியலிங்கம்

# உள்ளுறை

# தில்லி, தேசிய ஆவணக்காப்பக நல்கைத் திட்டம்—1986-87

## இத்திட்டத்தில் பணியாற்றியோர்

1. **பேராசிரியர் மு. சண்முகம்பிள்ளை**
   *முன்னாள் சுவடிப்புலத் தலைவர்*
2. **முனைவர் த. கோ. பரமசிவம்**
   *தலைவர், ஓலைச்சுவடித்துறை*
3. **முனைவர் வே. இரா. மாதவன்**
   *விரிவுரையாளர், ஓலைச்சுவடித்துறை*
4. **புலவர் ப. வெ. நாகராசன்**
   *தொழில் நுட்ப உதவியாளர், ஓலைச்சுவடித்துறை.*

---

# பதிப்புரை

இந்நூல் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் ஓலைச்சுவடித்துறையிலுள்ள தமிழ்ச்சுவடி விளக்க அட்டவணையின் மூன்றாம் தொகுதியாகும். இதன்கண் 1001 முதல் 1500 வரையிலுள்ள நூல்களின் விரிவான விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணையின் முதல் தொகுதியில் 1 முதல் 500 வரையிலான நூல்களின் விளக்கமும், இரண்டாந் தொகுதியில் 501 முதல் 1000 வரையிலான நூல்களின் விளக்கமும் இடம் பெற்றிருந்தன. முதல் தொகுதியில் பேரா. மு. சண்முகம்பிள்ளையவர்களின் அரிய முகவுரைப்பகுதி இடம்பெற்று அத் தொகுதியை அணி செய்தல் காணத்தகும்.

இம் மூன்றாம் தொகுதியில் சுவடி விளக்கமுறை முதலியன எல்லாம் முதற் தொகுதியிற் போலவே அமைக்கப்பெற்றுள்ளன. இத்தொகுதியின் தொகுப்புப் பணியினை முனைவர் வே. இரா. மாதவன், விரிவுரையாளர் அவர்களும், புலவர் ப.வெ. நாகராசன் தொழில் நுட்ப உதவியாளர் அவர்களும் மேற்கொண்டிருந்தனர். இத்தொகுதியில் இடம்பெற்றுள்ள சுவடிகளுள் பெரும்பாலன அன்பர்களின் அன்பளிப்பாகப் பெறப்பட்டனவேயாம். சுவடிகளை வழங்கிய அப்பெரியோர்களின் பெயர்முதலியன இப்பதிப்புரையின் இணைப்பில் காணலாகும்.

## மூன்றாம் தொகுதியின் சுவடிகள்

இத் தொகுதியில் ஓரேட்டை மட்டுமே கொண்ட நூல் முதல்-727 ஏடுகளைக் கொண்ட நூல் வரை அளவில் பலதரப்பட்ட நூல்களின் விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. தனிப்பாடல்கள் – 1107, விடுகதைக்கணக்கு - 1110, தனிப்பாடல்கள் - 1125, அகத்தியர் பஞ்சபூதக்கும்மி-1160 என்பன ஓரேட்டைக் கொண்ட நூல்கள். இவற்றுள் பின்னிரு நூல்கள் ஏட்டில் ஒரு பக்கம் மட்டுமே அமைந்தனவாம்.

மகாபாரத அம்மானை – 1129, 1130 என்னும் சுவடி 727 ஏடுகளைக் கொண்ட மிகப்பெரிய சுவடியாகும். பேரளவு காரணமாக இச்சுவடி இரண்டு சுவடியாகப் பிரிக்கப்பெற்று 400 ஏடுகள் கொண்டது முதற்பகுதியாகவும் 327 ஏடுகள் கொண்டது

இரண்டாம் பகுதியாகவும் அமைக்கப்பெற்று விளக்க அட்டவணை தயாரிக்கப்பெற்றது. இச்சுவடியே இதுவரை தமிழ்ப்பல்கலைக் கழகத்திற்குக் கிடைத்த சுவடிகளுள் மிகப்பெரியதாகும் என்பது குறிப்பிடத்தக்கதாம்.

முதற்தொகுதியிற் போலவே இத்தொகுதியிலுள்ள சுவடிகளும் பொருள் அடிப்படையிலோ அளவு அடிப்படையிலோ நூலாசிரியர் அடிப்படையிலோ அடைவு செய்யப்பெறாமல், சுவடிகள் வந்துசேர்ந்த தொடர்ச்சியைக் கொண்டே தொடர் எண் கொடுத்து விளக்கம் அளிக்கப்பட்டுள்ளன.

இத் தொகுதியில் பல சுவடிகள் நல்ல நிலையில் முழுமையான நூல்களாகக் காட்சியளிக்கின்றன. அவற்றுள் திவ்வியப்பிரபந்த நூல்கள் — 1252–1267, 1278–1323, நான்மணிக்கடிகை உரை-1269, திரிகடுகம் உரை — 1270, இன்னாநாற்பது — 1272, இனியவை நாற்பது — 1273, கார்நாற்பது — 1274, களவழி நாற்பது — 1275, ஆசாரக்கோவை — 1271 போன்ற பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், தேவாரம் — திருநாவுக்கரசர் — 1209, தேவாரம்—ஞானசம்பந்தர் — 1186, சுந்தரர் — 1187, திருவிளையாடற்புராணம் — 1188, திருக்குறள் — 1201, திருவாசகம் — 1203, கந்தபுராணம் — 1207, மகாபாரத அம்மானை — 1238, பெரியபுராணம் — 1206, 1223, இராமாயணவசனம் — 1135 போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்க சிறப்புடையனவாம்.

## அச்சு விவரம்

இத் தொகுதியில் இடம்பெற்றுள்ள பல நூல்களுக்கு அச்சான விவரம் தரக்கூடவில்லை. அச்சு நூல்களின் விவர அட்டவணை கிடைக்கப் பெறாததாலும் இத்திட்டப்பணியின் காலம் வரையறுக்கப்பெற்றதாலும் உரியகாலத்திற்குள் முடிக்கவேண்டிய கடப்பாடு கருதி அவ்விவரத்தைச் சேர்க்க முடியவில்லை என்பதை வருத்தத்துடன் குறிப்பிடுகிறேன். இக்காரணம் பற்றியே மாற்றுச்சுவடிகள் காணும் இடங்கள் பற்றிய விவரமும் முழுமையாகத் தரக்கூடவில்லை. இக்குறைகள் அடுத்த பதிப்புகளில் நிறைவு செய்யப்பெறும்.

தமிழன்பர்களுக்கு அதிகம் அறிமுகமாகியுள்ள நூல்களான அகத்தியர் தேவாரத்திரட்டு, தேவாரம், திருவாசகம், திவ்வியப்பிரபந்த நூல்கள், அருணாசல புராணம், கந்த புராணம், கம்பராமாயணம் போன்ற நூல்களின் அச்சு விவரம் அனைவரும்

அறிந்ததே. ஆதலின் அதிகம் அறிமுகமாகாத நூல்களின் அச்சு விவரம் இத்தொகுதியிலுள்ள சில நூல்களுக்குக் கொடுக்கப்பெற்றுள்ளது. ஆறாதாரக்கட்டளை — 1008, வீட்டுநெறிப்பால் — 1011, தில்லைச்சிற்றம்பல நாடி வெண்பா — 1078, தட்சிணாமூர்த்தி தேசிகர் தசகாரியம் — 1085, சுவாமிநாத தேசிகர் தசகாரியம் — 1086 போன்ற நூல்கள் அச்சாகியுள்ளன. ஆயின் பலரும் அறிந்திருக்க வாய்ப்பில்லை என்பதால் இவற்றின் அச்சு விவரம் இத்தொகுதியில் சுட்டப்பெற்றுள்ளன.

இத் தொகுதியில் அச்சுருக்காணாத சில சுவடிகள் இடம் பெற்றுள்ளமை குறிக்கத் தக்க சிறப்புடையதாம். அவற்றுள் சில நூல்கள் மருத்துவ நூல்களாக இருப்பதும் சுட்டத் தகுவதாம். அகத்தியர் சாலத்திரட்டு — 1021, தட்சிணாமூர்த்தி வைத்தியம் - 1022, வைத்திய சிந்தாமணி — 1026, கும்பமுனி சூத்திரம் — 1027, பிரமமுனி வைத்திய சூத்திரம் — 1052, அகத்தியர் 205 — 1053, அகத்தியர் பூரணம் 400 — 1054 போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்க மருத்துவ நூல்களாம். இவ்வாறே மார்க்கண்ட புராணம் — 1127, வைகுண்ட அம்மானை—1132, முத்துநாச்சி சண்டை — 1108, ஊமைத்துரை சண்டை — 1109, குருசேத்திரமாலை — 1111, பெருமாள் அம்மானை — 1124 போன்ற இலக்கிய நூல்களும் குறிக்கத் தக்கன.

இவற்றுள் மார்க்கண்டபுராணம் என்னும் நூல் புதுவை குழந்தைவேலன் என்பார் இயற்றிய 669 விருத்தங்களையுடையதாம். அல்லி அரசாணிமாலை என்று முடியும் அல்லி அரசாணி அம்மானை—1112 என்னும் நூல் அச்சான அல்லி அரசாணி அம்மானை நூலினும் வேறானதாகக் காணப்படுகிறது. இவ்வாறே சில நூல்கள் அச்சான நூல்களினும் மாறுபட்ட நூலாக அதே பெயர்களில் விளங்குவதாக இருத்தல் கூடும். இவ்வகை நூல்கள் முழுவதுமாக ஆய்வு செய்யப் பெற்று உண்மை காண வேண்டுவனவாம்.

கழிகாலத்திரங்கல்—1079, நிகழ்காலத்திரங்கல்—1080, வருங்காலத்திரங்கல்—1081 என்பன 2 ஏடுகளில் அடங்கிய சிறுநூல்களாம். ஆயின் 50, 51, 55 அழகிய கண்ணிகளில் அமைந்த சிறந்த தத்துவ நூல்களாக அவை காணப்படுகின்றன. சிற்றம்பலநாடிகள் தாலாட்டு—1082 என்னும் சிறுநூலும் 63 கண்ணிகளில் அமைந்த சிறப்புடையதாகும். இவற்றையெல்லாம் அறிஞர் ஆய்ந்தும், பதிப்பித்தும் தமிழ் மொழியை வளமாக்க வேண்டும்,

## மருத்துவ நூல்கள்

இத் தொகுதியில் மருத்துவ நூல்கள் பல இடம் பெற்றுள்ளன. முறையாக அமைந்த பாடல்களால் ஆன நூல்கள் முதல், அனுபவ வைத்திய முறையை எழுதி வைத்துள்ள உரைநடைக் குறிப்புகள் வரை பலதரப்பட்ட நூல்கள் நிறைவுடனும் குறைச்சுவடி நிலையிலும் காணக்கிடைக்கின்றன. அகத்தியர், புலிப்பாணி, தன்வந்திரி, சட்டைமுனி, போகர் போன்ற சித்தர்களின் பெயர்களால் அமைந்த நூல்கள் யாவும் பாடல் வடிவில் அமைந்தனவாகவே காட்சியளிக்கின்றன.

குறிப்பிட்ட தலைப்போ நூற்பெயரோ இன்றிக் காணப்படும் உரைநடை நூல்கள் மருத்துவச் செய்திகளை, மருந்து செய்முறைகளை, நோய்க்குரிய மருந்துகளின் பட்டியல்களை அறிவிப்பனவாகக் காணப்படுகின்றன. பல சுவடிகளிலிருந்து இவ்வகைச் செய்திகளைத் திரட்டி எழுதப்பெற்ற நிலையைச் சில சுவடிகள் சுட்டியுள்ளன.

'தட்சிணாமூர்த்தி சுவாமியுடைய அருளினாலே பற்பல வைத்தியம் எழுதி முடிந்தது. முற்றிற்று'–1056 என்ற சுவடிக் குறிப்பொன்று நோக்கத் தகுவதாம்.

பெரும்பாலும் உரைநடையில் அமைந்த மருத்துவக்குறிப்புகள் தெளிவுடன் காணப்படுவதாகவும் வட்டார வழக்கை எதிரொலிப்பதாகவும் உள்ளன. பீனிசம் என்னும் மூக்கு நோய்க்கு எளிய மருந்தை ஒரு சுவடி குறிப்பிடுகிறது.

'திப்பிலி, மிளகு, முருங்கைவிதை, விளாவரிசி இவை அரைத்து நாசியில் நசியம் பண்ணலாம். புண்ணாக்குப் பொடி பண்ணி இந்நீரில் குடிக்கவும். ஆடாதோடைச்சாறும், ஆவின் நெய்யும் சரிகூட்டிக் குடிக்கவும்'—மருத்துவ நூல்–1056.

விக்கல், வாந்தி போன்ற நோய்களுக்கும் இவ்வாறே எளிய மருந்து சொல்லப்படுகிறது. 'மயிலிறகு சுட்ட சாம்பல்,அதிமதுரம் திப்பிலி, சர்க்கரை தேன்வார்த்துக் குழப்பி நாக்கில் தடவ விக்கல், எக்காலமும் அரோசன தாகம் இதுவெல்லாம் தீரும்'—மருந்து செய்முறை–1051.

நீரிழிவு என்னும் நோய் வசதிபடைத்த பெரியவர் பலரைப் பிணிக்கும் நோயாக இன்று திகழ்கிறது. இந்நோய்க்கு எளிய மருந்தொன்றை ஒரு சுவடி (மருந்து செய்முறை–1038) சுட்டுகிறது.

'முசுட்டைக்கீரை ஒரு பிடி, கட்டுக்கொடியிலை ஒரு பிடி இரண்டையும் வெவ்வேறே அவித்துக் கடைந்துகொண்டு செக்கிலே எண்ணெய் ஆட்டுகிறபோது. எண்ணெயும் புண்ணாக்கும் அஞ்சு பலம் நிறுத்திக்கொண்டு கடைந்த கீரையும் கூடக் கலந்து அங்கத்தில் வெள்ளை ஒரு காசெடை கட்டி ஆறுநாள் பனிரெண்டு பொழுது கொடுக்கவும்';

இவ்வாறு பலதரப்பட்ட நிலைகளில் நோய்க்குரிய மருந்துகளை—மருத்துவ முறைகளை விளக்கும் சுவடிகள் இத்தொகுதியில் இடம்பெற்று இதனை அணி செய்தல் சுட்டத்தகும் சிறப்புடையதாம்.

## சோதிட நூல்கள்

மருத்துவ நூல்கள் போலவே அச்சான, அச்சாகாத சோதிட நூல்கள் சில இத்தொகுதியில் இடம்பெற்றுள்ளன. அவை நல்ல நிலையில் இத்தொகுதியின் கண் காணப்படுகின்றன என்பது சிறப்புக்குரியதாம். சாதக பாரிசாதம்—1385, சூடாமணி உள்ளமுடையான்—1386, அஷ்டகவர்க்கம்-1387, குளிகன்பலன்—1388 கிரகசமயம்—1389, பாலாரிஷ்டம்—1390, சாதகாலங்காரம்—1404, ஆரூடநூல்—1408 என்னும் நூல்களுடன் சோதிடச் செய்திகளைத் தாங்கிய, பெயர் அறியமுடியாத நூல்கள் (1391, 1405 1409) சிலவும் குறிப்பிடத்தக்கனவாம்.

## வைணவ நூல்கள்

இம் மூன்றாம் தொகுதியில் வைணவ நூல்கள் பல இடம் பெற்றுள்ளன. பெரும்பாலன திவ்விய பிரபந்தப் பெருநூலைச் சார்ந்தனவாகக் காணப்படுகின்றன. திவ்விய பிரபந்தத்தின் சில நூல்கள் சேர்ந்த அளவிலும் தனித்தனி நிலையிலும் அவை தொகுக்கப்பெற்றன. தொகுத்தவாறே ஈண்டும் எண்ணிடப் பெற்று அட்டவணை செய்யப் பெற்றுள்ளன.

திவ்விய பிரபந்த நூல்களாக உள்ள அவற்றை 1330–1352; 1365-1384, 1278-1323, 1252-67 போன்ற எண்களில் நாம் காணலாம். பிள்ளை லோகாசாரியரின் நூல்களான ஸ்ரீவசன பூஷணம்—1354, ரஹஸ்யத்ரயம்—1357, தத்வபரித்ராணம்-1362 பிரபன்னபரித்ராணம்—1362 போன்ற நூல்களும் திவ்வியபிரபந்த உரைகளும் ஈடுகளும் குறிப்பிடத்தக்க சிறப்புடைய நல்ல நிலையினவாம்.

திவ்விய பிரபந்த நூல்களேயல்லாமல் இராமாயணவசனம் — 1135, வைகுண்ட அம்மானை — 1132, குசலவ நாடகம்—1114, மகாபாரத அம்மானை — 1238 போன்ற நூல்களும் இத்தொகுதியில் வைணவ நூல்களாக உள்ளன. வால்மீகி இராமாயணத்தின் உரை—வடமொழி சுலோகங்களுக்குத் தமிழ்மொழியில் அமைந்த உரை (பெரியவாச்சான் பிள்ளை) குறிப்பிடத்தக்க சிறப்புடைய சுவடியாகும். இந்நூல் 6 பகுதிகளாக—சுவடிகளாக (1324 முதல் 1329 வரை) அமைந்துள்ளது. வடமொழிப் பகுதிகள் யாவும் தென்னிந்திய கிரந்த லிபியில் காணப்படுவதும் குறிப்பிடத்தக்கதாம்.

இவ்வைணவ நூல்களில் பெரும்பாலும் பிற்குறிப்புப் பகுதிகள் காணப் பெறவில்லை. பிற சுவடிகளில் நூல் அல்லது உரை முடிந்தவுடன் யாரால் எப்போது எழுதப்பெற்றது என்ற விவரம் தரப்பெற்றிருக்கும். நிறைச்சுவடியாக இருக்கும் பெரும்பாலான சுவடிகளில் காலக் குறிப்பும் சுவடி உரிமையாளர் பெயரும் காணப்படும். ஆயின் இவ்வைணவச் சுவடிகளில் அத்தகைய குறிப்புகள் எவையும் இடம் பெறவில்லை. தனித்தனி நூலாக முடிந்தாலும் தொகுதி நூல் முழுவதும் முடிந்து காணப்பட்டாலும் சுவடி நிறைவுடையதாக உள்ளதேயன்றி இவ்வகைப் பிற்குறிப்பு இடம் பெற்றிலது. ஒரு சுவடியில் மட்டும் பிற்குறிப்பு ஒன்று காணப்படுகிறது. பெரியாழ்வாரின் முதலாயிரம் — 1347 என்னும் சுவடியில்,

> ''சாலீவாகன சகாப்தம் 17...மேல் செல்லாநின்ற கொல்லம் 1000 ஆண்டு வானவ நாட்டு மூவா மங்கையில் இருக்கும் தெய்வநாயக ராமாநுஜபுத்திரன் பொன்னப்ப ராமாநுஜபுத்திரன் தெய்வநாயக ராமாநுஜதாஸன் 20 ஆம் தேதி புனர்பூச நட்சத்திரமும் ஞாயிற்றுக்கிழமையும் கூடின சுபதினத்தில் திருச்சந்த விருத்தம் எழுதினது'' என்னும் குறிப்பு காணப்படுகிறது.

வானவநாட்டு மூவாமங்கை—இது கேரள நாட்டில் மூகாம்பிகை கோயில் கொண்டுள்ள ஊராக இருத்தல் கூடும். கேரள மாநிலத்திலும் தமிழ்ச்சுவடிகள் எழுதிப்படிக்கப்பெற்றன என்பதனை இக்குறிப்பு காட்டுவதாகும். இத்தகு அரிய செய்திகள் பல பிற்குறிப்புகள் இல்லாமையால் நமக்குக் கிட்டாமல் போய்விட்டன என்பது வருத்தந் தருவதாம்.

## நாட்டுப்புறப் பாடல்கள்

நாட்டுப்புறப் பாடல்கள் வாய்மொழியாக வழங்கியே வாழ்ந்து வருவனவாம். எனினும் இலக்கிய உருக்கொண்ட நாட்டுப் பாடல்களை எழுதியும், படித்தும் பயின்று மகிழ்ந்த நிலையைச் சில சுவடிகள் நமக்குக் காட்டுகின்றன. இம்மூன்றாம் தொகுதியில் இவ்வகை நாட்டுப்புறப்பாடல்களாகச் சில சுவடிகள் இடம்பெற்றுள்ளன.

அம்மானை வடிவில் அமைந்த மகாபாரதக்கதை ஒன்று (மகாபாரத அம்மானை–1129, 1130) மிகப்பெரிய சுவடியாக 727 ஏடுகளைக் கொண்டதாகக் காணப்படும் இலக்கியச் சுவடியாகும். எனினும் அது நாட்டுப்புறப்பாடல் வகையைச் சார்ந்த இலக்கியமே என்பது குறிப்பிடத்தக்கதாம். இவ்வாறே அம்மானைப் பாடல்களாக, பாகவத அம்மானை–1406, மகா பாரத அம்மானை–1411, 1238, வைகுண்ட அம்மானை–1132, அல்லி அரசாணி அம்மானை-1112, பெருமாள் அம்மானை-1124, மதுரைவீரன் அம்மானை–1443 போன்ற நூல்கள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன.

நாட்டுப்புறப் பாடல்களில் கதை, மாலை, உரைநடை போன்ற வடிவங்களில் அமைந்த சுவடிகள் சிலவும் இங்குக் காணப்படுகின்றன. நாலுமந்திரி கதை – 1494, பாரத விலாச நாடகம் 1467, விக்கிரமாதித்தன் கதை–1476, நல்லையன் காதல்–1455, ஆரவல்லி கதை – 1499, மதுராபுரி அம்பிகை மாலை-1422, குருசேத்திரமாலை–1111, குசலவ நாடகம்-1114, அரிச்சந்திரன் கும்மிப்பாட்டு-1120, காத்தவராயர் கழுவேற்றப்பாட்டு–1241 போன்ற நூல்கள் இங்குக் குறிப்பிடத்தக்க சிறப்புடையனவாம்.

மருத்துவச் செய்திகளைப் பள்ளுவடிவில் பாடிய பாடற்தொகுப்பு ஒன்று 'அகத்தியர் பள்ளு-1167' என்னும் நூலாகக் காட்சியளித்தல் சுட்டிக்கூறும் சிறப்புடையதாம்.

## பிற்குறிப்புகள் தரும் சிறப்புச் செய்திகள்

சுவடிகளில் நூல் முடிந்தவுடன் இறுதி ஏட்டில் அச்சுவடியை எழுதிய காலம், எழுதியவர் பெயர், சுவடி உரிமையாளர் பெயர் போன்ற விவரங்கள் காணப்படுவது இயல்பு. சில சுவடிகளில் இக்குறிப்புகள் சுவடியின் தொடக்கத்திலே கூட இடம் பெறுவது உண்டு. இக்குறிப்புகளில் பல சுவையான செய்திகளும், ஆய்வுக்குப் பயன்தரும் ஆழமான கருத்துகளைக் கொண்ட செய்திகளும்

காணப்படும். இக்குறிப்புகளே மொழியின் வட்டார வழக்கைப் புலப்படுத்துவன. இத் தொகுதியிலுள்ள சுவடிகளில் அமைந்த இவ்வகைக் குறிப்புகளுள் சிலவற்றை இங்குக் காண்போம்.

## தமிழ்—ஆங்கில ஆண்டுமுறை

தேவாரம்–1187 என்னும் சுவடியில்,

'கலியுகாதி வருஷம் 4989 கொல்லம் ஆண்டு 1063
சர்வதாரி வருஷம் வைகாசி மாதம் 19 ஆம் தேதி புதவாரம்
பஞ்சமி நாள் 8-42, திருவோணம் நா. 41, 43 இந்தச்
சுபதினத்தில் பகல்உதயாதி நாழிகை 6 க்குள் சிதம்பரத்தில்
கூத்தாடும் பிள்ளையார் சன்னதியில் ஸ்வகிரகத்தி
லிருந்து சபாபதி பிள்ளையவர்களினது குமாரன் சுப்பராய
பிள்ளையால் இத்திருமுறைப்புத்தகம் எழுதி முற்றுப்
பெற்றது'

என்னும் குறிப்பு காணப்படுகிறது. இது காலத்தைத் தமிழ் முறைப்படி வகுத்துக் காட்டியதாம், எந்த ஊரிலிருந்து எழுதினார்கள் என்ற செய்தியுடன் அஞ்சல் முகவரி போல எந்த வீட்டினின்று இச்சுவடி எழுதப்பெற்றது என்னும் விவரத்தையும் இக் குறிப்பு தருதல் நோக்கத் தகும்.

பிற்காலச் சுவடிகளில் ஆங்கில ஆண்டு முறையும் காணக் கிடைக்கின்றது. மருத்துவநூல் – 1056 ஒன்றில்,

'தட்சிணாமூர்த்தி சுவாமியுடைய அருளினாலே பற்பல
வைத்தியம் எழுதி முடிந்தது. முற்றிற்று. 1860 ஆம் வருஷம்
டிசம்பர் மாதம் 8 ஆம் தேதி குருவாரம் எழுதி முடிந்தது'

என்னும் குறிப்பு காணப்படுகிறது.இந்த ஆங்கிலஆண்டு முறையை மற்றொரு சுவடி (கித்தேரியம்மாள் அம்மானை – 1102) விளக்கமாகவே குறிப்பிடுகிறது.

'கர்த்தர் மனுஷாவதாரம் பண்ணின 1915 ஆம்
வருஷம் ஆகஸ்ட் மாதம் 15 ஆம் தேதி இதனடியில்
காட்டியுள்ள அம்மானையில் அர்ச்சயசிஷ்ட கித்தேரி
யம்மாளின் பேரால் இராமநாதபுரம் ஜில்லா கண்டமங்
கலத்தில் வசித்திருந்த உ. ப. ம. சவேரிமுத்துபிள்ளை
யவர்களினது புத்திரசிகாமணியாகிய எம். எஸ். மரிய
சௌரிய பிள்ளையவர்களால் பரமதாயார் உதவியை
முன்னிட்டு இவ்வம்மானை எழுதியது' இக்குறிப்பு ஆங்கில

ஆண்டு எக்காலத்திலிருந்து தொடங்குகிறது என்பதை விளக்குவதாக—இயேசுகிறிஸ்து தோன்றிய நாள்முதலாகத் தொடங்குவதாக அமைதல் நோக்கத் தக்கதாம்.

**உரைநடை - நடை**

இராமாயண வசனம்—1135 என்னும் உரைநடைச் சுவடியின் குறிப்பு உரைநடைக்கு 'நடை' என்றே பெயர் வழங்கியமையைச் சுட்டுகிறது.

'வெகுதானிய வருஷம் ஆவணி மாதம் 29 ஆம் தேதி
கோயமுத்தூர் ஜில்லா பல்லடம் தாலுகா சலக்கரச்
சலிலே இருக்கும் தேவாங்கூர் சாதி அப்பாச்சி செட்டிமகன்
இராமன் செட்டியாருக்கு மேற்படி ஊர் மருதாசல வாத்தியார்
எழுதிக்கொடுத்த **நடை** ராமாயணம். இராமசாமி கடாட்சம்
பொருந்தி நிறைந்திருக்க வேண்டியது'

என்று அக்குறிப்பு முடிகிறது. இதில் வசன இராமாயணத்தை நடைராமாயணம் என்று குறித்திருத்தல் நோக்கத் தகுவதாம்.

## பொதிகாசலமூர்த்தி

அகத்திய முனிவர் பொதிகை மலையில் தங்கியிருந்து தமிழ் வளர்த்தவர் என்பது இலக்கியங்களிற் கண்ட உண்மையாகும். இதனை உறுதிசெய்வது போல அம்மலையோடு அவர்தம் பெயரை இணைத்துப் 'பொதிகாசலமூர்த்தி' என்று ஒரு சுவடி கூறுகிறது. அகத்தியர் பூரணம் 400—1054 என்னும் சுவடி, 'பொதிகாசல மூர்த்தியருளிச் செய்த வைத்திய பூரணம் 400' என்னும் குறிப்புடன் தொடங்கி, பிற்குறிப்பில் 'மார்க்க சகாயன் படிக்கின்ற அகத்தியர் அருளிச் செய்த பரிபூரணம் 400 சம்பூர்ணம் என்று முடிகிறது. இக் குறிப்பிலிருந்து அகத்தியருக்குப் பொதிகாசல மூர்த்தி என்றொரு பெயர் இருப்பதை நாம் அறிய முடிகிறது.

## பாடலால் பிற்குறிப்பு

இவ்வகை விவரக்குறிப்புகளை அழகிய கவிதை வடிவில் சில சுவடிகள் தருகின்றன. ஆத்திசூடிப் புராணம்—1243 என்னும் சுவடியில்,

செய்யதிரு வானந்த வருஷமா தங்கன்னி
தேதியிரு பதுவெள்ளிநாள்
தேவிமக நவமியிலுத் திராடநட் சத்திரஞ்
சுகநாம யோகம்

துய்யபவ கரணமுங் கூடியசு பதினமதில்
தொல்புவிக் கரசனா னவர்கள்
சுப்பய்ய ரவர்கள்மநு நீதிரகு நாதய்யர்
அரசாளும் செங்கோன்மையில்

வையம்பு ரக்கவரு பண்டுகுல மணிபெற்ற
மன்னவன் துரைலிங்கவேள்
மற்றுமுள் ளோர்களும் கூடிசந் நிதிமுன்பு
வந்தரங்கேற் றிவைத்தார்

தையல்பெரி யம்மையுந் தான்வரங் கேட்டபடி
தருகுமித் தலமகிமையால்
சகலகுண சம்பன்ன மகராச போசனெனத்
தாரணியில் வாழிதானே.

என்னும் கவிதை பல செய்திகளை உள்ளடக்கிய விவரமாகக் காணப்படுதல் மகிழ்விற்குரியதாம்.

## சுவடியில் அவையடக்கமும் தண்டனையும்

சுவடி எழுதியவர்கள் தம் பெயரை அச்சுவடியில் குறிப்பிடுவதோடு அச்சுவடியில் தம்மால் ஏற்பட்ட பிழைகளைப் பொறுத்தருள வேண்டும் என்றும், பிழை நீக்கியும் திருத்தியும் படிக்க வேண்டும் என்றும் வேண்டுகோள் விடுத்துச் சுவடியை முடிப்பர். இவ்வழக்கம் இத்தொகுதியிலுள்ள சில சுவடிகளில் காணப்பெறுகிறது.

'இந்தக் கிருஷ்ணவிலாசம் எழுதியதினாலே எழுத்துக்குற்றம், வரிக்குற்றம், சொற்குற்றம், உயிரெழுத்துக் குற்றம், மெய்யெழுத்துகள் தப்பியிருந்தால் பெரியோர்கள் பொறுத்துக் கொள்ளவும்'. மொட்டரப் பாளையம் இராமசாமி ஆசாரிக்கு கிருஷ்ணவிலாசம் எழுதிக் கொடுத்தது இராசிபாளையம் செட்டியார் பழனியப்ப உபாத்தியாயர், கிருஷ்ணவிலாச நாடகம்-1478, என்னும் ஒரு குறிப்பு வல்லெழுத்து மிகும் இடங்களிலும், மிகா இடங்களிலும் எழுகின்ற சிக்கல் அக்காலத்துத் தொழில் முறை எழுத்தாளர்களிடையேயும் இருந்ததைக் காட்டுகிறது.

'வெகுதானிய வருஷம் ஐப்பசி மாதம் 1 ந் தேதி துதிகை
குருவாரமும் அசுவதி நட்சத்திரமும் அமிர்தயோகமும் கூடின
சுபதினத்தில் தேவாரம், திருவாசகம், திருச்சிற்றம்பலக்
கோவையார் எழுதி நிறைவேறினதை யாதொரு
நாயன்மார்கள்

வாசிக்குந்தோறும் அடியேன் மாசிலாமணிக்கு நல்லபுத்தி வரும்படி சித்திக்க வேண்டுவது' –திருக்கோவையார்-1412

'ஆகையால் இக்காதையில் மாசு இருக்குமாகில் தங்கள் சேயனைப் போல் பாதுகாத்து மன்னிக்கக் கோரினன்'
–கித்தேரியம்மாள் அம்மானை-1102

என்னுங் குறிப்புகள் எழுதியவர்களின் பிழைகளை மறந்து சுவடியைப் படிப்பவர்கள் வாழ்த்த வேண்டும் என்னும் வேண்டுகோளைக் காட்டுகின்றன.

இவ்வாறெல்லாம் எழுதி வைக்கப்பெற்ற சுவடிகள் பலருக்கும் இரவலாகக் கொடுக்கப்பெற்றன. திரும்ப வாங்கிப் பாதுகாக்கப் பெற்றன. அக்காலத்தும் சிலர் வாங்கிப் படித்த சுவடிகளைத் திரும்பக் கொடுக்காமல் ஏய்த்தனர் போலும். அவர்கள் அவ்வாறு செய்வதைத் தடுப்பதற்காகப் பின்வருமாறெல்லாம் சுவடிகளில் குறிப்புகள் எழுதி வைத்து எச்சரித்துள்ள வழக்கைச் சில சுவடிகள் காட்டுகின்றன.

'வையாபுரிப்பிள்ளை மகன் வெங்கடாசலம் பிள்ளை கைப்பட எழுதினது பெருமாள் அம்மானை. எடுத்த பேர்கள் நன்றாய் வாசித்துக் கொடுக்கவேண்டியது'
–பெருமாள் அம்மானை-1124

'சர்க்கரை ராவுத்தன் ஏடு, உடலறி விளக்கம் எடுத்தவன் பார்த்துப் போட்டுக் கொடுத்துவிடவும்'
–உடலறிவிளக்கம்–1001

'ஆங்கில வருஷம் பங்குனி மாதம் 25ஆம் தேதி தாராபுரந் தாலுகா தூரம்பாடிக் கிராமம் மடியூர் நாச்சி முத்துக் கவுண்டன் மகன் ராமசாமி அருணாசலபுராணம் படித்து முகிந்தது, முற்றும். இதை எடுத்து வாசித்துப் பார்த்தவர் ஏட்டுக்காரன் வசம் கொடுக்கவும். கொடாது போனால் ஆனைக்காலில் கட்டி கடமுடா வென்று அடிக்கவும். அதிலேயும் பயப்படாது போனால் ஊரைச் சுற்றி மண்ணுக் கூடை வைத்தடிக்கவும்'
அருணாசலபுராணம்–1438

'இந்தக் கதையை எவனாகிலும் படித்துக் கட்டி அவர் வங்கிஷம் எங்கேயிருந்தாகிலும் தேடிக்கொடுக்கவும்,

கொடுத்தவருக்கு அநேக மோட்சமுண்டு. கொடுக்காத
பேருக்கு அநேக பாவம் வந்து சேரும்'
விக்கிரமாதித்தன் கதை—1466

'அத்தி முதலி மகன் ராமணன் சுப்பிரமண்ய
மாலை, எடுத்தவன் கொடுக்காவிட்டால் அஞ்சுமணிக்
குறடாவில் கெஞ்சக் கெஞ்ச அடிக்கிறது'
சுப்பிரமணியமாலை–1451

இவ்வாறே இன்னும் சில சுவடிகள் 'கங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற பாவம் வந்துசேரும், காசி மாநகரத்தில் செய்த பாவம் வந்து பற்றும் என்று அச்சுறுத்துகின்றன. இவை யாவும் தமிழர்களின் சுவடி உடைமைச் சிறப்பையும் சுவடிக் காதலையும் பறைசாற்றுவனவே எனலாம்.

## தேவமாதா அம்மானை—காப்புப் பாடல்

தேவமாதா அம்மானை–1101 என்னும் சுவடி ஒன்று 136 ஏடுகளில் அமைந்த முழுச் சுவடியாகக் காணக்கிடக்கிறது. அச் சுவடியின் காப்புப் பாடல் புதுமையாக அமைந்துள்ளமை நோக்கற்குரியது. பொதுவாக நூல்களின் காப்புப் பாடல் கணபதி பாடலாகவோ அல்லது வழிபடு தெய்வத்தின்மேற் பாடப்பெற்ற பாடலாகவோ இருப்பதை நாம் காணலாம்.

'அந்தரம் புவியும் யாவும் அனைத்தையும் படைத்த சோதி
ஏந்தையாம் பரனை ஈன்ற ஈறிலாக் கன்னி மாதின்
சுந்தர சரித்தி ரத்தைத் தூயநற் கதையாய்ப் பாட
இந்தமா நிலத்திற் சேசு இறந்தநற் சிலுவை காப்பு'

என்னும் இப்பாடல் மதச் சின்னமே காப்பாக அமையும் என்பதைக் காட்டுவதாக உள்ளது. இவ்வம்மானைப் பாடல்கள் படித்து இன்புறும் இலக்கிய நயம் நிறைந்ததாகக் காணப்படுதலும் மகிழ்வைத் தருவதாம். ஆயின் இந்நூலின் ஆசிரியர் யார் என்பது அச்சுவடியால் அறியக் கூடவில்லை.

## அச்சு நூல்களுக்குப் பின்பும் ஓலைச்சுவடிகள்

அச்சு நூல்கள் தோன்றிய பிறகும் தமிழ்நாட்டில் ஓலைச்சுவடியில் எழுதும் பழக்கம் தொடர்ந்திருந்தமையை நாம் காணமுடிகிறது. வீரமாமுனிவரின் சதுரகராதியை மீண்டும் ஓலைகளில் எழுதிப் படித்தோர் பலராவர். அத்தகைய சுவடிகள் பல இன்றும்

உள்ளன. அச்சு நூல்களைப் பார்த்து எழுதிய குறிப்புகளும் அதில் காணப்படுகின்றன.

இத் தொகுதியிலும் ஒரு சுவடியில் அத்தகைய குறிப்பு காணப்படுகிறது. 'குசலவ நாடகம்'—1114 என்னும் நூல் அச்சு நூலைப் பார்த்து எழுதப்பட்டதாம். அச் சுவடியில் காணப்படும் பிற்குறிப்பு இதனை உறுதி செய்தல் காணத்தகும்.

'குசலவனாடகம் முற்றிற்று. இஃது திருமயிலை கன்னியப்ப முதலியாரால் அச்சடிக்கப்பட்டது' என்று முடிகிற நாடகத்தின் பின், பக். 161 விளம்பரம்' என்று துணைத்தலைப்பு ஒன்றைக் கொடுத்து இக்குறிப்பு தொடர்கிறது.

'இதனா லறிவிப்பது யாதெனில் இந்தக் குசலவனாடகம் ஏட்டுப்பிரதிகளிற் பலவிதமாகச் சிலவற்றிற் குறைந்தும் சிலவற்றில் மிகுந்தும் கூறியதையே கூறியும் இருந்தமையால் அதுகளை உத்தர ராமாயணத்திற் கொவ்வும்படியாகத் தீபிதைகளைத் திருத்தியும் தருக்கள் கண்ணிகளைப் பிரித்தும் நூதன தீபிதைகள் தருக்கள் பாடியும் வாசிப்பவருக்கு மனவுச்சாகமுண்டாகும் படியாயும், இந்த நாடகத்தைச் சொல்லிவைக்கும் உபாத்தியாயர்களுக்குச் சங்கடமில்லாமலும் தாட்டியாகப் படிக்கவும் சபைகளிற் பிரசங்கிக்கவும் இராகதாளங்களைப் பொருத்தி வைத்து அச்சிட்டோம். அதேனென்றால் கேட்பவர்கள் செவிக்கு சங்கீத நடையாகவும் கதைகள் விநோதங்களாகவும் பொருள் விள்ளும் படியாகவும் அடிகளைப் பிரித்து அடுக்குகளமைத்தும் அலங்காரஞ் செய்தோம். அதெவ்வாறென்றால் — தாயுமானவர் பாடல் பெற்ற வட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளைப் பெறாப் பேதை யறிவாளோ பேரானந்தம் — உற்றவர்க்கே கண்ணீர் கம்பலை யுண்டாகு முறாதவரே கன்னெஞ்சமுடைய ராவல்' அதுபோல தெரியாதவர்களுக்குப் பயன்சொல்லல் மிகவுமரிது' என்று குறிப்பிட்டுவிட்டு அக்குறிப்பின் இறுதி 'இப்படிக்கு அமரம்பேடு இரங்கசாமி முதலியார்...குசலவனாடகம் பிச்சம்பட்டி வையாவுரி பிள்ளை மகன் வெங்கடாசலம் பிள்ளை கைப்பட யெழுதியது. பிரசோற்பத்தி வருஷம் பிரட்டாசி மாதம் 18 தேதி' என்று முடிகிறது.

இக்குறிப்பு அச்சுநூல் பார்த்து எழுதிய விவரத்தைத் தருவதோடு, அச்சேற்றியவர் செய்த மாற்றங்களை வெளிப்படையாகக் கூறிப் பதிப்பாசிரியர் அறத்தை நிலைநாட்டுவதாகவும் காணப்படுதல் உளங்கொளத் தக்கதாம்.

இம்மூன்றாம் தொகுதியில் இலக்கணம் 2, உரைநடை இலக்கியம் 7, காப்பியம் 22, சிற்றிலக்கியம் 20, சைவத்திருமுறை 13, சோதிடம் 14, தத்துவம் 56, தலபுராணம் 7, திவ்வியப்பிரபந்தம் 92, நாட்டுப்பாடல் 24, நீதி நூல் 27, பதினெண்கீழ்க்கணக்கு 8, பல்வகை நூல்கள் 36, பிறதோத்திரங்கள் 8, மருத்துவம் 62, மாந்திரீகம் 6, மெய்கண்ட சாத்திரம் 7 என்னும் அளவில் சுவடிகள் இடம்பெற்றுள்ளன. இத்தொகுதியின் பின்னிணைப்புகளிலும் நூலாசிரியர் அகரவரிசை நூற்பெயர் அகர வரிசை, பொருட்பகுப்பு வரிசை ஆகியவற்றில் இவற்றைக் காணலாம்.

## நூற்பயனும் வாழ்த்தும்

இத் தொகுதியிலுள்ள சில சுவடிகளின் குறிப்புகள் அந்நூலின் தோற்றக் காரணத்தையும்,அதனைப் படிப்பதால் வரும் பேற்றையும் சுட்டிக் காட்டுகின்றன. அசுவ சாத்திரம் – 1126 என்னும் நூல் இவ்வாறு தொடங்குகிறது:

'நெடிய கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் குதிரை
களின் குணம், சுழி, குறி, வடு, இலக்கணம், அளவு
பிரமாணம், சாதி, நிறம், தேகபலன், நாடி, குண
வாகடம், அவிழ்தம் முறை முதலிய பொருள்கள்
அடங்கிய அசுவ சாஸ்திரம் இதுவரையில் தமிழ்ப்
பாஷையில் வழங்காமையால் குதிரைவைத்துச் சவாரி
செய்யப் பிரியமுள்ள கனவான்கள் தனவான்கள்
மற்றுமுள்ளவர்கள் குதிரை பரிச்சையில்லாதவர்
களைக்கொண்டு துர்ச்சுழி, துர்க்குறி, துர்க்குணம்
முதலிய குதிரைகளை அநேக திரவியங்கள் கொடுத்து
விலைக்கு வாங்கித் துன்பப்படுவதனால்' எழுதப் பெற்றதாகக் கூறுகிறது. இது அந்நூலின் தோற்றக் காரணத்தைக் கூறுவதாம்.

'எழுதின சொந்தச் சுவடி. நீடுழி காலம் வாழ்க'...... எழுதி முடிந்த சுவடி நீடுழி காலம் வாழ்கவேணும்' – மாந்திரீக நூல்–1415 என்று சுவடி வாழ வேண்டும் என்னும் குறிப்பை வாழ்த்தாகக் கூறும் சுவடிகளுடன் படிப்பவரை, கேட்பவரை வாழ்த்தும் சுவடிக்குறிப்புகளும் நினைந்து மகிழத் தக்கனவாம்.

'நாடு செழிக்க நன்மாரி தான் பொழிய
போதமழை பொழிந்து பூலோகந் தான்செழிக்க
பாடின பேர்கள் பாங்குடனே தான்வாழி
கேட்டிருந்த பேர்கள் கிருபையுடன் தான்வாழி

பார்த்தவர்கள் எல்லோரும் பாங்குடனே தான்வாழி
சூழ்ந்தசபை தான்வாழி தொல்புவியோர் தான்வாழி
ஆல்போல் தழைத்து அருகதுபோல் வேரூணி
மூங்கிற்போலச் சுற்றம் முசியாம வாழியதே'
—அபிமன்னன் சுந்தரிமாலை—1470

'இப்பேர்க் கொத்த புண்ணிய கதைகளை யார் படித்தாலும் ஒருவர் படிக்க ஒருவர் கேட்டாலும் நவக்கிரகங்கள் குரூரஞ் செய்ய மாட்டாது' —கிருஷ்ண விலாச நாடகம்—1478

'இந்த நாலுமந்திரி கதையை யாதாமொருத்தர் எழுதிப் படித்தோரும் இந்தக் கதையை இன்பமாகக் கேட்டவர்களும் வெகுசந்தோஷத்துடனே படிக்குமிடத்திலே வேறே துன்பமில்லை. கற்றோர் கேட்டோரும் இப்படிக் கொத்த பேரெல்லாம் அறிவும் புத்தியும் மதியும் தீர்க்காயுசாய் தயவும் பெருமையும் கல்வியுஞ் செல்வமும் யோகமும் ஞானமும் தவமும் ஜபமும் உண்டாகி எதிராளிக்கு உத்திரப்பிரதி உத்திரமுஞ் சொல்லி இப்படிக்கொத்த பேர்களையெல்லாம் அம்பாளுடைய கடாட்சத்தினாலே தண்டாயுதபாணி ரட்சிக்கவும்' —நாலுமந்திரிகதை—1494

## பெயர் தெரியா நூல்களும் பிழைதிருத்தமும்

இத்தொகுதியில் நூற்பெயர் தெரியாத நூல்களும் ஆசிரியர் பெயர் தெரியாத நூல்களும் கணிசமான அளவில் இடம்பெற்றுள்ளன. அவற்றை இனங்காட்ட வேண்டி அந் நூற் பொதி செய்திகளை — பொருள்களை உட்கொண்ட தலைப்புகளைத் தொகுப்பாசிரியர் வழங்கியுள்ளனர். மருத்துவச் செய்திகள், மருத்துவக் குறிப்புகள், நோயும் மருந்தும், சோதிட நூல், சோதிடக் குறிப்புகள் எனப் பொதுப்பட அத்தலைப்புகள் இலங்குவதைக் காணலாம். ஆசிரியர் பெயர் தெரியாத நூல்களுக்கு ஆசிரியர் பெயர் குறிபிடப்படவில்லை.

எவ்வளவு நுட்பமாக ஆழ்ந்து கவனித்து வந்த போதும் அச்சுப் பிழைகள் ஏற்பட்டிருப்பது தவிர்க்க இயலாததாகி விட்டது. அப்பிழைகளைச் சுட்டிக் காட்டத் தவறினால் நூற் பாடங்களிலும், எண் குழப்பங்களிலும் ஆய்வாளர் சிக்கித் தவிப்பர். எனவே அவற்றை முறையாக எடுத்துக் காட்ட வேண்டுவதைப் பெருங் கடமையாகக் கருதி இத்தொகுதியின் இறுதியில் பிழை திருத்தப்பட்டியல் ஒன்றும் இணைக்கப்பெற்றது. ஆய்வாளர் இதனைப் பயன்படுத்தி நூலைச் செப்பமாக்கிக் கொள்ள அன்புடன் வேண்டுகிறேன்.

## நன்றியுரை

ஓலைச்சுவடித்துறையின் நூலக வளர்ச்சிக்கும் சுவடி விளக்க அட்டவணைத் தொகுதிகளுக்கும் மூலகாரணமாக விளங்குவது தமிழன்பர்களின் நல்லெண்ணமே ஆகும். இத்துறைக்கு அவர்கள் தமிழ்ச் சுவடிகளை அன்பளிப்பாக — நன்கொடையாக வழங்கா திருப்பின் சுவடி நூலகம் ஏது? சுவடி அட்டவணைதான் ஏது? எனவே அவர்களுக்கு முதற்கண் நன்றி செலுத்துவதே சிறப்பாகக் குறிக்கத்தக்கதாம்.

தமிழ்ப் பல்கலைக் கழக ஓலைச்சுவடித்துறைக்குத் தமிழ்ச்சுவடிகளை அன்பளிப்பாக வழங்கியவர் பலராவர். திருக்கோயில்கள், திருமடங்கள் போன்ற சமய நிறுவனங்கள் முதலாகத் தனிப்பட்ட புலவர் குடும்பத்தினர்வரை இக்கொடையில் இடம்பெற்றுள்ளனர். ஓலைச் சுவடிகளுக்காகத் தனிப்பட்ட ஒரு துறையை உருவாக்கிச் சிறப்பித்திருக்கும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின்பால் அவர்கள் நம்பிக்கை கொண்டு தங்களிடமிருந்த சுவடிகளின் பாதுகாப்பு, பராமரிப்பு ஆகியவற்றுடன் அவை வெளிவர வேண்டுமே என்ற அக்கறையில் அவற்றை அன்பளிப்பாக வழங்கியுள்ளனர். அவர்களின் நம்பிக்கையை உறுதி செய்யும் வண்ணம் இத்துறை அவர்களிடமிருந்து பெற்ற தமிழ்ச் சுவடிகளை அறிவியல் முறைப்படி தூய்மை செய்து, பூச்சி நீக்கம் செய்து, காப்பு எண்ணெய் பூசிப் பாதுகாப்பதுடன் இன்று அவற்றின் விளக்க அட்டவணையையும் வெளியிட்டு மகிழ்கின்றது. பின்வரும் அன்பர்கள் இத்தொகுதியிலுள்ள சுவடிகளை அன்பளிப்பாக வழங்கியவர்களாவர். அவர்கள் அனைவருக்கும் ஓலைச்சுவடித் துறை நன்றியையும் பாராட்டையும் தெரிவிப்பதோடு அவர்கள் பெயரை இங்குச் சுட்டுவதில் பெருமையும் பூரிப்பும் கொள்கிறது.

### சுவடி நன்கொடையாளர் பட்டியல்

(எண்கள் : சுவடிகளின் தொடர் எண்களைக் குறிக்கின்றன)

அடிகளாசிரியர் திரு சித்தநாதர் ஆதீனம், குகையூர்,
தெ. ஆ. மாவட்டம்-949, 950, 1100-1102

அப்துல் குத்தூஸ் ஏ. துவரங்குறிச்சி, திருச்சி மாவட்டம்-946, 947

ஆறுமுகப் பாண்டி, அரசினர் பொறியியற் கல்லூரி,
திருநெல்வேலி 7—948

இதயதாசன், புலவர் கோட்டை, நாகூர்-1105

இராசாங்கம், டி., நரசிங்கம் பேட்டை, தஞ்சை மாவட்டம்:
788–790

இராமராசன், எஸ்.கே., வேலூர், சேலம்மாவட்டம், 778-787, 951

கணேசன், எஸ்., காரைக்குடி-2. 830, 831

கந்தசாமி. து., சின்னசேலம், சேலம் மாவட்டம். 953

கோபால், ச., வடமாலபுரம், சிவகாசி வழி. 1104

சம்பந்தம். டி., மாம்பலம், சென்னை. 826, 827

சமூகவியல் துறையினர், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.
835-858

சாமி. பி.எல்., பாண்டிச்சேரி. 952

சிவகாமசுந்தரி, பேராசிரியர், அவிநாசிலிங்கம் மனையியற்
கல்லூரி, கோவை. 860

சுப்பையா சேர்வை. சி., வையாபுரிப்பட்டி, இராமநாதபுரம்
மாவட்டம். 791-805, 954-959

சோனை முத்துப்பிள்ளை, மருதுபாண்டியன் நகர், மதுரை. 1099

தங்கவேலு. எம்., கூடன் குளம், திருநெல்வேலி மாவட்டம்.
1106-1109

திருவரங்கம் அருள்மிகு அரங்கநாதர் திருக்கோயில். 961–1098

தெய்வசிகாமணி. எம்., குமரன் கோட்டை. ஈரோடு. 861–863

நாச்சிமுத்து. எஸ்.சி., புதுப்பை, பெரியார் மாவட்டம். 1110–1188

பாஸ்கரதாஸ். ஈகோ., பேராசிரியர், பூ. சா. கோ. கலைக்கல்லூரி,
கோவை. 808–817

மகாலிங்கம். சி., தெற்குவீதி, திருவிடைமருதூர்,
தஞ்சை மாவட்டம். 1103

முருகன். எஸ்., பேராசிரியர், அரசினர் கலைக் கல்லூரி,
சித்தூர், கேரளா. 806, 807

மெய்யப்ப சுவாமிகள் என்னும் ஆதியப்ப நாயுடு, மேல்பாதி,
தஞ்சை மாவட்டம். 832–834

வேங்கடராமையா. கே. எம்., திருப்பனந்தாள்,
தஞ்சை மாவட்டம். 828, 829, 864, 865

ஜெகதீஸ்வரன். எஸ்., மஞ்சக்குப்பம், கடலூர். 818–825

ஜோஸப். ஏ., கீழவாசல், தஞ்சாவூர். 859

ஸ்ரீவாலையானந்த சுவாமிகள் திருமடம், திருப்பூந்துருத்தி,
தஞ்சை மாவட்டம். 866–945, 960

தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணையின் தொகுப்புப்பணி மற்றும் பொருள் அடக்க அமைப்பினைத் துறையினருடன் விவாதித்து இந்த வகையில் உருவாக்க, தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் முதுமுனைவர் வ. அய். சுப்பிரமணியம் அவர்கள் பெரிதும் துணைநின்றார்கள். அடிப்படை நிலைகளை அமைத்துத் தந்ததோடு அவ்வப்போது ஊக்கிவந்த அப்பெருந்தகையார்க்கு ஓலைச் சுவடித்துறையின் நன்றி என்றும் உரியதாகும்.

தாம் பொறுப்பேற்றுக்கொண்ட நாள் முதலாக இத்திட்டத்தின் வளர்ச்சி சிறப்பாக அமையவேண்டி, அவ்வப்போது ஊக்கியும் ஆணை வழங்கியும், பாராட்டியும் துணை நின்றவர் மாண்புநிறை துணைவேந்தர் முனைவர் ச. அகத்தியலிங்கம் அவர்கள் ஆவார்கள். அவர்கள் தம் பல்வேறு பணிகளுக்கிடையே இத்தொகுதிகளை உற்று நோக்கிச் சிறந்த அணிந்துரை ஒன்றையும் வழங்கியிருக்கிறார்கள். அவர்களின் அயராத அன்புக்கும் ஆக்கத்திற்கும் இத்துறை பெரிதும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையதாகும்.

தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணைத் தொகுதிகளின் வெளியீட்டுப்பணி, தில்லி தேசிய ஆவணக் காப்பக நல்கைத் திட்டமாக நடைபெற்றுவருகிறது. இத் திட்டத்திற்காக ஆவணக் காப்பகம் ரூ. 1,25,000/- நல்கை வழங்கி ஊக்குவித்தது. எஞ்சிய செலவைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் ஏற்றுக்கொண்டது. நல்கை வழங்கிச் சிறப்பித்த தில்லி, தேசிய ஆவணக் காப்பக இயக்குநர் அவர்களுக்கு இத்துறை நன்றி பாராட்டும் கடமையுடையதாம்.

நல்கை பெறுவதற்கான திட்ட வரைவினை முறைப்படி அமைக்க ஆணை வழங்கியும், உடனிருந்து ஊக்கியும், திருத்தியும், தொகுப்புப் பணியினைத் திறம்படக் கண்காணித்தும் வந்தவர் முன்னாள் சுவடிப்புலத்தலைவர் பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளையவர்கள் ஆவார். அவர்தம் சுவடிக்காதலும் பயிற்சியுமே இத்தொகுதிகளுக்கு மூலமாக அமைந்தன. தாம் பொறுப்பில் இருந்த காலம்வரை, ஏன் அதற்குப் பின்பும் இத்தொகுதிகள் வெளிவருவதில் ஆக்கமும் ஊக்கமும் அளித்து அச்சுப்பணியை உற்றுநோக்கி உயர்த்தியவர் அவரே என்றால் அது மிகையாகாது. முதல் தொகுதிக்கு மிகச் சிறந்த ஆய்வு முன்னுரை ஒன்றை அவர் வழங்கியிருக்கிறார். அந்த ஆய்வு முன்னுரை சுவடியியலை ஒட்டுமொத்தப் பார்வையில் நம் கண்முன் சித்திரமாக்கும் அரிய உழைப்பைக் காட்டுவதாம். அம் முன்னுரை இத்தொகுதிகளுக்குப் பெருஞ்சிறப்பளிப்பதாகும். அவர்தம் இனிய வழிகாட்டலுக்கு என் நன்றியும் வணக்கமும் என்றும் உரியன.

முன்பே குறித்தவண்ணம், இத் தொகுதியின் தொகுப்புப் பணியை மேற்கொண்டும் இடையிடையே என்னுடன் அச்சுப் படிவங்களைத் திருத்தி உதவியும் சிறக்கப் பணி புரிந்தவர்கள் இத் துறையின் விரிவுரையாளர் முனைவர் வே. இரா. மாதவனும் தொழில்நுட்ப உதவியாளர் புலவர் ப. வெ. நாகராசனும் ஆவர். அவர்தம் தொடர்ந்த உழைப்பு என்றும் பாராட்டும் சிறப்புடைய தாம். குறிப்பாக முனைவர் வே. இரா மாதவன் அவர்கள் தாம் நியமனம் பெற்று இத்துறையில் சேர்ந்த நாள் முதலாக இப்பணி யில் கண்ணுங்கருத்துமாக உழைத்தமை பெரிதும் பாராட்டற் குரியதாம். அவர் தொகுப்புப் பணியில் ஈடுபட்டதுடன் அட்ட வணைகள் இணைப்புகள் ஆகியவற்றை உருவாக்கியும் திருத்தியும் பெரிதும் உதவினார். இவர்களின் அயராத உழைப்பிற்கும் ஊக்கத்திற்கும் நான் நன்றியையும் பாராட்டையும் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

இத்தொகுதியை நல்லமுறையில் அச்சிட்டுத் தந்தவர்கள் புதுக்கோட்டை சர்மா சானிடோரியம் அச்சகத்தினர் ஆவர். அச்சகத்தாரின் ஒத்துழைப்புக்குக் குறிப்பாக திரு. வாசுதேவன் அவர்களுக்கு என் நன்றியும் பாராட்டும் உரியன.

இந்தத் தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை தொடரும் பணி யாகும். இத்துடன் நான்காம் தொகுதியும் வெளிவந்திருக்கின்றது. இத்தொகுதிகள் தமிழ் ஆய்வாளர்களுக்கும், மொழிநூல், வரலாறு முதலியவற்றை ஆராய்வோருக்கும் குறிப்பாகச் சுவடி ஆய்வோருக் கும் பெரிதும் பயன்படவிருக்கின்றன. இத்தொகுதியின்கண் காணப்பெறும் பிழைகளையும் வேண்டிய திருத்தங்களையும் அறிஞர் உலகு சுட்டிக் காட்டுமேல் அவர்களுக்குப் பெரிதும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையேன் ஆவேன்.

தமிழ்ப் பல்கலைக் கழகம்,<br>
தஞ்சாவூர்,<br>
நவம்பர் 10, 1987.

**தி. கோ. பரமசிவம்**

# மாற்றுச் சுவடிகள் காணுமிடங்கள்.

1. தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.
2. அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர்.
3. மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.
4. திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.
5. பிற பல்கலைக் கழகங்கள்
6. ,, ,,
7. ,, ,,
8. தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி, பேரூர், கோவை.
9. பிற கல்லூரிகள்
10. ,, ,,
11. ,, ,,
12. கலைமகள் கல்வி நிலையம், ஈரோடு.
13. பிற கல்வி நிலையங்கள்
14. ,, ,,
15. ,, ,,
16. அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை.
17. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
18. கீழ்த்திசைச் சுவடி நூலகம், காரியவட்டம், திருவனந்தபுரம்.
19. இந்திய தேசிய நூலகம், கல்கத்தா.
20. பிறஅரசு நிறுவனங்கள்
21. ,, ,,
22. ,, ,,
23. ,, ,,
24. ,, ,,
25. டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூலகம், திருவான்மியூர், சென்னை.

26. தமிழ்ச் சங்கம், மதுரை.

27. மகாராஜா சரபோஜி சரஸ்வதி மகால் நூலகம், தஞ்சாவூர்

28. பிரஞ்சு இந்திய நிறுவனம், பாண்டிச்சேரி.

29. பிற சுவடி நூலகங்கள்

30. ,, ,,

31. திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை.

32. மௌன சுவாமிகள் திருமடம், சிதம்பரம்.

33. கௌமார மடாலயம், திருவாமாத்தூர், விழுப்புரம்.

34. முதல்
45. வரை } பிற மடங்கள்.

46. இந்தியா ஆபீஸ் லைப்ரரி, லண்டன்.

47. வெல்கம் மெடிகல் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட், லண்டன்.

48. பிரிட்டிஷ் மியூசியம், லண்டன்.

49. தி லைப்ரரி ஆப் தி ராயல் ஏசியாடிக் சொசைட்டி, லண்டன்.

50. தி லைப்ரரி ஆப் தி ஈடன்பர்க் யூனிவர்சிடி, லண்டன்.

51. நேஷனல் லைப்ரரி ஆப் ஸ்காட்லான்ட், எடின்பரோ, ஸ்காட்லான்ட்.

52. தி ஹன்டேரியன் லைப்ரரி ஆப் தி க்ளாஸ்கோ யூனிவர்சிடி, க்ளாஸ்கோ, ஸ்கட்லான்ட்.

53. ஜான் ரைலாட்ஸ் லைப்ரரி, மான்செஸ்டர், இங்லான்ட்.

54. தி லைப்ரரி ஆப் தி கேம்பிரிட்ஜ் யூனிவர்சிடி, கேம்பிரிட்ஜ்.

55. பாட்லியன் லைப்ரரி, ஆக்ஸ்போர்டு.

56. தி லைப்ரரி ஆப் தி ஸ்கூல் ஆப் ஓரியண்டல் அண்டு ஆப்பிரிக்கன் ஸ்டடீஸ் ஆப் தி லண்டன் யூனிவர்சிடி, லண்டன்.

57. தி லைப்ரரிஸ் ஆப் தி ட்ரினிடி காலேஜ், டப்ளின், அயர்லாண்ட்.

58. ஃபிரான்க் ஸ்டேட் ஆர்க்கிவ்ஸ், ஹாலே, ஈஸ்ட்ஜெர்மனி.

59. தி லைப்ரரிஸ் அட் டூபிங்கன் அண்டு மார்பர்க், பாரிஸ், வெஸ்ட் ஜெர்மனி.

60. பிப்பிளியோதிக் நேஷனல், பாரிஸ், பிரான்ஸ்.

61. நேஷனல் மியூசியம், கோபன்ஹேகன், டென்மார்க்.

62. தி ராயல் லைப்ரரி, கோபன்ஹேகன், டென்மார்க்.

63. பிப்பிளியோதிகா அபோஸ்லிகா வேடிகானா, வாடிகன் சிடி, ரோம்.

64. தி லைப்ரரி ஆப் தி ஜெர்மன் ஓரியண்டல் சொசைடி, ஹாலே, ஈஸ்ட்ஜெர்மனி.

65. லுதரன் மிஷன் சர்ச் மியூசியம் லிப்சிக், ஈஸ்ட்ஜெர்மனி.

66. ஸ்டேட் அண்டு யூனிவர்சிடி லைப்ரரி, ஹம்பர்க், வெஸ்ட் ஜெர்மனி.

67. அப்சாலா யூனிவர்சிடி லைப்ரரி, அப்சாலா, ஸ்வீடன்.

68. எதினோகிராபிகல் மியூசியம், ஸ்டாக்ஹோம், ஸ்வீடன்.

69. தி லெனின் ஸ்டேட் லைப்ரரி மாஸ்கோ, யு.எஸ்.எஸ்.ஆர்.

70. தி லைப்ரரி ஆப் தி லெனின்கிராட் யூனிவர்சிடி, லெனின் கிராட்.

71. தி லைப்ரரி ஆப் தி ஓரியண்டல்இன்ஸ்டியூட் ஆப் தி யு.எஸ். எஸ். ஆர்அகாடமி ஆப் சைன்சஸ், லெனின்கிராட்.

குறிப்பு:

சுவடி விவர அட்டவணையில், ஒவ்வொரு நூலின் கீழேயுள்ள **6. மாற்றுச்சுவடிகள் காணுமிடம்**—என்னும் பகுதியில், முதலில் மேற்காணும் நூலக வரிசை எண்ணும், பின்னர் அந்நூலகத்தில் அதே பெயரில் காணப்பெறும் நூல்களுக்கான எண்களும் கொடுக்கப்பட்டுள்ளமை காண்க.

# தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை

## மூன்றாம் தொகுதி

### 1001. உடலறி விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. தொடர் எண் : 778
ஆ. பொருட் பகுப்பு எண் : ட/159

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நூலாசிரியர் : ..........
ஆ. நூற்பெயர் : உடலறி விளக்கம்
இ. பொருள் : தத்துவம்
ஈ. வடிவமும் அளவும் : செய்யுள் 102

3. தோற்றக் கூறுகள்

அ. ஏடுகளின் எண்ணிக்கை: 50 ஏடு; 100 பக்கம்.

ஆ. ஏடுகளின் நீளம், அகலம்: நீளம் 17 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ,

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளதா : இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. பக்கத்திற்கு எழுதப்பட்ட வரி : ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.

உ. எழுத்து நிலை : தெளிவான கையெழுத்து.

ஊ. சுவடியின் நிலைமை : நல்ல நிலை.

எ. முழுமையா அல்லது குறையா : முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. நூலின் தொடக்கம்

விடமருந்தி அமுதுண்ட விமல நாதன்
விரிசடையன் மதிசூடி மழுமான் ஏந்தி
விடைமருவும் பரைபுதல்வன் ஆனை முகவன்
இளவலரி மருகனீ ராறு தோளன்
குடவயிறன் தனக்கிளைய குமரன் கந்தன்
குகனைமற வாமல்நெஞ் சகமே பூண்டு
உடலறியும் விளக்கமென உரைத்தேன் அன்பால்
உதவியருள் புரியுமயன் தேவி காப்பாம்.

ஆ. நூலின் முடிவு

நேராத பாவிக்கு வாதம் ஏது
நிலையாத மனத்தோர்க்கு ஞானம் ஏது
பாராத மூடருக்கு அறிவங்கு ஏது
பராபரையை அறியார்க்குப் பலன்தான் ஏது
காராத சீடனுக்குக் குருதான் ஏது
கைகாட்டாத் தொழில்முறைக்குக் கரையங்கு ஏது
தீராத கருமிக்கு அறிவங்கு ஏது
செகசாலம் ஆடுகிற துறையிது ஆமே. (102)

இ. பிற்குறிப்பு

சுபகிருது வருஷம் மார்கழி மாதம் 13ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை அசர்மகரீபுலே எழுதி முகிந்தது உடலறி விளக்கம். சர்க்கரை ராவுத்தன் ஏடு. எடுத்தவன் பார்த்துப் போட்டுக் கொடுத்து விடவும்.

5. பிற செய்திகள்

........................

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

........................

7. வெளியீட்டுச் செய்திகள்

.........  ............

குறிப்பு : தொடர் எண் : 779 முதல் வரும் நூல் வரிசை ஒவ்வொன்றிலும் உள்ள 7 பகுதிகளுக்கான உட் தலைப்புகள் விளக்கமாகக் கொடுக்கப்படவில்லை. மாதிரிப் படிவத்திற்குத் தொடர்எண்: 778 காண்க.

## 1002. ஞானக்கும்மி

1. நூலகக் குறிப்புகள்

   அ. 779

   ஆ. ற/156

2. உள்ளீடு : நூல் விவரம்

   அ. .........

   ஆ. ஞானக்கும்மி

   இ. பல்வகை நூல்கள்

   ஈ. செய்யுள் 67 கண்ணி

3. தோற்றக் கூறுகள்

   அ. 14 ஏடு; 28 பக்கம்.

   ஆ. நீளம் 22 செ.மீ.; அகலம் 3 செ.மீ,

   இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. சுமாரான நிலை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்மேவு ஞான வடிவான — பர
தேசிகன் சற்குரு தன்னருளால்
பார்மீதில் கும்மித் தமிழ்பாடச் — சிவ
பாலன் கணபதி காப்பாமே. (1)

ஆ. முடிவு

ஏழை அநாதை என்றவர்க்கு — அன்னம்
மிகுந்த பேர்கள் கொடுக்கவேணும்
நாளையென்று சொல்லல் ஆகாதே — இப்ப
நான்மறை வேதமும் . . . . . . . . . . (67)

5. பிற செய்திகள்

சுவடியின் கடைசிப் பக்கத்தில் காதுக்கு மருந்து ஒன்று உள்ளது.

## 1003. தேவி மந்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 780

ஆ. மு/26

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. கொங்கணர்

ஆ. தேவி மந்திரம்

இ. மாந்திரீகம்

ஈ. செய்யுள் 13

## 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.

ஆ. நீளம் 22 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. கிறுக்கலான கையெழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பாரப்பா வாலைதன்னை பூசை பண்ணப்
பாங்காக நவகோணம் இட்டு நன்றாய்ச்
சேரப்பா இருவளையம் வாசல் நாலும்
சிறப்பாக ரீங்காரம் இட்டு நன்றாய்க்
காரப்பா கீழ்வாசல் கணபதியும் கந்தன்
கருணையுடன் செயவீர வாகு தேவர்
ஆரப்பா அறைகளிலே கீழே தொட்டு
ஆகாரம் உடன்உகாரம் சகாரம் போடே. (1)

ஆ. முடிவு

கூடியங்கே அவரவரைக் கண்டு பேசி
கூசாமல் அனிநிதங்கள் குமரி யாகும்
தேடியெங்கும் இந்தமுறை கிடையாது அப்பா
தேவிமுதல் சிவனுமங்கே திருநடனம் செய்வார்
நாடிநின்றே வாடாமல் என்தாய் பூசை
நல்லவர்க்கு இயையுமடா கருமிக்கு இல்லை
பாடினேன் பதின்மூன்று பாட்டுக் குள்ளே
பரைபூசை சிவபூசை பணிந்து செய்யே. (13)

# 1004. தேவி தோத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 781

ஆ. த/23

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. தேவி தோத்திர அகவல்

இ. பிற தோத்திரங்கள்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு; 32 பக்கம்.

ஆ. நீளம் 18 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூவினில் வாழும் பொன்னே மின்னே
மூவர்கள் முதல்வி தேவர்கள் தலைவி
சதுர்மறை யிறைவி சகலமு முணர்வி
பதுமல ரடிவி பரசிவ நிறைவி
மரகத வடிவி வரைதனி லுறைவி
காதல் கமலி கருணையின் நிமலி

ஆ. முடிவு

தவறாம லெந்தன் கவலை யொழித்து
தீர்த்தென் பிறவி திருத்தா ளளித்துக்
கார்த்துக் காராய் கடைபோகக் காராய்
கருச்சுற் றுவலை கார்த்து ரட்சித்து.

## 1005. கந்தர் சஷ்டி கவசம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 782—1

ஆ. த/24

அ. தேவராய சுவாமிகள்

ஆ. கந்தர் சஷ்டி கவசம்

இ. பிற தோத்திரங்கள்

ஈ. செய்யுள்

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. 11 ஏடு; 21 பக்கம்.

ஆ. நீளம் 15 செ. மீ.; அகலம் 2 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

3. தோற்றக் கூறுகள்

அ. தொடக்கம்

சஷ்டியை நோக்க சரவண பவனார்

— — — —

பாதமு ரெண்டு பணிமணிச் சதங்கை
கீதம் பாடக் கிங்கணி யாட
மயில்நடஞ் செய்யும் மயில்வா கனனார்
கைவே லாலெனைக் காக்கவென் றுகந்து

ஆ. முடிவு

உயர்கிரி கனக சபைக்கோ ரரசே
மயில்நட மிடுவோர் மலரடி சரணம்
சரணம் சரணம் சரவண பவஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1006. சனீசுவரன் தோத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 782–2
ஆ. த/24

2. உள்ளீடு; நூல்விவரம்

அ. . . . . . . . . . .
ஆ. சனீசுவரன் தோத்திரம்
இ. பிறதோத்திரங்கள்
ஈ. செய்யுள் 10

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்
ஆ. நீளம் 15 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. நல்ல நிலை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதிவே தாந்தமுத லாகி நின்ற
அஞ்செழுத்து முப்பொருளாயி அயில மாதே
சோதிதனை அம்பலத்தி லாடு கின்ற
சுடரொளியே நீபிடித்த தோசத் தாலே
பாதிமதி சடைக்கணிந்து அரவம் பூண்டு
பதியேந்தி சுடலைதனை யாடி யாடி
சாதிதனை கடன்வேடன் யெச்சில் தின்று
சனியனே காகமேறும் தம்பிரானே. (1)

ஆ. முடிவு

காகவா கனமேறு சனியின் கீர்த்தி
காவியங்கள் பத்தும்பதி னொன்றும் பாட
ஆகமகிழ்ந் தேதினமுங் கேட்ட பேர்கள்
அதைப்படித்து அநுதினமும் உதைப்பொற் பாதமும்
நேகம தாய்நினைத்த காரி யங்கள்
சீக்கிரமாய்க் கைகூடும் இனிமே லாகி
கோகன மறந்தகூ றுளுமிகப் பெற்று
சனியனைப்போ லொருவரில்லை சதிசெய் வாயே,

## 1007. அட்டாட்சரம் பிறப்பு

1. நூலகக் குறிப்புகள்

அ. 783—1

ஆ. ட/160

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. . . . . . . . .

ஆ. அட்டாட்சரம் பிறப்பு—ஐம்பத்தொரு அட்சரம் தெரிய

இ. தத்துவம்

ஈ. அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு: 10 பக்கம்.

ஆ. நீளம் 34 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஓங்கார மாகுமுதல் ஊமைதனிற் பிறக்கும்
ஓரெழுத்தில் ஈரெழுத்து மாதித்து நிற்கும்
நீங்காத உவ்வெழுத்தில் அவ்வுந் தோன்றி
நிறைந்தஅவ்வில் யவ்வெழுத்தும் நேராய்த் தோன்றும்
பாங்கான யவ்வெழுத்தில் வவ்வுந் தோன்றி
பகர்ந்தவவ்வில் சிவ்வெழுத்தும் பரையுந் தோன்றி
வாங்காத சிவ்வெழுத்தில் மவ்வுந் தோன்றி
மவ்வெழுத்தில் நவ்வெழுத்தே மலரும் பூவே.

ஆ. முடிவு

தோற்றியவா னதுதூணி வட்டந்தொடு மிதழ்முன்
றேற்றியதோர் குணம்வவ் வாம்பறம் பயம்ஆற்று
மேபிரியச்
சாற்றியவங்கு மனோன்மணி தேவியீ சானமுகம்
போற்றியவவ் வறியுஞ் சதாசிவ பூரணமே.

## 1008. ஆறாதாரக் கட்டளை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 783-2
ஆ. ட/160

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. ஆறாதாரக் கட்டளை
இ. தத்துவம்
ஈ. அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு: 11 பக்கம்
ஆ. நீளம் 34 செ. மீ.; அகலம் 2·5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியே
அந்தித்த வண்ணமி தாரு மறிந்திலார்
அந்தித்த வண்ணம் அறிவா லறிந்தபின்
தந்தைக்கு முன்னே மகன்பிறந் தானே.

ஆ. முடிவு

மூல மீதினில் - பக்கத்திரு சுடர்-முற் கரி-நான்முகன் - குண்டலி-நாவி-நாவியுன் மாலுருத்திரன் - நெஞ்சில் கரத்தினில்

மன்றுமீசன்-சதாசிவன். நெற்றியில்-கோல நாசிநுனியில் விந்து-நாதமாங் கூறுந் தன்னுடலில் - பராசத்தியா மேல் - வாசல் - ஒளியே-வெளித்திறள்-வீடரமானந்த நடனந்தாமே.

ஆறாதாரக் கட்டளை முற்றும்.

இ. பிற்குறிப்பு

'அப்துல்லா சாயபு உடையது'

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1009. அகத்தியர் குருநாடி

1. நூலகக் குறிப்புகள்

அ. 784
ஆ. ல/192

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் குரு நாடி
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 61

3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு; 24 பக்கம்.
ஆ. நீளம் 34 செ.மீ.; அகலம் 2.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது
ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரிகள்
உ. தெளிவான எழுத்து.
ஊ. நல்ல நிலை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பெரு முனிவர் தொழும்
தெரிந்துபின் னுலகத் தோர்கள்
பேர்பெறக் கருவி லுற்ற
பிணிபல துணர்ந்து தேர்ந்து
ஊர்பல நாடிக் கெல்லாம்
உயர்பெரு நாடி மூன்றில்
சேர்குரு நாடி நேர்மை
செயலுடன் கூறு வரே. (1)

ஆ. முடிவு

தொண்டையிலே சோறிறங்கும் குரலைப் போலே
சூட்சமுடன் கைவைத்துச் சுகமாய்ப் பார்க்கில்
கொண்டிளகும் வாதமது தானே கோழி
குரல்போல வேநடக்கில் வாத மாகும்
மண்டையிலே கைவைத்தாற் போலே தானும்
வகையுடனே தெரிப்பதுதான் பித்த மாகும்
சுண்டையிலே தவளைதனில் பாம்பு சென்று
சுருதியுடன் தின்றாற்போல் தோன்றுஞ்சி
லேத்துமம். (61)

## 1010. அட்டாங்க யோகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 785
ஆ. ற/46

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . .
ஆ. அட்டாங்க யோகம், விதி.

இ. பல்வகை நூல்கள்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 40 பக்கம் வரும்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு; 30 பக்கம்.

ஆ. நீளம் 22 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8, 9, 10 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. ஏடுகள் ஆங்காங்கே சிதைவு, எனினும் பொதுவாகச் சுமாரான நிலை,

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

இயமம், நியமம், ஆசனம், பிரணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி—ஆக இந்த எட்டுக்கும் விபரம் சொல்லும்படி. இனி, இயமமாவது பத்து விதமாயிருக்கும். அதேதென்னில் அயீங்கிசை, சத்தியம், பிறசேதயம், பிரமசரியம், தயை, ஆட்சேபம், க்ஷமை, திறுத்தி, மிதாகாரம், சவுசம் ஆக இயமம் 10.

ஆ. முடிவு

ஆருட சமாதியாவது – தோய்ந்த வாசனையாகிற விகற்பங்களைச் சற்றும் மனதிலே எண்ணிக்கொண்டிராமல் எந்நேரமும் அத்துவித நிலையாகச் சஞ்சாரத்திலும் சமாதி விட்ட பின்புந் தோய்ந்த வாசனை வந்து முன்னிற்கக் கண்டு அசிங்கிதைப் படாமல் நாகாவு செய்துதள்ளி மனத்தை...... நிலை வாசனையின் வழியே போகாமல் நிறுத்தித் தலைகிழிந்து போற தோய்ந்த வாசனைகள் வந்தாலும் சற்றும் ஏறிட்டுக் கொள்ளாமல் அக்ஷணமே மறுத்து வேசிக்க வடித்துத் தோய்ந்த வாசனையாகிற காற்றுப் பதினாயிரம் வீசினாலும் மலைபோல நின்று சற்றும் கலக்கமில்லாமற்தோய்ந்த நிலையைச் சாதாரணமாகத் தள்ளி அத்துவிதத்தைப் பொருந்தியிருக்கின்றதே ஆருட சமாதி என்று பெயர்.

அட்டாங்க யோக விபரம் முற்றும்.

## 1011. வீட்டு நெறிப்பால்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 786
ஆ. டீ/161

### 2. உள்ளீடு; நூல் விவரம்

அ. ஔவையார்
ஆ. வீட்டு நெறிப்பால்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 180

### 3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு; 20 பக்கம்.
ஆ. நீளம் 22 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. ஏட்டின் வலது மேற்புறம் சற்றே சிதைவு. பொதுவாகச் சுமாரான நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியாய் நின்ற அறிவின் முதலெழுத்
தோதிய நூலின் பயன்.

பரமாய சத்தியுட் பஞ்சமா பூதந்
தரமாகத் தோற்றும் பிறப்பு.

ஆ. முடிவு

மண்ணிற் பிறந்த வு யிர்க்கெல்லா மாதியாய்
விண்ணகமே யாகு மிடம்.

தோற்ற நிலைவேறாய்த் தொல்லைமுத லொன்றாய்
ஏற்றறிவர் ஈசனுரு வம்.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது,

## 1012. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 787
ஆ. ல/193

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 280 (5 முதல் 284 வரை)

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 188 பக்கம்.
ஆ. நீளம் 30 செ.மீ.; அகலம் 3 செ.மீ,
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரிகள்
உ. சுமாரான கையெழுத்து
ஊ. நல்ல நிலை
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சுரக் குளிகை

பாரே நீ சுக்குடைய கசாயந் தன்னில்
பண்பாகக் குளிகையொன்று கொடுத்துப் பாரு

விரேநீ மூன்றுநாட் கொடுக்கும் போது
விதமான நால்முறையுஞ் சுரங்கள் போமே. (4)

போமேநீ யாறுநாள் பத்தியமே காரு
பொங்கமுடன் வெண்ணீறு சாத மாகும்
ஆமேநீ மற்றொன்று மாகா தப்பா
அடவாக ஏழாநாள் சலத்தை வாரு
நாமேநீ மிளகுடனே சிறுகீரை வேரும்
நலமாகக் கசாயம்வைத்துக் கொள்ளச் சொல்லு
வேமேநீ பத்தியத்தை முறிக்கச் சொல்லு
விதமாக மறுநா ளெல்லாஞ் சேரே. (5)

ஆ: முடிவு

தோஷத்துக்கு களம்

உரைத்தெடுத்து ரவியிற்பிலி சுட்ட சாம்பல்
உடன்சேர்த்து நாவுதனில் தளந்தான் போடு
கரைத்தெடுத்து நாவுதனில் சலமும் ஊறும்
கனலான தோசமது தணியும் பாரு
மரைத்தெடுத்த பேய்க்குமட்டி வேரைத் தட்டி
மைந்தனே கொடுத்துவிடு அடக்கிக் கொள்ள
துரைத்தெடுத்த தோசமதும் விலகிப் போகும்
துன்பமது விலகுமடா கொண்டு பாரே. (284)

## 1013. தருமர் அசுவமேத யாகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 788

ஆ. ம/12

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. தருமர் அசுவமேத யாகம்

சு. வி. 2

இ. உரைநடை இலக்கியம்

ஈ. உரைநடை

அச்சில் ஏறத்தாழ 500 பக்கம்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 242 ஏடு; 484 பக்கம்.

ஆ. நீளம் 42 செ.மீ.; அகலம் 4 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரிகள்

உ. எழுத்து நிலை

ஊ. 238 ஆம் ஏடு காணப்படவில்லை. பல ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சுபஸ்ரீ. மனமகா மண்டலேசுபரன் கண்ட மண்டலாதிபன் ராசாதிராசன், ராச பரமேசுபரன், ராசமார்த் தாண்டன், ராசகுலதீபனன், ராசகம்பீரன், ராச மார்த் தாண்டன், ராசகுலசேகரன், குருகுலவங்கிஷன், சந்திரகுலத் துதித்த பாண்டுமகாராசாவின் குமார காண்டீபராயன். பஞ்ச பாண்டவர்களில் தர்மபுத்திரர்......

ஆ. முடிவு

ஆயிர நாமத்தோனே, அடியார்கள் வினையைத் தீர்க்கும் பேச்சி முலையுண்ட பாகா, பிரமநவப்பிரமாவே, உன் ஆயிரமுந்தன் அடியேனுட சிரசில் வைத்தேன். ஆயிரநாமத் தானே. அகற்றுவாய் என் வினையைத் தானே.

இ. பிற்குறிப்பு

'ஜெய வருஷம் தை மாதம் 28ஆம் தேதி குரு வாரமும் பிரதமையும் உத்திராட நட்சத்திரமும் பகல் இருபது நாழிகையில் கூடிய சுப தினத்தில் அசுவமேத யாகம்....'

## 1014. மகா பாரதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 789

ஆ. ம/13

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........

ஆ. மகாபாரதம்

இ. உரைநடை இலக்கியம்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 800 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 364 ஏடு; 728 பக்கம். (3 கட்டுகளாக உள்ளன)

ஆ. நீளம் 40 செ மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. மிகச் சிதைவுற்ற சுவடி

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம், ஆ. முடிவு

ஏடுகள் மிகவும் சிதைவுற்றுள்ளதால் படித்தறியும் நிலையில் இல்லை.

## 1015. விக்கிரமாதித்தன் கதை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 790

ஆ. 4/14

### 2. உள்ளீடு; நூல்விவரம்

அ. ......

ஆ. விக்கிரமாதித்தன் கதை

இ. உரைநடை இலக்கியம்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 500 பக்கம் வரும்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 192 ஏடு; 384 பக்கம்

ஆ. நீளம் 38 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8, 9 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. 129–140, 145, 146, 151–192, 203–206, 231–237, 253–268 ஆகிய ஏடுகள் இல்லை.
மிகவும் சிதைவுற்ற நிலை.

எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நந்தியாபுரி பட்டணமென்று ஒரு பட்டணமுண்டு. அந்தப் பட்டணத்திலே வேத கோவிந்த ராசா வென்று ஒரு பிராமணன். அவருக்குத் தேவிமார்கள் நாலு பேருண்டு. அந்த நாலு பேர்களுடைய வர்ணாசாரம் என்ன வென்றால், பிரம்மஸ்ரீ ஒண்ணு, சத்திரியஸ்ரீ ஒண்ணு. வைசிய ஸ்ரீ ஒண்ணு. சூத்திர ஸ்ரீ ஒண்ணு. இப்படிப்பட்ட நாலு பெண்களுண்டு. இந்த நாலு பேருக்கும் நாலு பிள்ளை பிறந்தது.

ஆ. முடிவு

....அப்போ கீர்த்தி வந்தன் என்கிற ராசாவையுங் கூட்டி கொண்டு நேப்பாள தேசத்துக்கு அந்த ராசா ஆணையின் பேரிலே யும் விக்கிர மார்க்கன் ரதத்தின் பேரிலேயும் ஏறிக் கொண்டு புறப்பட்டு பட்டணமே வந்து சேர்ந்து, இனிமேல் நீயும் நீதி யுடனே தர்மங்களைப் பண்ணிக் கொண்டு சுகமே இருமென்று விக்கிரமாதித்த ராசா சொல்ல, அப்போ கீர்த்திவந்தனன் என்கிற ராசா வானவன் தண்டன் பண்ணினான். அப்போ சகல மான பிராம்மணாள் அத்தண்ட பேரும் மங்களாட் சதையும்..

(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1016. பரிபூரணம் 1200

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 791

ஆ. ல/194

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. பரிபூரணம் 1200

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 1201

### 3. தோற்றக் கூறுகள்

அ. 127 ஏடு; 254 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 11, 12 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூரணமாய் நிறைந்தபரி பூரணமே காப்பு
போதமய மானதொருபூ ரணத்தைப் பாடக்
காரணமாய் கருவுருவாய் எங்கும்நிறைந் திருந்த
கண்மணியின் கருவாகிக் கருணைதரும் பொருளை
ஆரணமாய் முக்கோணத் தடியில்நடு வாகி
அசையாத பொருளாகி அருவுருவு மாகி
வாரணமாய் மூலமதில் நந்தியெனும் பிள்ளை
வாசியெனும் பூரணத்தாய் மனோன்மணிகாப் பாமே.

ஆ. முடிவு

முத்தான புலத்தியனே அய்யா கேளு
முழுதுமிதை ஆதிதொடுத் தந்த மாக
சித்தாக நின்றபரி பூரணத்தை நீயுஞ்
செம்மையுடன் பூரணமாய்ப் பார்த்தா யாகில்
வத்தாத பாக்கியமும் வயதுஞ் சித்தி
மகத்தான யோகமொடு ஞானஞ் சித்தி
வித்தான மாய்கையற்று சுத்த மான
வேதபர வெளியில்மன வெளிசேர் முற்றே. (1201)

இ. பிற்குறிப்பு

'வாலை யானந்தப் பரதேசி பிள்ளையாகிய வேங்கிட ராமசாமி பரிபூரணம் அயிரத்திருநூறு எழுதி நிறைந்தது. முற்றும்'

## 1017. தட்சிணாமூர்த்தி சகலகலை ஞானம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 792

ஆ. ல/195

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தட்சிணாமூர்த்தி

ஆ. தட்சிணாமூர்த்தி சகல கலை ஞானம் 1200

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 1200

3. தோற்றக் கூறுகள்

அ. 120 ஏடு; 240 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது

ஈ. ஒரு பக்கத்திற்கு 10, 11 வரிகள்

உ. தெளிவுடன் கூடிய கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதிபரா பரத்தினுட கிருபை கூர்ந்து
அன்பான மனோன்மணியைத் தொழுது போற்றி
சோதியேதுங் கமலமுக மலர்த்தமிர்தங் கொண்டு
சுந்தரம்போல் வாதத்தி லெட்சங் காப்பு
நீதிபெற வைத்தியத்தி லிரண்டு லட்சம்
நிலைத்ததொரு சூத்திரம் கோடா கோடி
வாதியெனப் பேர்படைத்த பெரியோர்க் கெல்லாம்
மனமகிழ்ந்து கருக்குருவாய் வசனித் தேனே. (1)

ஆ. முடிவு

அறிவாக மனதடங்கி மவுன மாக
அப்பனேநா லெடுத்துப் பாரு பாரு
குறியான குருபதத்திற் குணமாய் நில்லு
குணமில்லார் தங்களிடங் கூட வேண்டாம்

பரியான தங்கமடா பரப்பிரம மாச்சு
பாலகனே தங்கமென்றாற் பூரணமே தங்கம்
நெறியான பூரணத்தைத் தினமும் நோக்கி
நேரான பராபரத்திற் சார்வாய் முற்றே.

இ. பிற்குறிப்பு

'தட்சிணாமூர்த்தி நாயனார் அருளிச்செய்த சகல கலை ஞானம் எழுதி முடித்தேன். ஆதீனமிளகியா பிள்ளை குமாரன் முத்துக்கருப்பன் கையெழுத்து.

## 1018. தட்சிணாமூர்த்தி பரிபூரண காவியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 793

ஆ. ல/196

2. உள்ளீடு: நூல்விவரம்

ஆ. தட்சிணாமூர்த்தி

ஆ. தட்சிணாமூர்த்தி பரிபூரண காவியம் 1000

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 718

3. தோற்றக் கூறுகள்

அ. 86 ஏடு; 192 பக்கம்.

ஆ. நீளம் 37 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு 10, 11 வரி.

உ. தெளிவுடன் கூடிய கையெழுத்து
முதல் 20 ஏடுகள் ஒரு கையெழுத்து. பிற வேறு.

ஊ. நல்ல நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஓமென்ற மூலகண பதியே காப்பு
உண்மையுடன் மேனையை உகந்து நின்று
ஆமென்ற அமிர்தநிலை யுட்கொண் டேதான்
அடங்கியந்த மனோன்மணியின் அருமை யாலே
ஊமென்ற உண்மைதனை மவுன மாக
உருப்பெற்றுக் கருப்பெற்று உறுதி பெற்று
தாமென்ற மதிதனையே ரவியிற் தாக்கு
சத்சித்தா னந்தமென்ற ஆதி காப்பே. (1)

ஆ. முடிவு

தானான வீரமொடு கோழிதலைக் கெந்தி
தன்மையுள்ள பவளப்புற்றுச் சுரைக்காய்க் கெந்தி
தேனான அரிதாரங் கோடா சூரி
தெளிவான பஞ்சபட்சி குங்குமப்பா சாணம்
ஊனான ரத்தவர்ண கோமுகபா சாணம்
உறுதியுள்ள துருசும் சுதமாசிப் பாசாணம்
கோனான சூதபா சாணம் கெந்தம்
கொள்கிநின்ற நீலவர்ணப் பாசாணந் தானே. (718)

## 1019. ஞானவெட்டியான்

1. நூலகக் குறிப்புகள்

அ. 794
ஆ. ட/162

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருவள்ளுவ நாயனார்
ஆ. ஞானவெட்டியான் 1500

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 993

## 3. தோற்றக் கூறுகள்

அ. 117 ஏடு; 234 பக்கம்.

ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 11 வரி.

உ. சிறிய எழுத்துகள், சுமாரான கையெழுத்து

ஊ. 61, 87 ஆகிய ஏடுகள் இல்லை. நல்ல நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அண்டபிண்டம் நிறைந்துநின்ற அயன்மால் போற்றி
அகண்டபரி பூரணத்தின் அருளைப் போற்றி
மண்டலஞ்சூழ் ரவிமதி சுடரைப் போற்றி
மதுரதமி ழோதுமகத் தியனைப் போற்றி
எண்திசையும் புகழுமெந்தன் குருவைப் போற்றி
இடகலையின் சுழிமுனையின் கமலம் போற்றி
குண்டலிக்கு ளமந்துநின்ற குகனைப் போற்றி
குறுமுனியின் தாளிணையைப் போற்றி போற்றி. (1)

ஆ. முடிவு

**பஞ்சாமிர்தக் குளிகை**

**தரு**

பஞ்சாமிர்த குளிகையைப் பாரும் பூபதி யாண்டே
ரஞ்சிதநாத வித்தாலும் நானுண்டு கண்டேன்
கஞ்சமலர்க் கணேசகமல பாதார விந்தஞ்
செஞ்சொல் மொழிமெய்ஞ் ஞானத்திரு வள்ளுவன்
பிரபந்தம் (பஞ்சா)

.. .. .. ..

.. .. .. ..

இருவிசூத்திர நாபிநிறுவி சாத்திர பேதி
ஏலமிதஞ்சு வகையினமதும் எடைபலமுமவ்
விதகடநுரையு மிளகுமிறு சீரகமுஞ் சுக்கும்
வகையுமுடையு பலமெடு மஞ்சினை திடமி....

(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1020. மச்சமுனி 800

1. நூலகக் குறிப்புகள்

அ. 795
ஆ. ல/197

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. மச்சமுனி
ஆ. மச்சமுனி 800
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 751

3. தோற்றக் கூறுகள்

அ. 82 ஏடு; 164 பக்கம்.
ஆ. நீளம் 31 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11, 12 வரி.
உ. சிறிய கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதிஅந்த வேதவித் தார மெந்தன்
ஆதிகுரு வென்றதொரு பிடிநாக் கீசர்
சோதியொளி வெளியான சொரூபா னந்தர்
சூட்சசடா தாரபிசந் துரியா தீதம்
ஓதுபிற நவரீங் கார பீடம்
உன்மனைக் கேவெகு தூரவே தாந்தந்
தேவாதி சராசர ரூபவிந்து நாதம்
பரப்பிரம மூலகணே சன்காப் பாமே. (1)

ஆ. முடிவு

உரைத்திட்ட மைவிபர மிதுதா னப்பா
உண்மையொன்று நினையாதே கணக்கோ இல்லை
குரைத்திட்டுச் சொன்னதடா பாட லுன்னை
கொண்டமட்டுங் கூறினது யேது நாலே
அரைத்திட்டங் காணாது லட்சம் லட்சம்
அய்யினுட அதிசயங்கள் . . . .
அரைந்திட்டே னென்றுசித்தர் கோபித் தாலுங்
கைபிடித்து அவரைஇதஞ் சொல்வேன் நானே. (751)

சொல்வேன்நான் மைவிபரம் இம்மட் டாச்சு
சூதான கோல்விபரஞ் சூட்டக் கேளு
வெல்வானே யுலகமெல் லாங்கோ லிருந்தால்
வெருமொ .. .. ..

(இதற்குமேல் ஏடுகள் இல்லை.)

## 1021. அகத்தியர் சாலத்திரட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 796
ஆ. ல/198

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் சாலத்திரட்டு 1200; முதற்காண்டம் 300

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 301

தோற்றக் கூறுகள்

அ. 140 ஏடு; 280 பக்கம்.

ஆ. நீளம் 31 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 10, 11, 12 வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காரணமாம் மூலவட்டந் தன்னில் நிற்குங்
கணபதியும் வல்லபையும் தேவர் காப்பு
பூரணமாம் பராபரை யும்சிவ நந்தி
பொருந்திநின்ற பஞ்சகர்த் தாக்கள் காப்பு
வாரணமீ தேறிவிளை யாடு மெந்தன்
மனதுகுரு வருள்சிரந் தருமான காப்பு
நாரணனும் நான்முகனும் அறியா நின்ற
நலமான வேதாந்தங் காப்புத் தானே. (1)

ஆ. முடிவு

சித்திபெருந் தேவரிசி குகைகள் தோறும்
திருவருளால் அடக்கிவைத்தா ரிந்த நூலை
பக்தியுடன் பூசைசெய்து வரைகள் தாண்டிப்
பலன்பெற்றோம் மேன்மேலும் மவுன மப்பா

முத்திபெருஞ் சிவயோகி யானா லிந்த
மொழிதப்பா துலகினிலே நடந்தா யானாற்
சத்தியருள் சகலசித்துங் கைக்குள் ளாச்சுச்
சத்தியாந்தா ளிந்தநூற் காண்டம் முற்றே. (301)

இ. பிற்குறிப்பு

ஆகச் சாலத்திரட்டுக் காண்டம் 4க்கு 1200முடிந்தன.

ஈசுர வருஷம் கார்த்திகை மாதம் 20 ஆம் தேதி பானு வாரநாள் பவர்னை அமாவாசியும் கார்த்திகை நட்சத்திரமும் கூடிய சுபயோக சுபதினத்தில் உதையாதி பதினாறு நாழிகை அளவில் கும்ப லக்கனத்தில் சாத்திக வேளையில் சாலத்திரட்டு ஆயிரத்திருநூறு எழுதி நிறைந்தன.

## 1022. தட்சிணாமூர்த்தி வைத்தியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 797
ஆ. ல/199

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தட்சிணாமூர்த்தி
ஆ. தட்சிணாமூர்த்தி வைத்தியம் 1500
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 1500

3. தோற்றக் கூறுகள்

அ. 167 ஏடு; 324 பக்கம்.
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11 வரி.
உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வாகுடன் கணேசன் பாதம்
வணங்கிமுக் குணங்க ளாய்ந்து
வாகடச் சுவடி யெல்லாம்
வகைவகை தொகுத்துப் பின்பு
ஆகமாய் விதியின் சூழாய்
அடர்ந்திடும் நோய்க ளெல்லாம்
போகவும் மருந்து சொல்வோம்
புலத்தியா பொருந்திக் கேளே. (1)

ஆ. முடிவு

போமப்பா வாகடசூத் திரத்தை யெல்லாம்
புகழ்ந்திட்டேன் புரையொன்று மடக்க மில்லை
சோமப்பா இந்தநூல் தொகையே தென்றால்
சொல்லுகிறேன் ஆயிரத்தை நூறும்
நாமப்பா உள்ளபடி சொல்லி வைத்தோம்
நாதாக்கள் கடாட்சத்தால் சூத்திரந்தான் முற்றே.
அகத்தியர் வாகட சூத்திரம் 1500 எழுதி நிறைந்தது.

முற்றும்.

## 1023. வால்மீகர் நாடி சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 798-1

ஆ. ல/200

## 2. உள்ளீடு; நூல் விவரம்

அ. வால்மீகர்
ஆ. வால்மீகர் நாடி சூத்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 541

## 3. தோற்றக் கூறுகள்

அ. 35 ஏடு: 70 பக்கம்
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3·5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. நல்ல நிலை
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒட்டிய வாத நாடி உகந்திடும் பித்தத் தோடே
முட்டியே நடக்கு மாகில் முகுந்திடும் பிணியைக் கேளாய்
அட்டிய கால்கை ரெண்டும் அசந்திடும் உளைவுண் டாகும்
கொட்டிய பித்த வாங்கும் குதித்திடும் ரேகந் தானே. (1)

ஆ. முடிவு

ஆடா தோடை தூதுவளை
அறுத்து இடித்துப் பிட்டவித்து
கோடா துழக்குச் சாறுதனில்
கோட்டந் திப்பிலி சாடாபினி
வீடாய் விராகனிடை சரியாய்
வெதுப்பிப் பொடித்துத் தூள்செய்து
வாடா குடிமுன்னா ளிரத்தம்
வாயால் விழுதல் தீர்ந்திடுமே. (541)

## 5. பிற செய்திகள்

இறுதியில் ஒரு ஏட்டில் வேறு பல மருத்துவச் செய்திகள் எழுதப்பட்டுள்ளன.

## 1024. பிரம்முனி 380

1. நூலகக் குறிப்புகள்

அ. 798-2
ஆ. ஓ/200

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. பிரமமுனி
ஆ. பிரம்முனி 380
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 387

3. தோற்றக் கூறுகள்

அ. 49 ஏடு; 198 பக்கம்.
ஆ. நீளம் 32 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.;
இ. இருபக்கம் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11 வரி.
உ. சிறிய கையெழுத்து.
ஊ. நல்லநிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரரு ளான சோதி சின்மய ஞான சோதி
ஆரணி கொன்றை சூடி ஆரணி யானைப் போற்றி
வாரணி ரிசிகள் பாதம் வணங்கியே வைத்திய நூலைக்
காரண மாகப் பாடக் கடவர் காப்புத் தானே. (1)

ஆ. முடிவு

வாரான கருவை யெல்லாம் வெளியாய்ச் சொன்னேன்
வாதமொடு வைத்தியமும் வகையாய்ச் சொன்னேன்

கூரான செந்தூரங் களங்கு செயநீர்
குருமுடிக்கும் வகையெல்லாங் குறியாய்ச் சொன்னேன்
வாரான அஞ்சனமு மதிலாஞ் சொன்னேன்
வசியமொடு அளைப்பு மாரணமுஞ் சொன்னேன்
ஆரான ஞானமொடு வாசி யோகம்
அடங்கிநின்ற இடமும்நீ அறியச் சொன்னேன்
தேரான வமுச்சியுட கருவுஞ் சொன்னேன்
செப்பினேன் கருக்கிடையுங் குருக்கடையுஞ்
சூத்திரந்தான் முற்றே. (387)

(ஈற்றில் பாடலடிகள் மிகுதியாக உள்ளன.)

5. பிற செய்திகள்

ஈற்றில் உள்ள வெற்றிடத்தில் சில உரைநடைப் பகுதிகள் எழுதப்பட்டுள்ளன. அவை அனுபவ முறைகளாகவும் பின்னால் எழுதப்பட்டவையாயும் இருக்கலாம்.

## 1025. மருத்துவ நிகண்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 798-3
ஆ. ல/200

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நிகண்டு
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 719

3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு; 86 பக்கம்.

ஆ. நீளம் 32 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 11 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்லநிலை

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அடுக்கினேன் நானூற்று எழுபத்து மூனு
அதிகமா மூலிகைப்பேர் சொல்ல வென்றால்
நடுக்கினேன் நாலாயிரத்து நானூ றோடு
நாற்பத்து நாலுவித மான மூலி
அடக்கினேன் கற்பத்துக் கடுத்த மூலி
காலாங்கி நாயன்சொல்லக் கேட்டுக் கேட்டு
முடக்கினேன் முத்துப்போலே ஒருகயிற்றில் கோர்த்தேன்
முறைமையாய் நிகண்டுக்குள் திறந்திட் டேனே. (1)

ஆ. முடிவு

சாரணைக் கிழங்கிந் துப்பு
சாதமிள மிளகு சீனி
தூரியந் தூநெய்யு தன்னில்
தோன்றிடு முலைப்பா லொக்க
வீரதாய் நய்யத் தட்டி
விடுவதே மூக்கில் நசியஞ்
சீரிய மூக்கு நீருந்
தினவுட னடைப்புப் போமே. (719)

## 1026. வைத்திய சிந்தாமணி

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 799

ஆ. ல/201

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .........

ஆ. வைத்திய சிந்தாமணி

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 724

## 3. தோற்றக் கூறுகள்

அ. 52 ஏடு; 104 பக்கம்.

ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 12 வரி

உ. சுமாரான எழுத்துகள்.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருந்திய கயிலை மேவுஞ் சிவனுமைக் குரைக்க யிந்நூல்
குறுந்தமிழ் முனிம கிழ்ந்து குனிந்தடி வணங்கி யேத்தி
அருந்தமி ழாற்ப டுத்தி அவனியி லருளிச் செய்த
மருந்தினைத் திரட்டிச் சிந்தா மணியென விளம்ப லுற்றார். (1)

ஆ. முடிவு

தேத்தாம் பிஞ்சுக் காய்து வைத்துச்
சீலையி லூட்டி நிழலுலர்த்தி
மாத்தான் போல வரும்நோவு
வகைக்குப் புகைக்க நசியம்பண்ண
ஏத்தா லெண்ணெ யிந்கலந்து
இடவே நசிய மும்குடித்தால்
நீரில் நானுங் கொண்ட
பழிதான் தீரு மென்றுரைத்தரர். (729)

இ. பிற்குறிப்பு.

'அகத்தியர் அருளிச் செய்தவை எழுதி நிறைந்தது.'

## 1027. கும்பமுனி சூத்திரம்-35

1. நூலகக் குறிப்புகள்

அ. 800

ஆ. ல/202

2. உள்ளீடு: நூல் விபரம்

அ. கும்பமுனி

ஆ. கும்பமுனி சூத்திரம் 35

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 35

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம்.

ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 12, 13 வரி

உ. கிறுக்கலான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கைமுறையாய்க் கற்பங்கள் கொண்டி டாமல்
காசினியில் வருவரே கற்பங் கொண்டு
மெய்தழன்று மயக்கமுற்று தளர்ச்சி யாகி
வெட்டையுடன் வரட்சிசுரம் தாகங் கண்டு
மைகலமாய் வேர்வைகுளிர் வீக்கஞ் சோகை
வயிற்றுளைவு கண்புகைச்சல் வாய்வுக் கொண்டு
செய்குணங்க ளிவையனைத்தும் வாரா தென்று
சிவனுடைய மூதண்ட கசாயங் கொள்ளே (1)

ஆ. முடிவு

பாராய்நீ கசாயமிட்டுப் பாங்காகக் கொப்பளிக்க
சீராகத் தீரும்திரஞ் சொன்னோம் — நேராக
இந்த மருந்து எடுத்துரைத்தார் கும்பமுனி
சிந்தையுற்றுப் பார்த்துத் தெளிந்து. (35)

கும்பமுனி சூத்திரம் முப்பத்தஞ்சும் எழுதி நிறைந்தது. முற்றும்.

5 பிறசெய்திகள்

நூலின் தொடக்கத்தில், 'தட்சிணாமூர்த்தி, மூதண்ட கஷாயம்' எனவும், இறுதியில், 'கும்பமுனி சூத்திரம் முப்பத்தஞ்சும் எழுதி நிறைந்தது, முற்றும்' எனவும் உள்ளன.

## 1028. சித்தராரூட நொண்டி

1. நூலகக் குறிப்புகள்

அ. 801-1

ஆ. ல/203

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ... ... ... ...

ஆ. சித்த ராரூட நொண்டி

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 28

3. தோற்றக் கூறுகள்

அ. 20 ஏடு; 40 பக்கம்.

ஆ. நீளம் 33 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கம் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு பல வித வரி.

உ. கிறுக்கலான கையெழுத்து.

ஊ. நல்லநிலை.

எ. குறை

4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

அத்தி மாமுக வன்சேய் அடியிணைக் கமலம் போற்றி
சித்தரா ரூடந் தன்னில் செப்பிய பொருளை யோர்ந்து
சுத்தியே எவர்க்குத் தண்டம் சுருக்கமாய் நொண்டிச்
சிந்தாய்
வித்தக ரருளி னாலே தமியனும் விளம்ப லுற்றேன்.

ஆ. முடிவு

நன்னாரி வேர்தனைக் கொண்டு வந்து
நலமாக நீர்விட்டுப் பலமாக அரைத்து
பொன்னரிய மருந்தை யந்நீரில் கலக்கிப்
பொருந்தக் குடிக்க நல்லபாம்பு முதலாய்ச்
சொன்னதோர் பனைசைகொம் பேறிமூக்கன்
துணையான கண்டங் கத்தரி விரியன்
அன்னாக விடங்கள் நில்லாம லோடும்
கைகண்ட மருந்தென்று சொன்னார்க ளிதுவே. (28)

## 1029. நாகாரூடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 801–2

ஆ. ல/203

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. நாகாரூடம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 63

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.

ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. கிறுக்கலான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆகுவர்க ளார்ஞான மைந்தன்
அரிதரு மருகன் மிக்கோன்
பாகுநற் கரும்பு தேங்காய்
பழமவல் அமுது செய்வான்
வாகுள்ள கந்தன் முன்னோன்
மதகரி முகனைப் போற்றி
நாகா ரூடம் வாக்கில்
நயத்தினால் உலகில் சொல்வாரும். (1)

ஆ. முடிவு

கடித்தால் விடமும் உச்சிதனில்
கடுக வுறையு மிதுசெவிதாய்
படித்தே அறிந்தால் அக்கினியில்
பஞ்சு போட்ட தவைபோலாம்
நடித்த சிவனார் மந்திரத்தால்
நல்ல கருடன் சக்கரமும்
கொடுத்த குருவி னருளாலே
குணமாய்த் தெரிந்து மீட்பீரே. (63)

## 1030. தட்சிணாமூர்த்தி வகாரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 801-3

ஆ. ல/203

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. தட்சிணாமூர்த்தி

ஆ. தட்சிணாமூர்த்தி வகாரம் 100

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 113

3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு; 22 பக்கம்.

ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூரணமாஞ் சுழினைநடுக் கமல மீதே
    புகழ்பெரிய மூலகண பதியே காப்பு
காரணமா யெனையாண்ட பராபரனைப் போற்றி
    கட்டாக வைத்தியத்தில் லட்சங் காப்பு
தாரணமாய் படுபாதி குறுக்கிச் சொன்னேன்
    சார்வாக ஆயிரத்திரு நூறுசூத்திரம்
வாரணமாய்க் குறுக்கிவைத்த சூத்திர மிந்நூறில்
    வகைதோணக் கருக்குருவும் வகுத்தேன் பாரே. (1)

ஆ. முடிவு

வடித்திடுமே யிருப்பவல் தைலத் துக்கு
வாகான கறிமஞ்சள் கத்தூரி மஞ்சள்
நடித்துமே யிருவகைக்கும் பலம ரைத்து
நலமாக தைலங்கள் வடித்துக் கொள்வாய்
பிடித்துமே பற்பமுதல் தைலத் துக்கும்
பிசகாமல் இந்நூலில் சொன்னேன் பாரு
கடுத்தமுள்ள தொழிலாளி வைத்திய னானால்
கரையில்லாக் கோடிதொந்தம் காண்பான் முற்றே.(13)

## 1031. மருந்து செய்முறை

1. நூலகக் குறிப்புகள்
   - அ. 801—4
   - ஆ. ல/203
2. உள்ளீடு: நூல் விவரம்
   - அ. . . . . . . . .
   - ஆ. மருந்து செய்முறை
   - இ. மருத்துவம்
   - ஈ. செய்யுளும் உரைநடையும்
     அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்.
3. தோற்றக் கூறுகள்
   - அ. 9 ஏடு; 18 பக்கம்.
   - ஆ. நீளம் 35 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
   - இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
   - ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.
   - உ. கிறுக்கலான கையெழுத்து.
   - ஊ. நல்ல நிலை.
   - எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கொள்ளவே சொல்லுகிறேன் பறங்கிப் பட்டை
　　கூறாகப் பலமஞ்சு சீனி யஞ்சு
அல்லவே முப்புரண்டி யசுவம் சங்கு
　　அழகாகக் கொடிவேலி பலம்வகைக் கிரண்டு
மெள்ளவே தானிடித்துச் சூர ணித்து
　　விதமாகக் கோதும்பை படியும் கால்தான்
கள்ளமாய்ச் சேர்ந்தபின்பு சட்டி யொன்று
　　காயவைத்து நெய்படிதா னொன்று விட்டு
கொள்ளவிக்குஞ் சேங்கொட்டை பலம தொன்று
　　குடியெடுத்துத் தான்போட்டுக் கொதிக்க வைத்து
பள்ளனும்போல் நஞ்சுவெளி வந்த பின்பு
　　பாங்காகக் கொட்டைதனை எடுத்துப் போட்டுச்
செல்லமாச் சுரண்டிப் போட்டுக் கிண்டி
　　திரமாகநீ யிறக்கி வைத்துக் கொள்ளே (1)

ஆ. முடிவு

குக்கில் கந்தகங் குக்குட முட்கரு
ஒக்கக் கட்டி யுருக்குந் தைலத்தில்
பக்க வாதம் பருமணிச் சூலையும்
ஒக்கப் போகுமென் றோதினா ருண்மையே.

## 1032. தன்வந்திரி சிந்தாமணி

1. நூலகக் குறிப்புகள்

அ. 802

ஆ. ல/204

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தன்வந்திரி

ஆ. தன்வந்திரி சிந்தாமணி

இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 1002

3. தோற்றக் கூறுகள்

அ. 61 ஏடு; 122 பக்கம்
ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 12 வரி.
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை
ஏ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மகா ஏலாதி சூரணம்

ஏலந் திரிகடுகு ஏற்றமதுரஞ் சந்தனந்தக்
கோலஞ் சிறுநாகம் கொத்தமல்லி – மூலமுள்ள
கோட்ட மதிவிடையம் கோமுத்த மாஞ்சிமஞ்சள்
நாட்டுஞ் சிறுதேக்கு நன்று. (1)

ஆ. முடிவு

செம்பருத்திக் கொம்பு திகழ்வாழை யின்சருகு
பம்புநாட் டிற்பருத்திப் பைங்கொழுஞ்சி — வம்புநுணாக்
காரமதி லொன்று கருக்கியகோ தங்குடிக்க
சேருவீ சூரிபோஞ் செப்பு. (1002)

(இதற்குமேல் எழுதப்பெறவில்லை)

## 1033. தட்சிணாமூர்த்தி வைத்திய பூரணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 803–1
ஆ. ல/205

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தட்சிணாமூர்த்தி

ஆ. தட்சிணாமூர்த்தி வைத்திய பூரணம் 400

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 401

3. தோற்றக் கூறுகள்

அ. 49 ஏடு; 98 பக்கம்.

ஆ நீளம் 32 செ. மீ.; அகலம் 3'5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 11, 12 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூரணமாய் நிறைந்தபரி பூரணத்தைப் போற்றி
புகழ்பெரிய வைத்தியபூ ரணத்தைப் பாடக்
காரணமாய்க் கருக்குருவாய் எங்குந் தானாய்
கண்மணியின் நடுவான கருணை தன்னை
ஆரணமாய் முக்கோணத்து அடிநடுவில் நின்ற
அம்பத்தில் அனுதினமும் அறிவால் போற்றி
வாரண முகத்தோனே அனுதினமும் போற்றி
மகத்தான வேதியனே வணங்கி னேனே. (1)

ஆ. முடிவு

முத்தான புலத்தியனே புலத்தியமா ரிஷியே
முச்சூடு மாதியந்தம் நன்றாய்ப் பாரு
சித்தான வைத்தியபூ ரணமீ தப்பா
தேசத்திற் கிட்டாது திரமாய்க் கேளு

பத்தான பதிதனிலே வைத்துப் பூசி
பதிவான வாசியது சித்தி யாகும்
வித்தான பிறவியான ஞான சித்தி
வேதாந்த பூரணத்தின் வெளிசேர் முற்றே, (401)

## 1034. தட்சிணாமூர்த்தி வகாரம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 803-2
ஆ. ல/205

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தட்சிணாமூர்த்தி
ஆ. தட்சிணாமூர்த்தி வகாரம் 16
இ. மருத்துவம்
ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.
ஆ. நீளம் 32 செ. மீ; அகலம் 3·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 12 வரி
உ. சுமாரான கையெழுத்து
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியென்ற மூலகண பதியின் பாதம்
ஆடினதோர் சூத்திரந்தான் பதினாறப்பா
தேடியே அண்டபிண்ட மெல்லாஞ் சேர்த்து
சிராகப் பாடினதோ ரிந்நூ லப்பா

பாடினேன் பூரணசூத் திரத்துக் காகப்
புரிவாகப் பாடிவிட்டேன் பதினா றப்பா
நாடியே நந்தீசர் சொன்ன வாக்கியம்
நன்றாக மூலகண பதியே காப்பு. (1)

ஆ. முடிவு

காணவே நூற்றிலே மெய்ய தாகும்
கருதுவது தானம்பதிலே மெய்ய தாகும்
பூணவே யிந்தநூல் துறைகாண் பிக்கும்
பூட்டியதோர் பூட்டெல்லா மஞ்சிற் காணும்
தோணவே கருக்குருவும் வழிதுறையு மாகும்
தொல்லுலகில் வேதையது வழிதுறையோ டேறும்
பேணவே பதினாறு மிதுவே யாகும்
பலமாகும் அகத்தியர்வாக் கியந்தான் முற்றே. (16)

5. பிற செய்திகள்

ஏட்டின் இறுதியில் சில அனுபவ மருத்துவக் குறிப்புகள் எழுதப்பட்டுள்ளன

## 1035. வள்ளிக்கு வாய்த்தார் வாகடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 803–3

ஆ. ல/205

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. வள்ளிக்கு வாய்த்தார் வாகடம்

இ. மருத்துவம்

ஈ. உரைநடை

அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்

ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3'5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8, 9 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நிலவாகைச் சமூலம் கொண்டுவந்து நிழலுலர்த்தி இடித்துப் பொடி வடி கொண்டு பேய்ச் சுரைக் குடுக்கையில் அடைத்து வைத்துக் கொண்டு சிறுநீரில் கொடுக்க விஷம் தீரும். செருப்படிச் சாற்றிற் கொடுக்க பெருச்சாளிகம் தீரும். மூக்கணஞ் சாற்றிலே கொடுக்க மூஞ்சுறு கடி தீரும். வேலிப் பருத்திச் சாற்றில் கொடுக்க எல்லா விஷமுந் தீரும்.

ஆ. முடிவு

முலை சுரக்க

மாந்துளிரை அரைத்து முலையில் தடவ முலை சுரக்கும். முத்தெருக்கன் செவிச் சமூலம் அரைத்து விளக்கெண்ணெயில் குழைத்துத் தடவத் தீரும். குன்றிப் பருப்பு உரைத்துப் புற வளையம் போடவும். வியாதி பழுத்துதென்றால் நல்லெண்ணெய் முலைப்பால், வேப்பம் பட்டைச் சத்து, நாயுருவி வேர்......

(இதற்கு மேல் எழுதப்படவில்லை)

5. பிற செய்திகள்

முதல் இரண்டு ஏடுகளில் சில மந்திரங்களும் யந்திரங் களும் எழுதப்பட்டுள்ளன.

## 1036. கருங்குழம்பு

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 803–4
ஆ. ல/205

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. கருங்குழம்பு
இ. மருத்துவம்
ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்,
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 12 வரி
உ. சிறிய கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவளரும் பொதிகைமலை முனிவர் கூடி
செகத்திலே வாழுகின்ற மனிதர்க் கெல்லாம்
வருமுறையாய்ப் பலரோகம் விஷங்கள் தீர
வகுத்தகருங் குழம்பதனை வழுத்தக் கேளு
பருவமுடன் சூதமரி தாரங் கெந்தி
பண்பான நெறிவிஷமும் நாவி காரம்
இருளியுடன் காய்மனோ சிலைஇந் துப்பு
இசைந்ததொரு வகைபத்துங் கழஞ்சிபத்து
எடுத்துக்கொள்ளே. (1)

ஆ. முடிவு

உருகாது மயக்கமிலை தியக்க மில்லை
 உணர்ந்துநின்று மலக்கட்டு சலக்கட் டில்லை
மருகாது உடம்புக்குள் வலியு மில்லை
 மற்றுமுள்ள கற்பத்தின் தோச மில்லை
சருகாது சீவகளை சாகா தொன்றும்
 சண்டாள னானாலும் ஞான மெய்தும்
ஒருகாது யிதுமூன்றும் விடாதே யுண்டால்
 ஓகோகோ சயமுதலாய் ஒழிந்து போமே. (6)

5. பிற செய்திகள்

ஏட்டின் பிற்பகுதியில் சில மந்திரங்களும் எந்திரங்களும் எழுதப்பட்டுள்ளன.

## 1037. அகத்தியர் குழம்பு

1. நூலகக் குறிப்புகள்

அ. 804–1
ஆ. ல/206

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் குழம்பு
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 6

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

விளக்க அட்டவணை

௩. ஒரு பக்கத்திற்கு 12 வரி.

௪. சிறிய கிறுக்கலான எழுத்து.

௫. நல்ல நிலை,

எ, முழுமை

4, சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பருபதந் தன்னில் வாழும் பாரினில் முனிவர் கூடி
பெருமையா யுலகில் வாழும் புண்ணிய சனங்க ளுக்கு
ஒருபல வியாதி வந்தால் உண்மையாய்த் தீர வென்று
பெருபல முனிவர் கூடிப் பேசிய மருந்து தானே.

ஆ. முடிவு

விதியால் மருந்து யிதுவெல்லாம்
வேறே தேட வேண்டாமே
பதினா லாயிரத் துடனே
பகரு வியாதி யிதுவெல்லாம்
விதியா யிதுக்குப் பரிந்து
வருந்தி அனுபானம் செய்யவல்லார்க்கு
வகையாய்த் தீரு மிதுவென்று
மாமுனி வுரைத்த வாறே.

5. பிற செய்திகள்

இப்பாடல்களைத் தொடர்ந்து மருத்துவச் செய்திகள் உரைநடையாகவும் எழுதப்பட்டுள்ளன.

## 1038. மருந்து செய்முறை

1. நூலகக் குறிப்புகள்

அ. 804–2

ஆ. ல/206

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . .
ஆ. மருந்து செய்முறை
இ. மருத்துவம்
ஈ. அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு; 30 பக்கம்
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11, 12 வரி.
உ. சிறிய கிறுக்கலான கையெழுத்து
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

**நீர்ழிவுக்கு**

முசுட்டைக் கீரை ஒரு பிடி, கட்டுக்கொடி யிலை ஒரு பிடி, இரண்டையும் வெவ்வேறே அவித்துக் கடைந்து கொண்டு, செக்கிலே எண்ணெய் ஆட்டுகிறபோது, எண்ணெயும் புண்ணாக்கும் அஞ்சு பலம் நிறுத்துக் கொண்டு, கடைந்த கீரையும் கூடக் கலந்து, அங்கத்தில் வெள்ளை ஒரு காசெடை கூட்டி ஆறு நாள், பனிரெண்டு பொழுது கொடுக்கவும்.

ஆ. முடிவு

**சீக்கிராணிக்கும் நாலாவகைக் கிராணிக்கும்**

பெருந்தும்பை 20 வராகன், தயிர் ¼ படி, கடுக்காய் 3 வராகன், நெல்லிக்காய் 3 வராகன், திப்பிலி 3 வராகன், அதிமதுரம் 2 வராகன், திப்பிலி மூலம் 3 வராகன், கஞ்சா 3 வராகன், கருஞ்சீரகம் 3 வராகன், இந்துப்பு 1 வராகன், ஓமம் 3 வராகன், குராசாணி ஓமம் 3 வராகன், சாதிக்காய் 3 வராகன், சாதிபத்திரி 3 வராகன், வில்லைத்தோடு, மாதுளங்காய்த்தோடு, நல்லெண்ணெய் ¼ படி, ஆக இந்த மருந்தெல்லாம் அளவின்படி கொண்டு, பெருந்தும்பை யிலையைத் தயிரிலே வேக வைத்து உழக்குத் . . . . . . . . . .

(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1039. மதலை கர்ப்பக் கிரியை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 805–1
ஆ. ல/207

### 2. உள்ளீடு: ல் நூலிவரம்

அ. . . . . . . . .
ஆ. மதலை கர்ப்பக் கிரியை
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 45

### 3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11, 12 வரி.
உ. சுமாரான கையெழுத்து
ஊ. நல்ல நிலை.
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வார்முலை யாளுமை பாகன்
மதலை நெடிய மால்மருகன்
பேரார் முருகன் திருத்தமையன்
புராண வேத முதல்வனைந்தும்
சீரார் கரத்தா னிருபதத்தான்
சிறக்கு மொத்தைக் கொம்புடையான்
காரார் கடகரி முகத்தான்
கழற்றா மரையி னிணைதொழுவாம், (1)

ஆ. முடிவு

மானே கெந்த தாளிக்கினை
 வருத்துங் குணங்கள் தனைக்கேளாய்
நானா விதமாய்த் தான்கழியும்
 நாக்குப் பூத்து விரிந்துபுண்ணாம்
ஊணஉடம்பு தான் வரளும்
 உதடு முலர்ந்து மேனிசுடும்
தேனே முதிர்ந்தா லடிவயிற்றில்
 திரண்டு வலித்து ரத்தம்விழும். (45)

## 1040. குழந்தை மருத்துவம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 805—2
ஆ. ல/207

### 2. உள்ளீடு; நூல் விவரம்

அ. . . . . . . . . . .
ஆ. குழந்தை மருத்துவம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 52 ஏடு: 104 பக்கம்
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3·5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு பலவித வரி.
உ. வெவ்வேறு கையெழுத்து
ஊ. நல்ல நிலை
ஏ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

**கட்டு மாந்தக் குணம்**

வழு வழு வென்று சவ்வு போலே இருக்கும். இதுக்கு மருந்து, பொடுதலைச் சாறு ¼ படி, அரளிப் பூடு 2, வசம்பு இரையளவு, நெல்லித் தழை ஒரு பிடி, மிளகு 2 வராகன், மாதளம் பிஞ்சு 2 வராகன், ஓமம் 2 வராகன், இவ்வளவும் அரைத்துக் கலந்து சட்டி காய வைத்து, பசு வெண்ணெய், முத்தப் புளியிலை ஒருத்தலைப் பூடு கிள்ளிப்போட்டுத் தாளிதம் பண்ணிக் கொதிக்கவிட்டுக் காய்ச்சி இறக்கி மூணு நாள் கொடுக்க மாந்தம் தீரும்.

ஆ. முடிவு

**சத்தி குன்மத்துக்கு**

இந்துப்பு 2 வராகன், கொண்டு வந்து பொடி பண்ணி சதுரக் கள்ளிப்பால்விட்டு அரைத்து வழித்து, முதிர்ந்த தேங்காய் கண் திறந்து தண்ணீரை உலர்த்திப் போட்டு அரை மருந்தைத் தேங்காயிலிட்டு அடைத்து, சீலை மண் செய்து, எருவடுக்கி, அக்கினியிட்டு மருந்தைப் புடத்தில் வைத்துக் கருகாமல் பதமாய் எடுத்து, தொடுதன்னி மற்றுண்டான தெல்லாஞ் சூரணம் பண்ணி . . . . . . . . . .

(இதற்கு மேல் ஏடுகள் இல்லை.)

## 1041. தட்சிணாமூர்த்தி சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 805—3
ஆ. ல/207

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தட்சிணாமூர்த்தி
ஆ. தட்சிணாமூர்த்தி சூத்திரம் 12
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 12

## 3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 12, 13 வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தாயான உமையாள் பாதம் போற்றி
சாத்திரமே வேணுமடா ஆயிரத்திரு நூறுக்குள்
துணையாகக் கருவொன்று மில்லை யில்லை
சொல்லடக்க மாயுரைத்தேன் வழலை யொன்றும்
காயாகும் அதைக்குறுக்கி இருநூறு சொன்னேன்
கனிபோல யிந்தநூல் பனிரெண் டுக்குள்
வாயாரச் சொல்லுகிறேன் வகார மார்க்கம்
மதியிரவி யண்டபிண்டம் வளமை கேளே. (1)

ஆ. முடிவு

தானென்ற அண்டபிண்டக் குருவைச் செய்ய
தவம்வேணுஞ் சிவம்வேணும் தயவு வேணும்
வானென்ற அக்கினியா முப்பைக் காண
மதிவேணும் விதிவேணும் வாசம் வேணும்
நானென்ற சிவயோக நாட்டம் வேணும்
நாள்தோறும் வழலையுட பூசை வேணும்
சேனென்ற சற்குருவைக் காக்க வேணும்
சித்தியாம் பன்னிரண்டுஞ் சேர முற்றே.

## 5. பிற செய்திகள்

இதற்குப் பின்னால் 5 ஏடுகளில் மருத்துவச் செய்திகள் எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளன,

# 1042. வராகி மாலை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 806–1

ஆ. ழ/27

## 2. உள்ளீடு; நூல் விவரம்

அ. ......

ஆ. வராகி மாலை—யந்திரங்களுடன்

இ. மாந்திரீகம்

ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 44 ஏடு; 88 பக்கம்

ஆ. நீளம் 16 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது. இடையிடையே ஒரு பக்கத்திலும், சிலவற்றில் எந்திரங்களும் எழுதப் பட்டுள்ளன.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பெருகுங் கருணை வராகிதன் மாலையைப் பேசுதற்கு
நெருங்குங் கமலை அம்பிகைவ ராகிநி றைந்துமகிழ்ந்
திருக்கும் பரஞ்சுத னங்குச பாச மெனதுவினை
கருக்குந் தகமை விநாயுகன் சேவடி காப்பிதுவே,

ஆ. முடிவு

மாணிக்கம் பச்சை வைடூ ரியத்தி மரகதத்தி
ஆணிக் கனக நிறத்திபஞ் சாட்சரி அட்சரத்தி
பேணிக் கமலப் பதந்தொழு வார்க்குப் பிரசித்தமாய்த்
தோணிக் கடாட்ச மருள்வாய் திரிபுரை சோதியுமே.

## 1043. வராகி அகவல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 806–2

ஆ. மு/27

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. ........

ஆ. வராகி அகவல்

இ. மாந்திரீகம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.

ஆ. நீளம் 16 செ.மீ.; அகலம் 2.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு 4, 5, 6 வரி.

உ. கிறுக்கலான கையெழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பம்பை முழங்க பறையொலி யதிர
கிம்புரு நாரதர் கீதம் பாட
தண்டை முழங்க நாவலர் பாட
தண்டை குலுங்க சரங்க ளசைய

ஆ. முடிவு

மயிலே குயிலே மணியகங் காளி
ஓங்கார சத்தி உல்லாச கோரி
சித்தப் பிரசித்தி சிவவாக்ய ஞானி
மத்தப் பரமத்தி வராகி மாரணம்

அகவல் முற்றும்

## 1044. பல்வகை நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 807

ஆ. ற/47

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . .

ஆ. பல ஏடுகளின் தொகுப்பு

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 74 ஏடு; 148 பக்கம்.

ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரிகள்
உ. பல விதமான கையெழுத்து.
ஊ. பல ஏடுகள் சிதிலமான நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உ எ யெ வொ டா—பூசம்
டிடு டெ டோ—ஆயிலியம்
மொ டாடி டூ—பூரம்
டெ டோ பாபீ—உத்திரம்
பூ சா ணா டா—அஸ்தம்

ஆ. முடிவு

துய்யாது எடைக்கெடைதான் சேர்த்தா யானால்
துய்யாகுஞ் செநல்லுரிது சொல்லி விட்டேன்
மெய்யாகச் சொல்லுகிறேன் சதுரக் கள்ளி
விதமான பாலதனைக் கறந்து வந்து
அய்யாகேள் முன்குருவில் விராகன் போட்டு
அறுபதுநா ழிகையிருக்கத் தெளிந்து போகும்
உய்யவே யொருகழஞ்சு வெள்ளிக் கப்பா
உழக்குநீர் சுருக்கிடவே கட்டிப் போகும். (135)

5. பிற செய்திகள்

சோதிடம், மருத்துவம் போன்ற பல நூல்களின் வெவ்வேறு ஏடுகள் கலந்த ஒரு சுவடியாக உள்ளது.

## 1045. அகத்தியர் வைத்திய பூரணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 808
ஆ. ல/208

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் வைத்திய பூரணம் 400

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 400

3. தோற்றக் கூறுகள்

அ. 87 ஏடு; 174 பக்கம்.

ஆ. நீளம் 25 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரிகள்

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூரணமாய் நிறைந்தபரி பூரணத்தைப் போற்றிப்
 புகழ்பெரிய வைத்தியபூ ரணத்தைப் பாடக்
காரணமாய்க் கருவுருவாய் எங்கும் தானாய்
 கனகமணி யிரண்டுமான கருணை தன்னை
பூரணமாய் முக்கோணத் தடிநடுவில் நின்ற
 அம்பரத்தை யனுதினமும் அறிவால் போற்றி
வாரணமா முகத்தோனை யனுதினமும் போற்றி
 மகத்தான வேதியனை வணங்கி னேனே. (1)

ஆ. முடிவு

முத்தான புலத்தியனே புலத்தியமகா ரிஷியே
 முச்சுடரு மாதியந்தம் நன்றாய்ப் பாரு
சித்தான வைத்தியபூ ரணமி தப்பா
 தேசத்தில் கிட்டாது திறமாய்க் கேளு

பத்தான பதிதனிலே வைத்துப் பூசி
பதிவான பாசியது சித்தி யாகும்
வித்தான பிறவியற ஞானம் சித்தி
வேதாந்த பூரணத்தில் வெளிசேர முற்றே. (400)

பூரணம் நானூறு முற்றும்.
அகத்தியர் அருளிச் செய்த வைத்தியம்.

## 1046. உடல் உற்பத்தி லட்சணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 809-1
ஆ. ல/209

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நந்தீசர்
ஆ. உடல் உற்பத்தி லட்சணம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 112.

3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு; 22 பக்கம்.
ஆ. நீளம் 38 செ மீ.; அகலம் 2.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து
ஊ. நல்ல நிலை.
ஏ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உன்னிய கர்ப்பக் குழியாம் வெளியிலே
பன்னிய நாதம் பகர்ந்த பிருதிவி
வன்னியும் வாய்வு மாயுறுஞ் சுக்கிலம்
மன்னிச் சமனாக்கின் வழங்கு முதகமே, (1)

ஆ. முடிவு

தின்றிட நோயெல்லாம் திசைகெட்டு ஓடிடும்
பன்றிய வாய்வு பக்கத்திற் சேராது
தன்றிய லோகர்க்குத் தானாகச் செயமரை
மூன்றிய சித்தாகம் மகாவியாதி போக்குமே. (112)

## 1047. அகத்தியர் குருநாடி சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 809-2

ஆ. ல/209

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் குருநாடி சூத்திரம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 44

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 17 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

இ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பெரு முனிவர் வேதந்
தெரிந்தபின் னுலகத் தோர்கள்
பேர்பெரு கருவி யுற்ற
பிணிபல உணர்ந்து தேர்ந்தும்
ஊர்பல நாடிக் கெல்லாம்
உயர்குரு நாடி மூன்றில்
சேர்குரு நாடி நேர்மை
செயலுடன் கூற லுற்றேன், (1)

ஆ. முடிவு

கயிறேது பையேது கணந்தா னேது
கருத்துடனே கமலமுகங் காலந்தா னேது
வயிறேது வாயேது வன்னி யேது
வைத்தியரே யிந்தஉண்மை மகிழ்ந்து சொல்வாம்
கயிறான தேராகும் பையை குண்டம்
கருத்துடனே கமலமுகம் மனோன்மணி யேயாகும்
வயிறான தேமாயன் வன்னி ருத்திரன்
வைத்தியரே யிந்தஉண்மை மகிழ்வித் தோமே. (44)

அகத்தியர் சொன்ன சூத்திரம் முற்றும்.

## 1048. அகத்தியர் வாகட சாத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 809-3

ஆ. ல/209

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் வாகட சாத்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 117

## 3. தோற்றக் கூறுகள்

அ. 14 ஏடு; 29 பக்கம்.
ஆ. நீளம் 38 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

புக்க மடந்தைய ரோடு புணர்ந்திடும் போதி லங்கே
மிக்க அபான னெதிர்ப்படில் மேவி ரண்டாங் குழவி
தக்க சுவாசம் வலத்தோடில் ஆண்பிள் ளைதான் தரிப்ப
தொக்கு மிவ்வாயு விடத்தோடு திறப்பே னென்றுகந் தறியே.(1)

ஆ. முடிவு

அந்தித்த நாடி தானும் அரணைவால்த் துடியே செய்யிற்
சந்தித்த மங்கை யோடுந் தரணியிற் புக்கு முண்டாய்
வெந்தித்த மலத்தி னோடு வீழ்கைதான் திண்ண மென்க
பந்திந்த தேனின் சொல்லாப் பகருவர் மண்ணி னோர்க்கே.(117)

அகத்தியமாமுனி அருச் செய்த திருவிருத்தம் முற்றும்.

## 5. பிற செய்திகள்

பின்னால் 4 ஏடுகளில் வெவ்வேறு மருத்துவச் செய்திகள் எழுதிச் சேர்க்கப் பட்டுள்ளன.

## 1049. அகத்தியர் குணபாடம்

**2. நூலகக் குறிப்புகள்**

அ. 809-4

ஆ. வ/209

**2. உள்ளீடு: நூல் விவரம்**

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் குணபாடம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 79

**3. தோற்றக் கூறுகள்**

அ. 11 ஏடு; 21 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.

உ. தெளிவுடன் கூடிய கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

**4. சிறப்புச் செய்திகள்**

அ. தொடக்கம்

ஆதியாங் கடவு ளாளே அடியேனும் போற்றி செய்து
தீதற வியாதி தன்னைத் திடமுடன் அறிய வேண்டி
கோதுற நல்லோர் சொல்லுங் குணமுளோர் பாடல்தன்னை
நீதியாய்ப் படியின் மீதில் நெறியுட னுரைத்த தாமே. (1)

ஆ. முடிவு

காய மரத்தை திப்பிலியும் கடியச் சுக்கு கொடிவேலி
நேய வறுத்துப் பொடிசெய்து நெறிய தேனிற் கொள்வீராய்
தூய காசச் சுரம்விட்டு துடிதாய் ஓடிப் போகுமதே. (79)

விபரம் — அதிமதுரம், சீரகம், கோட்டம், சுக்கு, வெண்காரம், தேன், சர்க்கரை, மாகுபாலசம், எலுமிச்சம் பழச்சாறு கூட்டி நாக்கில் தடவத் தோஷத்துக்கு, சந்தனசக்கை, பாப்பார முள்ளி வேர், முந்திரிப் பழமுப் புத்திராசி, கோட்டம் இதுவெல்லாம் தழம்பூசாறு பிழிந்து அரைத்து நாக்கில் தடவ தோஷம், கிஷ்ணணா தோஷம் இது முதலாய்த் தீரும்.

அகத்தியர் சொன்னது முற்றும்.

## 1050. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 809-2

ஆ. ல/209

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 8

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தாந்திரகம் தகவில்லா சித்த வின்பிறும்
அந்தகம் புக்கி நேத்திரம் அபினி யாகம் பிரலாபன்
பந்தமாம் கரணிகங் கண்டம் பரிவுடன் சின்சின்
முச்சிதாங்கம்
அந்தமா மருத்தங்க மறத்திறம் அகச ணிபதி மூன்றே. (1)
(பாடலில் சீர் ஒழுங்கு இல்லை)

ஆ. முடிவு

தூக்க மிகவே பிரமை யுண்டாம் துடிக்கு மூணுகுடி கெடுக்கும்
மூக்க மிகவே மினுமினுக்கும் மூச்சே சுவாசம் மிகவுண்டாம்
நாக்கின் நடையே கறுகறுக்கும் நலமிபல பசனதிகசுரம்
தாக்கும் தாப தீபனமா தானே அபுன்னிய மிதுதானே. (19)

5. பிற செய்திகள்

இப்பாடலினை அடுத்து, 'அரோசனத்துக்கு', 'பக்க சூலைக்கு' என இவ்வாறு தொடர்ச்சியாக மருத்துவக் குறிப்புகள் எழுதப்பட்டுள்ளன.

## 1051. மருந்து செய்முறை

1. நூலகக் குறிப்புகள்

அ. 809-6

ஆ. ல/209

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. மருந்து செய்முறை

இ. மருத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 66 ஏடு; 132 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஒரு சில ஏடுகள் ஒரே பக்கத்தில் எழுதப்பட்டுள்ளன.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.

உ. சுமாரான கையெழுத்து இடையிடையே
கையெழுத்து மாறுபாட்டுடன் கூடிய நிலை

ஊ. நல்ல நிலை.

ஏ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

**அரோசனத்துக்கு**

மயிலிறகு சுட்ட சாம்பல், அதிமதுரம், திப்பிலி, சர்க்கரை, தேன் வார்த்துக் குழப்பி, நாக்கில் தடவ விக்கல், எக்காலமும் அரோசன தாகம் இதுவெல்லாந் தீரும்.

ஆ. முடிவு

**வெள்ளைக்கு உருண்டை**

பளிங்கு சாம்பிராணி 2 பலம் இடித்துச் சூரணம் செய்து ரசகற்பூரம் 2 வராகன், வெள்ளைக் காட்டாமணி பாலில் 4 சாமம் அரைத்து, சுண்டைக்காய்ப் பிரமாணம் உருட்டி உலர்த்தவும். நெல்லி வற்றல் சுட்டுச் சாம்பல் செய்து, ஒரு உருண்டை உடைத்து வாயில் போட்டுக் கொண்டு, மேல் சாம்பல் போட்டு, தண்ணீர் விட்டு விழுங்கவும், இப்படிக்கு 2 வேளையும், 3 நாள் சாப்பிடவும். துவரம் பருப்பு. நெய், உப்பு, சேர்க்கலாம். புளியாகாது. மறுபத்தியம். 3 நாள் ஆன உடன் ஸ்நானம் செய்து, பாவக்காய், சிறு கீரை சேர்த்து வரவும். இது கை கண்டது. சர்வம் வெள்ளை குணமாகும்.

## 1052. பிரமமுனி வைத்திய சூத்திரம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 810—1

ஆ. ல/210

### 2. உள்ளீடு: நூல் விபரம்

அ. பிரமமுனி

ஆ. பிரமமுனி வைத்திய சூத்திரம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 381

### 3. தோற்றக் கூறுகள்

அ. 64 ஏடு; 128 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.

உ. தெளிவுடன் கூடிய கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரரு ளான சோதி சின்மய ஞானச் சோதி
ஆரணி கொன்றை சூடி ஆரணிந் தானைப் போற்றி
வாரணி ரிஷிகள் பாதம் வணங்கியே வைத்திய நூலை
காரண மாகப் பாட கணபதி காப்புத் தானே. (1)

ஆ. முடிவு

வைத்துமே சத்துவகை கரடு தட்டில்
மைந்தனே குடோரியிட்டு எருமைக் கொம்பால்
உய்த்துமே கிண்டுநீ கரம்சங் களற்று
உருகியே வெள்ளிபொன்போல் கண்விட் டாடும்

கத்துமே கருவெல்லாம் வெளியாய்ச் சொன்னேன்
கருவாளி யானாக்கால் கண்டு பாரு
செய்த்துமேல் சித்தருட நூலை யெல்லாம்
திரட்டியே ஆயிரத்தில் தெளிவாய்ச் சொன்னேன்
வைத்துமே ஆயிரத்தைக் குறுக்கி நன்றாய்
பாடினேன் முந்நூற்றுச் சிலுவான மப்பா
உய்த்துமே கருவை யெல்லாம் வெளியாக
நளியாமற் சத்தியமாய்ச் சொல்லிப் போட்டேன்
கைத்துமே சிறுபிள்ளை முதலா யுள்ள
கருவறியா மூடர்களுங் காணு வாரே. (387)

இ. பிற்குறிப்பு

சோபகிருது வருஷம் கார்த்திகை மாதம், முதல் தேதி, புதவாரம், அட்டமி, மக நட்சத்திரம், அயிந்த நாம யோகம், கவுல்வா கரணம், பொழுது விடிந்து பத்து நாழிக்கு எழுதி முடிந்தது. இராயவேலூர் சைதாபேட்டையிலிருக்கும் மலையரையன் குலத்தில் வந்த பெரிய அடைக்கலம் குமாரன் அண்ணாசாமி படிக்கின்ற பிரமமுனி முந்நூற்று அறுபது எழுதி முடிந்தது. சம்பூரணம்.

## 1053. அகத்தியர் 205

1. நூலகக் குறிப்புகள்

அ. 810-2

ஆ. ல/210

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் 205

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 204

## 3. தோற்றக் கூறுகள்

அ. 31 ஏடு; 62 பக்கம். (ஏடு 65 முதல் 95 வரை)
ஆ. நீளம் 38 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. நல்லநிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூரணமாம் மும்மூல பொறியிற் சூடாம்
புகையெழும்பி மேகமதாற் சிரசிற் சூடாம்
காரணமாய் நீர்கலந்து கண்ணில் ரோகம்
கனலெழுந்த வாய்வினால் சூலை ரோகம்
மாரணமாம் வாதத்தி லெழுந்த மேகம்
மதியதொரு பித்தத்தால் கிராணி யாச்சு
தாரணமாம் வாய்வினால் குன்ம மாச்சு
சார்ந்தசிலேற் பனங்கூடி சயம தாமே. (1)

ஆ. முடிவு

ஈவதிந்த நூல்துகைதான் இருநூற் றைந்து
இகத்திலுள்ளோர் பிழைக்கவென்று இறங்கிச் சொன்னேன்
தாயிருந்த தபமுனக்குத் தவக்க மில்லா
தனம்பெற லிந்நூலைச் சாற்றி னேன் யான்
நோய்மிகுத்து வருவதில்லை ஒருநா ளுந்தான்
நுண்மையாய்ச் சரக்கையெல்லாம் நீற்றுக் கொண்டு
பாயமொடு எண்ணையொடு கிருதஞ் செய்து
வைத்திடுவாய் அனுபான வைத்தியம் முற்றே. (204)

# 1054. அகத்தியர் பூரணம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 810-3
ஆ. ல/210

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் பூரணம் 400

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 401

## 3. தோற்றக் கூறுகள்

அ. 73 ஏடு; 145 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7, 8 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

பூரணமாய் நிறைந்தபூ ரணத்தைப் போற்றிப்
புகழ்பெரிய வைத்தியபூ ரணத்தைப் பாடக்
காரணமாய்க் கருவுருவா யெங்குந் தானாய்க்
கண்மணியின் நடுவாகுங் கருணை தன்னை
ஆரணமாய் முக்கோணத் தடிநடுவில் நின்று
அம்பரத்தி லநுதினமும் அறிவால் போற்றி
வாரணமா முகத்தோனை யநுதினமும் போற்றி
மகத்தான வேதியனை வணங்கி னேனே. (1)

ஆ. முடிவு

முத்தான புலத்தியனே புலத்தியமா ரிசியே
முச்சூடு மாதியநீதம் நன்றாய்ப் பாரு
சித்தான வைத்தியமும் பூரணமும் தப்பா
தேசத்திற் கிட்டாது திறமாய்க் கேளு

பத்தான பதிதனிலே வைத்துப் பூகி
பதிவான வாசியது சித்தி யாகும்
வித்தான பிறவியற ஞானஞ் சித்தி
தேதாந்த பூரணத்தின் வெழுசேர் முற்றே. (401)

இ. பிற்குறிப்பு.

பிரமாதீச வருஷம் மாசி மாதம் 13ஆம் தேதி புத வாரம் ராயவேலூர் சைதாப்பேட்டையில் இருக்கும் மலையரை யன் குலத்தில் வந்த பெரிய அடைக்கலம் குமாரன் அண்ணாசாமி குமாரசாமி, மார்க்க சகாயன் படிக்கின்ற அகத்தியர் அருளிச் செய்த பரிபூரணம் 400 சம்பூர்ணம். எழுதி முகிந்தது.

5. பிற செய்திகள்

முதல் ஏட்டில், 'பொதிகாசல மூர்த்தியருளிச் செய்த வைத்திய பூரணம் 400' என்று எழுதப்பட்டுள்ளது.

## 1055. தன்வந்திரிநாடி

1. நூலகக குறிப்புகள்

அ. 813–4

ஆ. ல/210

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தன்வந்தரி

ஆ. தன்வந்தரி நாடி 71

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 73

3. தோற்றக் கூறுகள்

அ. 14 ஏடு; 25 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3'5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியாம் கணேசன் காப்பு
அருமறை வேதங் காப்பு
சோதியாம் முனிவர் காப்பு
சோதித்த பெரியார் காப்பு
நீதிசேர் செம்பொற் பாதங் காப்பு
நிலைத்திடும் ஞானி காப்பு
ஆதியாய் நின்ற சத்தி
அமர்ந்திடும் தேவி காப்பே. (1)

ஆ. முடிவு

பேரான உத்திரத்தில் மூவா யிரம்பேர்
பிரபல்லிய மாய்க்கொண்டு தேர்ந்தார் பாரு
ஆரான என்மொழிதான் முந்நூறு லட்சமும்
அப்பனே அதிலிருக்கும் வாத மெல்லாம்
வாரான முந்நூற்றில் திறந்து சொன்னேன்
வளமான முந்நூற்றைப் பாரு பாரு
நாரான என்மொழியைக் கண்ட பேர்க்கு
நலமான சிவயோகப் பதவி முற்றே. (73)

முற்றிற்று.

## 1056. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 811

ஆ. ல/211

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . .

ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்

இ. மருத்துவம்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 44 ஏடு; 88 பக்கம்

ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. ஏடு இரு பகுதியாகப் பிரிந்து எழுதப்பட்டுள்ளது.
சற்றே சிதைந்த நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

**பீனிசத்துக்கு**

திப்பிலி, மிளகு, முருங்கை விதை, விளாவரிசி இவை அரைத்து, நாசியில் நசியம் பண்ணலாம். புண்ணாக்குப் பொடி பண்ணி இந்நீரில் குடிக்கவும். ஆடாதோடைச் சாறும் ஆவின் நெய்யும் சரிகூட்டிக் குடிக்கவும்.காயும் வெள்ளை ஆடாதோடை சாற்றில் நனைத்து மூன்று நாள் நிழலுலர்த்திச் சூரணம் பண்ணி நேரம் மூன்று கழஞ்சி கொடுக்கவும்.

ஆ. முடிவு

மயிறோசனையும் முத்தக் காசும் பொடி செய்து மேலே போட வருவாள். சுடலையில் கையான் தகரை செவ்வாயில் காப்புக்கட்டி, மறுசெவ்வாயில் பலியிட்டுப் பிடுங்கிச் சாறு பிழிந்து புது ஓட்டில்தடவி, உலர்த்திக் காராம்பசுவின் நெய்யில் யரவ்விப் பட்டுத் திரி செய்து,விளக்கேற்றி, புது ஓட்டில் மை பற்றவைத்து அந்த மையில் திலதமிடவள் முகத்தில் முழித்து, திரும்பிப் பாராமல் வரவும், வருவாள்.

இ. முற்குறிப்பு

'பலதுக்கும் வைத்திய அட்டவணை'

பிற்குறிப்பு

தட்சிணாமூர்த்தி சுவாமியுடைய அருளினாலே பற்பல வைத்தியம் எழுதி முடிந்தது. முற்றிற்று.

1860 ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 8 ஆம் தேதி குரு வாரம் எழுதி முற்றிற்று.

## 1057. அகத்தியர் முப்பு

1. நூலகக் குறிப்புகள்

அ. 812

ஆ. ல/212

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் முப்பு 50

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 50

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம்.

ஆ. நீளம் 38 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. முதல் ஏழு ஏடு ஒருவராலும் கடைசி இரண்டு ஏடு வேறொருவராலும் எழுதப்பட்டுள்ளது

ஊ. நல்ல நிலை.

ஏ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மயமான முப்புவின் மார்க்கந் தன்னை
வைத்தியுத்துக் காதியாய் விரித்துச் சொன்னேன்
செயமான கணபதியுங் கந்தன் தானும்
சிவனோடு உமையாளும் நிர்வாணி தானும்
நயமாக எப்போதும் முன்னே நின்று
நாடாத முப்பூவை நயந்து காக்க
வயமாகச் சொல்லுகிறேன் ஐம்பதுக் குளப்பா
வைத்தியரே எப்போதும் வுணங்கிக் கேளே. (1)

ஆ. முடிவு

காவான வைத்தியத்தை உறுதி யாக
கைமுறைகள் தப்பாமற் கருவாய்ச் செய்தால்
பாவான நிறமுடைய பிரம்மாவா ரப்பா
பாரிலே வாழவைத்த குருவு மாவான்
தேவான திருடைய செல்வ னாவான்
சிந்தையிலே களங்கமற்றால் சித்த னாவான்
நாவான மணிபேர்க்குப் பேர்மாணஞ் சொன்னேன்
நலமுடைய முனிவர்மொழி நாடி முற்றே. (50)

முற்றும்

அகத்தியர் முப்பு முற்றும். ஐம்பது திருப்பாடல் முற்றும்.

## 1058. புலிப்பாணி பலதிரட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 813–1

ஆ. ல/213

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. புலிப்பாணி

ஆ. புலிப்பாணி பலதிரட்டு

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 40

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 13 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை,

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வேதாந்த நாயகியே விமலி வேணி
வீரமா காளியம்மாள் ருத்திர ரூபி
நாதாந்தத் துட்பொருளே அகோர வீரி
நாரணியே காரணியே தேவி சத்தி
மூதாந்த சித்தருட பரையே துர்க்கி
மூவருக்கும் முதற்பொருளே யானதாயி
மாதாந்த தவள்யீன்ற சித்த வல்லி
மாமுகத்தோன் புலத்திரட்டு காப்புத் தானே.

ஆ. முடிவு

அழுந்துவார் சாத்திரத்தை நிசமென் றெண்ணு
அடவான பெரியோரை வணங்கிக் காரு
நழுந்துவார் பொயொன்று சொல்லொண் ணாது
நாதனுக்கு ஆளாக வேணு மென்றாற்
கொழுந்துபோல் ரூபத்தை நோக்கிப் பாரு
கோபமொன்று மாகாது குணமே வேணும்
செழுந்திருக்கும் போகருட கடாட்சத் தாலே
சேர்ந்திருக்கும் புலிப்பாணி பலதிரட்டு முற்றே. (40)
புலிப்பாணி பலதிரட்டு முகிந்தது. முற்றும்.

## 1059. மருந்து செய்முறை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 813–2
ஆ. ல/213

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. மருந்து செய்முறை
இ. மருத்துவம்
ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு; 20 பக்கம்
ஆ. நீளம் 3·8 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.
உ. வெவ்வேறு கையெழுத்து.
ஊ. நல்லநிலை
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

**தாம்பிர வெட்டை பஸ்பம்**

..செய்து துட்டுகாச்சி புளியரணைச் சாற்றில் பத்து தரம் துவைத்து எடுத்து, தகடாயடித்து, கத்தரித்து, துணுக்குத் துணுக்காய் செய்து, கருஞ்செம்பிலையும் உப்பும் சேர்த்து அரைத்து, பத்து பலம் இலை சுமாருக்கு அரைத்து அடைபோல தட்டி தாம்பரத்த கட்டைப் பரப்பி மேலும் அடைமூடிக் கையால் பிடித்து, சீலை மண் செய்து, கசபுடத்தில் போட வெட்டை யாகும்.

ஆ. முடிவு

வெள்ளைப் பாஷாணம் சுத்தி:- பூநீரும் சுண்ணாம்பும் சிறுநீரில் அரைத்து, தோளாந்திரங் கட்டி, 4 நாழி எரிக்கவும். தாளகம் மனோசிலையும் ஒண்ணாய்க் கட்டி வைக்கவும். கவுரி பாஷாணம் சுத்தி:- வண்ணான் வெள்ளாயில் துணியில் முடிந்து நடுவே வேக வைத்தால் சுத்தியாகும். எடுத்துக் கொள்ளவும்.

5. பிற செய்திகள்

சந்தனாதித்தைலம், காமகேசரி லேகியம், சவுரிதைலம், அகத்தியர் அருளிச்செய்த பால சிகிச்சை, கர்மநிவர்த்தி' சர்வ மேகத்துக்கு எண்ணெய், மதனகாமேஸ்வரம், அந்திகாமாலைக் கண்ணுக்கு மை போடறது, வாதத்துக்கு லேகியம், அகத்தியர் அருளிச்செய்த காலபயிரவி மாத்திரை-என இவ்வாறு வெவ்வேறு தலைப்புகளில் உள்ள வெவ்வேறு ஏடுகள் ஒன்றாய்க் கலந்துள்ளன

## 1060. சிதம்பர புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 814
ஆ. ப/38

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருமலைநாதர், புராண.
ஆ. சிதம்பர புராணம்
இ. தலபுராணம்
ஈ. செய்யுள் 412

3. தோற்றக் கூறுகள்

அ. 51 ஏடு; 102 பக்கம்.
ஆ. நீளம் 30 செ. மீ; அகலம் 3.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9, 10 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூங்கமலத் தயனுமலர்ப் புண்டரீகக் கண்ணனுந்
தாங்குபல புவனமுமேற் சகலமுமா யகலாத
ஓங்குமொளி வெளியேநின்று உலகுதொழ நடமாடுந்
தேங்கமழும் பொழில்தில்லைத் திருச்சிற்றம் பலம்போற்றி (1)

ஆ. முடிவு

சேவடிசேர் பொழிலணி புலியூர் வளந்தா
செல்வம் பெருகுக திருமந்திர கோடினடி
சேரொளி தெளிகுறி கூடுக்குழு மறைசூழ்க
பொடிசேர் வடிவின்னடிசேர் முடியினர் புனல்
சேரிரு விழியின ராகியடி......
.. .. .. ..
சேர்நிலையற வாழ்வா னடியவர்வாழ் வாரே. (51)
திருவிழாச் சருக்கம் முற்றும். ஆகத் திருவிருத்தம் 412.
சிதம்பர புராணம் முடிந்தது.

5 பிறசெய்திகள்

ஈற்றில், 'சிதம்பர புராணம் முடிந்தது. முற்றும். இனி கோவிற் புராணம்' என உள்ளது. ஆனால் கோவிற்புராணம் காணப்படவில்லை. ஈற்றிலுள்ள பாடலடிகளும் சரியாக எழுதப் பெறவில்லை.

## 1061. விருத்தாசல புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 815

ஆ. ப/39

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .........

ஆ. விருத்தாசல புராணம்

இ. தலபுராணம்

ஈ. செய்யுளும் உரைநடையும் 433
அச்சில் ஏறத்தாழ 350 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 153 ஏடு; 306 பக்கம்.

ஆ. நீளம் 30 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9, 10 வரி.

உ. சுமாரான நிலை

ஊ. முதலில் சில ஏடுகள் பழுதுபட்டுள்ளன, எனினும் சுமாரான நிலை

எ. முழுமை

## 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

வெள்ளைக் கலையுடுத்தி வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தே வீற்றிருப்பாள் — வெள்ளை
அரியா சனத்தே அரசனோ டென்னைச்
சரியாசனத் தில்வைத்த தாய்.

ஆ. முடிவு

(எ-து.)மாதம் மூன்று மழை சம்பூர்ணமாகப் பெய்க. சகல பாக்கியமும் நிறைவு பொருந்திய பூமி பொங்கி வாழ்க. இந்த தேசத்தை ரட்சிக்கிற ராசாக்கள் வாழ்க. சர்வ உயிருக்குயி ரான சிவனுட பூசை நலம் பெறச் செய்து முடிக்க. சிவனடியார் களெங்கும் நிறைந்து வாழ்க. பூமியிலுள்ள சகல செந்துக்களும் மிகுதியாய் வாழ்க. விபூதி, ருத்திராட்சம், பஞ்சாட்சரமும் விளங்கி வாழ்க என்றவாறு. சசிவர்ண சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் 85க்குக் கூடின விருத்தம் 433,

இ. பிற்குறிப்பு

சவுமிய வருஷம் ஆவணி மாதம் 16 வியாழக்கிழமை துவாதசி, உத்திராட நட்சத்திரம், சாமத்துக்கு மேல் துலா லக்கினத்தில் இராயவேலூர் சைதாப்பேட்டையிலிருக்கும் மலையரையன் குலத்தில் வந்த பெரியடைக்கலம் குமாரன் அண்ணாசாமி எழுதி நிறைந்தது.

5. பிறசெய்திகள்

இறுதி ஏட்டில், 'விருத்தகிரிப் புராணம் அட்டவணைச் சருக்கங்கள் அறியும்படி' எனப் பாடல் விபரங்கள் குறிக்கப்பட்டுள்ளன.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்

........................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1062. திருவாதவூரர் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 816

ஆ. ந/84

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. கடவுள் மாமுனிவர்

ஆ. திருவாதவூரர் புராணம்: மூலமும் உரையும்.

இ. காப்பியம்

ஈ. செய்யுளும் உரைநடையும்

அச்சில் ஏறத்தாழ 600 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 280 ஏடு; 560 பக்கம்.

ஆ. நீளம் 39 செ.மீ.; அகலம் 2 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. *சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பவளமால் வரையினில் வெறிப்பது போல
பரந்தநீற் றழகுபச் சுடம்பிற்
திவளமா துடன்நின் றாடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமா மருப்பொன் றொடித்தொரு கரத்திற்
தரித்துயர் கிரிப்புற மெழுதுங்
கவளமா களிற்றின் திருமுகம் படைத்த
கடவுளை நினைந்துகை தொழுவாம்.

ஆ. முடிவு

பூமி தேவியும் வாழ்க, அந்தப் பூமி மேலே இருக்கின்ற சகல சீவராசிகளும் பிழைக்கும்படி பொன் மழை பொழிந்து வாழ்க. வேதமும் ஆகமும் சாஸ்திரங்களும், புராணங்களும். சகல கலைக் கியானங்களும் பிரகாசமாய் வாழ்க. இராசாக்களி னுட செங்கோலின் நீதி தப்பாமல் செழித்து வாழ்க. பொல்லாத வினைகளெல்லாம் தீர்க்கப்பட்ட பஞ்சாட்சரமும் திருநீறும் சிவ சமயமும் சிவனடியார் அனைவர்களும் வாழ்க. வாதவூருட புராணத்தைப் படித்த பேரும், படித்த பொருளைக் காதாரக் கேட்ட பேரும், கையார வழங்கின பேரும் மனமகிழ்ச்சியாய் அம்பலவாண சுவாமியாருடைய பாதார விந்தம் சேர்ந்து அழியாப் பதவியிலே மார்க்கண்டத்திரம் சிரஞ்சீவியாய் வாழ்ந் திருப்பார்கள் என்றவாறு.

திருவடி பெற்ற சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் 85ம் கூடிய திருவிருத்தம் 544.

இ. பிற்குறிப்பு

"ரக்தாட்சி வருஷம் மாசி மாதம் 27 ஆம் தேதி வெள்ளிக்கிழமை ராயவேலூரில் இருக்கும் சைதாப்பேட்டை அருணாசல ஆசாரி அவர்கள் குமாரன் பாலகிருஷ்ணன், இராமசாமி இருவரும் படிக்கின்ற வாதவூரர் புராணம் எழுதி முடிந்தது அடைக்கலம் குமாரன் அண்ணாசாமி எழுதிச் சொல்லி வரப் பண்ணது. இது அறியவும்"

## 1063. அரிச்சந்திர நாடகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 817

ஆ. ற/48

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. அரிச்சந்திர நாடகம்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 400 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 157 ஏடு; 314 பக்கம்.

ஆ. நீளம் 35 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. நல்ல நிலை.ஏட்டெண் 15 தவறாக இருமுறை எழுதப் பட்டுள்ளது.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

தினகரன் குலத்தில் வேந்தன்
திரிசங்கு தந்த பாலன்
மனமகிழ் அயோத்தி மன்னன்
மருவரிச் சந்திரன் கீர்த்தி
புனைதரு நாட கத்தைப்
புகழுடன் பாட வேதான்
வினைதவிர்த் தருளுஞ் சத்திய
விநாயகன் காப்புத் தானே.

### ஆ. முடிவு

**மங்களம் தரு**

செய மங்களம் நித்திய சுப மங்களம்
பார்வதி மனோகரர்க்கு மங்களம்.
திரிசங்கு மைந்தனுக்கும் தர்ம சொரூபனுக்கும்
அரிசந்திரனுக்கும் மங்களம்.
அம்புச வடிவனுக்கும் அங்குச லோசனுக்கும்
அன்பத்தாறு தேச மண்டலா தியனுக்கும்
செயமங்களம் நித்திய சுபமங்களம்.
தங்குமணி மார்பனுக்கும் சற்குண தயாநிதிக்கும்
சத்திய மொழி யானவர்க்கும்
செயமங்களம் நித்திய சுபமங்களம்.

### இ. பிற்குறிப்பு

இராய வேலூரில் இருக்கும் சைதாப்பேட்டையில் இருக்கப்பட்டமலையரையன் குலத்தில்வந்த பெரிய அடைக்கலம் குமாரன் அண்ணாசாமி பிரமோதூத வருஷம் மாசி மாதம் 26 ஆம் தேதி திங்கட்கிழமை பிரதமை பூச நட்சத்திரத்தில் சிவ கதையா யிருக்கப்பட்ட அரிச்சந்திர நாடகம் எழுதி நிறைந்தது. **சம்பூரணம்.**

# 1064. கந்தர் சாதக ஆரூடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 818–1

ஆ. வ/42

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. கந்தர் சாதக ஆரூடம்

இ. சோதிடம்

ஈ. செய்யுள் 101

3. தோற்றக் கூறுகள்

அ. 18 ஏடு; 35 பக்கம்.

ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. தெளிவான கையெழுத்து. மெய் யெழுத்துகளுக்குப் புள்ளி இடப்பட்டுள்ளது.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பொருந்திய திரிகோ ணத்தில் பொல்லாத பாவர் நிவர்த்தி
வருந்திய நாலு பேரும் மதிரவி கூடி நின்றால்
திருந்திய மனைநி பந்தந் தெய்வமும் வடக்கே சொல்லு
பொருந்திய மனைத்தி தேர்த்தி புதுமனை கட்டு வானே.

ஆ. முடிவு

இப்படி ராசி தானும் எண்ணியே பலம றிந்து
மெய்ப்படி கிரகந் தன்னை வீடுக ளறிந்து நன்றாய்

மெய்ப்படி ஆட்சி உச்சம் மேஷங்கள் முதலாய்ப் பார்த்து
அப்பனே மனத்திற் தானும் அன்புடன் பலனைச் சொல்லே.

இ. பிற்குறிப்பு

'அ. கி. கு. தண்டபாணி ஆசாரி புஸ்தகம்'

5. பிற செய்திகள்

இறுதி ஏட்டில் 'இதுக்கு அட்டவணை' என்ற தலைப்பில் ஒரு பக்கத்தில் அட்டவணை எழுதப்பட்டுள்ளது.

## 1065. சல்லிய ஆரூடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 818–2

ஆ. வ/42

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . .

ஆ. சல்லிய ஆரூடம்

இ. சோதிடம்

ஈ. செய்யுள் 15

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 5 பக்கம்.

ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மேஷத்தில் வந்துநின்று மேவி யழைத்திட்டால்
தோஷமிக மெத்தவுண்டு சொல்லக்கேள் — சேஷமிகு
அந்த மனையில் அணுகி யிருக்குதுபார்
வந்தபெண்டீர் சாவேண்டும் பார். (1)

ஆ. முடிவு

நல்லமனை மீனமது நாடிக் குழிமாறி
சொல்லுமிகுங் கீர்த்தியுள்ள சோதிடமாம் — வல்லவர்க்கும்
இராத்திரி பத்தேழில் முடிந்து வருந்தாது
கோத்திரத்திற் கூறுங் குலை. (15)

## 1066. போகர் ஆருடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 818–3

ஆ. வ/42

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. போகர்

ஆ. போகர் ஆருடம்

இ. சோதிடம்

ஈ. செய்யுள் 30

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.

ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. தெளிவாக உள்ளது.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சொல்லவே ஆரு டந்தான் சுகமுடன் கேளு மன்னா
நல்லதோர் எட்டு பத்து நாடியே சனியே நின்றால்
வல்லதோர் பூமி யாலே வழக்குமே நினைத்துக் கேட்பாய்
சொல்லவே ராகு நின்றால் துன்பத்தை நினைத்துக் கேட்பாய்.

ஆ. முடிவு

சூரிய நாலே வீடு சுக்கிர நாலே பெண்ணு
காரியி நாலே விருத்தி கனகநால் தனங்கள் சொல்லு
பூரிக்கும் புதநால் யோகம் பூமியுஞ் செவ்வா யாலே
வாரிக்கு நஞ்சை புஞ்சை மதியினா லறிந்து சொல்லே. (30)

இ. பிற்குறிப்பு

'அ. கி.கு. தண்டபாணி ஆசாரி புஸ்தகம்.'

## 1067. சாதகாலங்காரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 818–4

ஆ. வ/42

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . .

ஆ. சாதகாலங்காரம்: 12 பாவ பலன்

இ. சோதிடம்

ஈ. செய்யுளும் உரைநடையும் 98
அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 82 ஏடு; 164 பக்கம்.
ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவுடன் கூடிய கையெழுத்து.
ஊ. நல்ல நிலை,
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பகலவர்க் காட்சிச் சிங்கம் பரிந்திடு மேஷம் உச்சம்
முகில்தனு மீனம் நட்பு முந்துரு துலாந்தா னீசம்
மகரருக்குக் கடகங் கன்னி மிதுனந்தேள் ரிஷிபங் கும்பம்
கனிமொழி மயிலே யாரும் பகையென விரிந்து கூறே. (1)

ஆ. முடிவு

வ்ய சம்பந்தக் கிரகம் பாபராய்ப் பகைநீச சீரண மூடமாய் இருக்கச் சுபக்கிரகம் தன் பாக்கியத்திலிருக்க வியத்தில் பகை நீச பாவம் கோணிற் கவிவன் செல்வமெல்லாம் சத்துரு வாலும் நோயாலும் சோரத்தாலும் சேதமாம். சுபக் கிரகமும் பாவகிரகமும்நீச உச்சராய் நிற்கின்றமையும் தின்மையும் சரி பலனாகவரும். அவரவர் திசை வருங்காலம் கிரக வலி அறிந்து நிச்சயமாகப் பனிரண்டுராசியும் சொல்வ தென்றவாறு. பீமநாதன். (98)

சாதக வலங்காரம். துவாதச பாவகம். விருத்தப்பா.

முற்றும்.

இ. பிற்குறிப்பு

'ஸ்தபதி. அ. கி. கு. தண்டபாணி ஆசாரி பொஸ்தகம்'

5. ......................
6. ......... . ............

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1068. சோதிடச் செய்திகள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 819

ஆ. வ/43

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. சோதிடச் செய்திகள்

இ. சோதிடம்

ஈ. அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 38 ஏடு; 76 பக்கம்.

ஆ. நீளம் 19 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8, 9 வரிகள்.

உ. மிகவும் சிறிய கையெழுத்து.

ஊ. முதல் மூன்று ஏடுகள் இல்லை. பிற நல்ல நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

| | | | |
|---|---|---|---|
| அசுபதி 50 | புனர்பூசம் 30 | அஸ்தம் 22 | மூலம் 20 |
| பரணி 14 | பூசம் 20 | சித்திரை 20 | பூராடம் 16 |
| கார்த்திகை 30 | ஆயிலியம் 32 | சுவாதி 15 | உத்திராடம் 30 |
| ரோகணி 40 | மகம் 30 | விசாகம் 14 | திருவோணம் 30 |
| மிருகசீரிஷம் 14 | பூரம் 20 | அனுஷம் 30 | அவிட்டம் 30 |
| திருவாதிரை 21 | உத்திரம் 18 | கேட்டை 14 | சதயம் 18 |

பூரட்டாதி 16
உத்திரட்டாதி 30
ரேவதி 30

இதன் மேல் 4 நாழிகை விஷ கடிகை என்பது.

ஆ. முடிவு

..சூரியன் பிராண திசை நாள் 1, நாழிகை 41, சந்திரன் பிராண திசை நாள் 2, நாழிகை 48, வினாடி 20, செவ்வாய் பிராணதிசை நாள்1, நாழிகை 57, வினாடி 50க்குப் பிராண திசை நாள் 5 நாழிகை 2, வினாடி 20. குரு பிராணதிசை நாள்4 நழிகை 28, வினாடி 40, சனி பிராணதிசை நாள்5, நாழிகை14 வினாடி 50, புதன் பிராணதிசை நாள்4, நாழிகை 46, வினாடி 10, கேது பிராணதிசை நாள் 1, நாழிகை 57, வினாடி 50. இந்தப்படி மற்ற மகா திசையிலும் ஐந்து பங்காய் புத்தி விதித்துக் கொள்ளவும்.

## 1069. சடாட்சர அந்தாதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 820
ஆ. ய/51

2 உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. சடாட்சர அந்தாதி (ஆறெழுத்தந்தாதி)
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 30 ஏடு; 60 பக்கம்.
ஆ. நீளம் 18 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. சுமாரான கையெழுத்து
ஊ. முதல் 5 ஏடுகள் முறிந்துள்ளன. (21—24, 29) ஆக ஐந்து ஏடுகள் காணப்படவில்லை. சுமாரான நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆனந்த மாறெழுத் தாலைய மாமென தங்க
தானந்த மானமுதற் பொருளாயி சதாங்க......
மோனந்த முன்னுள் தென்னுள் தென்னுள்......
ஈனந்தம் போக்கி என்னை நீய தாக்கிய யென்......

ஆ. முடிவு

வையஞ் சலமங்கி காலவான் பலவுயிர் வான்முடியோடு
எய்யும் பரமுதற் சார்வதெல் லாமெம்பி ரான்முருகா
தெய்யநின்று நின்றாட் சிலம்போ சைத்திரு விளையாட
தைய்யநின் னங்கம தென்னங்க மாய்நின்ற வானந்தமே.
சடாட்சர அந்தாதி முற்றிற்று.

## 1070. ஆரூட நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 821
ஆ. வ/44

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. ஆரூட நூல் (கயிறு சார்த்திப் பார்க்க)
இ. சோதிடம்
ஈ. செய்யுளும் உரைநடையும், அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 76ஏடு; 152 பக்கம்
ஆ. நீளம் 20 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு பலவித வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. சுமாரான நிலை, சில ஏடுகள் பழுது.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கர்ப்பமே யொன்று நன்று ஒன்றுமே தோன்று மாகில்
நர்தந் தருமெப் போது நாயக னருளினாலே
கர்ப்பக மொன்று தோன்றில் காரியம் நன்மை யாமே.

இந்தக் கயிற்றில் 1·1·1· ஆக உருப்படியினால் தெய்வ சகாயமுண்டு. நினைத்த காரியம் செயுமாகும்,

ஆ. முடிவு

உத்தம தோன்று மிரண்டு ரெண்டுமே தோன்றுமாகில்
நத்தமா மாயுங் கோபம் நயமதாம் விட்டு ரைக்கில்
சித்தமா மடந்தை யாலே தோப்புடன் மரமும் வைக்க
மெத்தமாம் மச்சு செல்வம் வேண்டிய பொருளும் உண்டாகும்.

இந்தக் கயிற்றில் 1 + 2 + 2 ஆக உருப்படிக்கு . . . . . . காரியம் நன்மை . . வீடு கட்ட நன்மை யாகும். தோப்பு வைக்க விருட்சம் உண்டாகும். நன்மை உத்தமம்.

## 1071. இராஜ வாஸ்து யந்திரவிதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 822

ஆ. ற/49

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .

ஆ. இராஜ வாஸ்து யந்திர விதி

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள் 36

## 3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.
ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 6 வரி
உ. இரண்டு வித கையெழுத்து.
ஊ. நல்ல நிலை,
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

சொல்லுகிறேன் எந்திரத்தில் வாஸ்து எந்திரம்
    தொல்புவியில் அரிதாகும் அவசுகத்தைக் கேளும்
எல்லைகளும் மந்தைவெளி கோட்டை சாலை
    இயல்சோலை வனங்களும் இந்நகர நாடுகிராமம்
சொல்லஅர மனையோடு ஆஸ்த்தான கூடம்
    தேறுநிலம் ஆலையங்கள் வியாபார ராச கூடம்
அல்லவிலாச் சுகப்படவே சல்லிய வாஸ்த்தில்
    அருள்சபித்த குறுமுனி யின்னமுத வாக்கே. (1)

### ஆ. முடிவு

சோதனையாம் மந்தைகளுக்கு எந்திர பீசம்
    சொற்பமென்றால் அனுமந்தம் தோற்கு வாஸ்த்து
சாதனையாம் திக்கறிந்து அவ்வாஸ்த்து பீசம்
    தாக்குவது ஏவல் பில்லி தவ்வூ றண்டா
ஏதியனல் சொற்பல்கம் ராச வசியம்
    புகழ்சம் பந்தகலை பொன்னா லாடு
வாதிவிஷக் காலியரும் குபேர நாடாம்
    வையகம்வாழ் சல்லியரும் வாக்கொப் பாமே. (36)

### இ. பிற்குறிப்பு

'இப்படிக்கு பு.கீ.ரா. வேங்கடாசலம்பிள்ளை நெட்டெழுத்து' என ஏட்டின் பின்னால் எழுதப்பட்டுள்ளது.

5. பிற செய்திகள்

முதல் 10 ஏட்டில் 36 பாடல்கள் வரை உள்ளன. அடுத்த மூன்று ஏட்டில் 32 முதல் 36 வரை உள்ள பாடல்கள் மறுமுறை வேறு ஒருவரால் எழுதப்பட்டுள்ளன.

## 1072. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 823

ஆ. ல/214

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .

ஆ. மருத்துவச் செய்திகள்

இ. மருத்துவம்

ஈ. அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 18 ஏடு; 36 பக்கம்.

ஆ. நீளம் 26 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு பலவித வரி.

உ. சிறிய கையெழுத்து. எந்திரங்களும் உள்ளன

ஊ. சில ஏடுகள் சற்றே சிதைவு, எனினும் சுமாரான நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

முச்சுண்ண விவரம் :

நண்டோடு 1 பலம், முட்டை ஓடு 1 பலம், நாகர வண்டோடு 1 பலம், கொடுக்கள்ளிச் சாறு விட்டு அரைத்து, வில்லை தட்டி, புது ஓட்டில் வைத்து, மேலும் ஓடு மூடி, 10 எருவில் புடம் போடவும்,

ஆ. முடிவு

சங்குத் திருமுகம் என்முகம் பாராய்
சக்கரத் திருமுகம் என்முகம் பாராய்
எங்குந் திருமுகம் என்முகம் பாராய்
எழுகடலும் சந்திரனும் எனக்கோத
வியாவார உச்சியில் மகாரமிட்டு
உயரங்கு சிகாரமிட்டு பிச்சகத்தின்கீழ்
நகாரமிட்டு பிறைவட்டஞ் சூலஞ் செய்துமெச்சித்த
சித்தரெல்லாம் வினையது நீக்க வல்லாரே,
(பாடலடிகளில் சீர் ஒழுங்கு இல்லை)

## 1073. கும்பமுனி நவக்கிரக கக்கிசம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 824

ஆ. மு/28

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. கும்பமுனி

ஆ. கும்பமுனி நவக்கிரக கக்கிசம்

இ. மாந்திரீகம்

ஈ. செய்யுள் 95

## 3. தோற்றக் கூறுகள்

அ. 25 ஏடு; 50 பக்கம்.

ஆ. நீளம் 20 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்குப் பலவித வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. 25 ஆம் ஏடு முறிந்துள்ளது. சில ஏடுகள் சிதைவு, சுமாரான நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

இந்து ரவிதளவாய் ஏடாய் வெளியொளியாய்
அந்தரங்க மான அரும்பொருளாய் — வந்தகுமா
திக்குவிசயஞ் செலுத்தும் நவக்கிரக சக்கிசத்
துக்குள் ளிருந்தாள் காப்பு. (1)

ஆ. முடிவு

சொன்னேன் கிரகங்கள் மந்திர மூலம்
சுப்பிரமணியர் பூசையும் தோத்திரமும் சொன்னேன்
முன்னே மானத சடாதார பூசை
முன்னிமுது மெந்திரங்கள் யாவுஞ் சொன்னேன்
பின்னேஎன் குருவடுகன் பூசை சொன்னேன்
பேர்வாரம் ஓரையும் வேளையும் சொன்னேன்
பொன்னேகேள் தகடுவக்குந் தலங்கள் சொன்னேன்
புண்ணியபா வங்களும்புத் தியுஞ்சொன் னேனே.(93)

## 5. பிற செய்திகள்

93 ஆம் பாடலை அடுத்து 94, 95 ஆகிய இரண்டு பாடல்களுடன் நூல் நிறைவு பெறுகிறது. ஆயின், அந்த இரண்டு பாடல்கள் உள்ள ஏடு இடது புறம் பாதி முறிந்துள்ளது.

## 1074. சோதிடச் செய்திகள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 825

ஆ. வ/45

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. ..........

ஆ. சோதிடச் செய்திகள்

இ. சோதிடம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 53 ஏடு: 106 பக்கம்

ஆ. நீளம் 24·5 செ. மீ.; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது. இடையிடையே சில ஏடுகளில் இடம் விட்டு எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு பலவித வரி.

உ. சிறிய அழகிய கையெழுத்து

ஊ. 1–12, 23–104 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. பிற நல்ல நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உச்சமென நவக்கிரகம் இருக்கும் வண்மை
உணர்ந்தறியும் படிமேடத் துறையும் வெய்யோன்
மெச்சுமிட பத்திற்சந்திரன் மகரச் செவ்வாய்
விரவியதோர் கன்னிதனில் மேவியிடும் புதனுஞ்

அச்சமறக் கடகத்தில் அரசனும் வந்திருக்க
அணிமீனார் இதனில்அமர்ந் திடுசுக் கிரனும்
வச்சிரமாந் துலாமதனிற் காரி தானும்
வந்திருந்தா லுச்சமென வழுத்த லாமே. (1)

ஆ. முடிவு

கேருமே கர்ப்பஸ்தானம் கிரேதாயுகம்
பாருந்தி ரேதாயுகம் பனிக்குடம்
சேருந்து வாபரயுகம் சிரையோதையம்
காரும்பூ வுதையம் கலிச்செப்புமே.

## 1075. மருந்து செய்முறை

1. நூலகக் குறிப்புகள்

அ. 826

ஆ. ல/215

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. மருந்து செய்முறை

இ. மருத்துவம்

ஈ. அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 77 ஏடு; 154 பக்கம்

ஆ. நீளம் 30 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. 1, 9, 10, 36, 49 ஆக 5 ஏடுகள் காணப்படவில்லை
உள்ளவை நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஏலம், சாதிக்காய், சாதிபத்திரி, லவங்கம், லவங்கப் பத்திரி, அதிமதுரம், இந்த தினுசுக்கு 1 பலம், இவை எல்லாம் வெந்நீர்விட்டு அரைத்து எண்ணெயில் போட்டுக்கிறது. சாறு வகை—கிழங்குச்சாறு வகை. கடை தினுசுகள்—இதுகள் ஒன்றாய்ச் சேர்த்துக் காய்ச்சி மெழுகு பக்குவத்தில் இறங்கிக் கொண்டு. சகல மேகத்துக்கும் கொடுக்கவும். ரோகம் பலமாயிருந்தால் கடின பத்தியமாய் இருக்க வேணும். சொற்ப ரோகத்துக்கு இச்சா பத்தியமாய் இருக்க வேணும். கை கண்டது.

ஆ. முடிவு

ஒருசேர் விளக்கெண்ணெயில் ஒருசேர் பிரமதண்டி ரசம் விட்டு, சவ்வீரம் 1 வராகனெடை, கந்தகம் 2 வராகனெடை இந்த இரண்டு தினுசும் பொடி செய்து போட்டு அரைப்பலம் சேரான் கொட்டை நறுக்கிப் போட்டு ரசம் சுண்டக்காய்ச்சி இறக்கிக்கொண்டு சிரங்குகளுக்குத் தடவி இலுப்பைப் புண்ணாக்கு தடவவும். நானம் செய்யவும்.

## 1076. மருந்து செய்முறை

1. நூலகக் குறிப்புகள்

அ. 827

ஆ. ல/216

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. மருந்து செய்முறை

இ. மருத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்.

அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 55 ஏடு; 110 பக்கம்.

ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 2•5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு பலவித வரி.

உ. அழகிய தெளிவாக கையெழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மருத்தனை தன்னை யழைக்க வந்தவன் தன்னைப் பார்த்து
திருத்தமாய்க் கிழக்கி லிந்திரன் செப்பிய நல்ல தாகும்
எரிக்கும் அக்கினி யித்தி இப்போது மரண மென்க
பரித்திடு எமன்திக்கு பயித்திய மோடு ஊனந் தானே. (1)

ஆ. முடிவு

சிரங்கு நமைச்சலுக்கு

தேங்காய்ப் பால் 3 சேர், ஏலம் 1 பலம், பெருங் கிழங்கு 1 பலம், தும்பை யிலைச் சாறு 2 பலம், நெல்லிக்காய் கந்தகம் 1 வராகன் எடை, பூரம் 1 வராகன் எடை, கந்தகம் பூரா பொடி செய்து, தேங்காய்ப் பாலில் ஏலம், பெருங்கிழங்கு, தும்பையிலைச் சாறு விட்டரைத்து, அடுப்பேற்றிக் காய்ச்சி யிறக்கும்போது, மேற்படி பூரம், கெந்தி தூள்போட்டு இறக்கவும் அண்டம் உள் வெள்ளை அம்பிலி விட்டு மெழுகு பக்குவமாகக் காய்ச்சி இறக்கி வைத்துக் கொண்டு நமைச்சல், சிரங்குகள் இதுகளுக்கு 3 தினம், மேலே பூசி ஊற வைத்து, இலுப்பைக் கட்டி, சீக்காளம் பட்டை இது போட்டுத் தேய்த்து, பச்சை தலத்தில் குளிக்கவும்.

5. பிற செய்திகள்

இச்சுவடி, அவ்வப்பொழுது எழுதிச் சேர்க்கப் பெற்ற குறிப்புகளின் தொகுதியாகக் காணப்படுகிறது.

இடையிடையே தமிழுடன் தெலுங்கு எழுத்திலும் எழுதப் பட்டுள்ளன.

சுவடியின் இறுதியில் சில பேர்களின் 'திதி' குறிப்புகளும் எழுதப்பட்டுள்ளன.

## 1077. தில்லைச் சிற்றம்பலநாடி கலித்துறை

1. நூலகக் குறிப்புகள்

அ. 828—1

ஆ. டீ/163

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . .

ஆ. தில்லைச் சிற்றம்பலநாடி கலித்துறை

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 55

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம்.

ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 21, 22 வரி.

உ. மிகவும் சிறிய கையெழுத்து

ஊ ஓரளவு பழுதற்ற நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

செய்யபுகழ் மேனியனைத் தேவர்தொழுந் (தேசிகனை)
மெய்யருளும் பொய்யா விநாயகனை — வையமெல்லாங்
காத்தானை யார்க்கும் இளையானைக் கந்தர்க்கு
மூத்தானை நாவே மொழி.

சீர்கொண்ட காழிச் சிற்றம்பல நாடிநற் தேசிகனைப்
பார்கொண்டு போற்றவோர் பாமாலை
சொல்வனிப்பனுவலுக்கே
ஏர்கொண்ட சீர்தளை யெல்லாம்நிறைந்து யிலங்கியிடப் ௬
போர்கொண்ட மும்மதக் கற்பக யானையைப் போற்றுதுமே.(1)

ஆ. முடிவு

ஒன்றென்று சொல்பவர் சொன்னாலுஞ் சொல்லுக
வொன்றிரண்டாம்
என்றென்று சொல்பவர் சொன்னாலுஞ் சொல்லுக
வேத்தியன்பர்
சென்றங்கு நல்குசிற் றம்பல நாடி சிரபுத்தோன்
அன்றன்றி தாமென்று சொல்லாத முத்தி யளித்தனனே. (55)

கலித்துறை முற்றும்.

## 1078. தில்லைச் சிற்றம்பலநாடி வெண்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 828–2
ஆ. ட/163

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. தில்லைச் சிற்றம்பலநாடி வெண்பா
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 64

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 5 பக்கம்.

ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 21, 22 வரி.

உ. சிறிய தெளிவான கையெழுத்து.

ஊ. ஓரளவு பழுதான நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

என்னை வினையறியா யானு மதுவறியேன்
முன்னை வினைகூடன் மொழிந்தருளாய் — என்னத்
திருவார் பொழிற்காழிச் சிற்றம் பலவன்
தருவானு நானென்றான் தான். (1)

ஆ. முடிவு

கால்வாங்கி யேங்கியது கான......
மேலாங் குணர்வொடு மீதெளியும் — மாலாய
சாக்கிரத்தி லைந்தவத்தை சண்பைச்சிற் றம்பலவன்
போக்கியபின் தந்தான் பொருள். (64)

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1079. கழிகாலத்திரங்கல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 828–3

ஆ. ட/163

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .........

ஆ. கழிகாலத்திரங்கள்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 55 கண்ணிகள்

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 3 பக்கம். (ஏடு 6 முதல் 7 வரை)

ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 21, 22 வரி.

உ. சிறிய தெளிவான கையெழுத்து

ஊ. ஓரளவு பழுதுற்ற நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரார் திருநீறுந் தீதிலருள் வேடமுமுன்
சேரா மலையோ தெளியா திருந்தனமே.

வந்து பிறந்திறந்து மானிடராய்....
எந்தைபணி செய்வதற் கென்றெண்ணாதி ருந்தனமே. (2)

ஆ. முடிவு

மெய்யனைய வந்தருளு மேனியன்தான் மேனியன்றே
கையிணைகள் கூப்பிக் கசிந்துருகப் பெற்றிலமே. (54)

நிலையாம் பொருளின் நிறுகத் துங்குருவைத்
தலையால் வணங்காமற் தாழ்வுசெய்து விட்டனமே. (55)

கழிகாலத் திரங்கல் முற்றும்.

## 1080. நிகழ்காலத் திரங்கல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 828—4

ஆ. ட/163

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. . . . . . .

ஆ. நிகழ்காலத் திரங்கல்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 50 கண்ணி

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 3 பக்கம் ( ஏடு 7 முதல் 8 வரை )

ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 5 செ மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 21, 22 வரி.

உ. சிறிய கையெழுத்து.

ஊ. ஓரளவு சிதைந்த நிலை

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உன்னரிய ஞான முருவாகி வந்தருள்
னென்னதவஞ் செய்தேன் முன்னியாமென் றறிந்திலமே. (1)

ஆண்டருள வேணுமென்னு மாசையோ நல்லறமோ
வேண்டியெமை யாளமெய் கண்டான் வந்ததுவே. (2)

ஆ. முடிவு

போக்குவர வற்றிருக்கும் பூரணர்தாம் மன மிசையில்
ஆக்கை யுடன் வந்த தரவுமதி செயமெ. (49)

எங்குநிறைந் தவர்தா மேக வுருவாகிச்
செங்கமலத் தாள்வழங்கச் சேர்ந்த ததிசெயமே. (50)

நிகழ்காலத்திரங்கல் முற்றும்.

# 1081. வருங்காலத் திரங்கல்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 828—5

ஆ. ட/163

## 2 உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. வருங்காலத் திரங்கல்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 51 கண்ணிகள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 3 பக்கம். (ஏடு 8 முதல் 9 வரை)

ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 21, 22 வரி.

உ. சிறிய அழகிய கையெழுத்து

ஊ. ஓரளவு சிதைவு

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தோன்றி மறையுமிந்தத் தொல்லுலகு தோன்றாமல்
ஆன்ற வறிவுநா மாய்விடுவ தெக்காலம். (1)

ஆரணன் மால்காணா வறிவாய் அகண்டமுமாம்
பூரணத்துக் குள்ளே புகுவதினி யெக்காலம். (2)

ஆ. முடிவு

அவயோகந் தன்னி லாசையற வொன்றுஞ்
சிவயோகத் தானந்தந் தேசிகனே தந்தருளே. (50)

சத்திய ஞானமனந் தானந்தந் தானாகி
நித்தனா மாய நின்மலனே தந்தருளே. (51)

வருங்காலத்திரங்கல் முற்றும்.

## 1082. சிற்றம்பல நாடிகள் தாலாட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 828–6

ஆ. ட/163

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .

ஆ. சிற்றம்பல நாடிகள் தாலாட்டு

இ. தத்துவம்
ஈ. செய்யுள் 63 கண்ணி

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம். (ஏடு 9 முதல் 10 வரை)
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 21, 22 வரி.
உ. சிறிய தெளிவான கையெழுத்து.
ஊ. ஓரளவு சிதைவு
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உலகுபுகழ் மெய்கண்டா னுண்மைஞா னாகரத்தின்
பலனுணர்ந்த சிற்றம்பல நாடித் தேசிகனே. (1)

வாயே மனமே வரையற்ற வோருரையால்
நீயே நானென்று நிலைமை யழித்தானோ. (2)

ஆ. முடிவு

சித்தாந்தஞ் சித்த விகற்பமது தீரவுடல்
முத்தனா மென்ற முழுமுதலே கண்வளரீர். (62)

ஒன்றிரண்டு மூன்றற் றெற்ருநரலோ ரைந்தென்பான்
நின்றதெல்லாந் தானாகி நின்றாரே கண்வளரீர். (63)

தாலாட்டு முற்றும்.

## 1083. சிவாநுபூதி விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 828—7
ஆ. ட/163

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .........
ஆ. சிவாநுபூதி விளக்கம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 65 கண்ணி

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 5 பக்கம் (ஏடு 10 முதல் 12 வரை)
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 21, 22 வரி.
உ. சிறிய அழகிய கை எழுத்து
ஊ. ஓரளவு சிதைவு
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தேனிவரு மின்பச் சிவானு பவமுரைக்க
வானை முகவ னடிபணிந்து போற்றுவாம். (1)

சீராருங் கங்கைநகர்த் தேசிகர்கோன் மெய்கண்டான்
வாராதே வந்துரைத்த வார்த்தைவளங் கூறுவாம். (2)

ஆ. முடிவு

கங்கைநகர் மெய்கண்டான் கார்கமலஞ் சென்னியின்மேல்
தங்கவிருள் நீங்கியரு டானாந்த போதனரே. (64)

வாழி திருநீறு வாழிதிருவஞ் செழுத்தும்
வாழிசிவா லையங்கள் வாழிதிரு வேடமே. (65)

சிவானுபூதி விளக்கம் முற்றும். ஆக 402

## 1084. அம்பலவாண தேசிகர் தசகாரியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 829—1
ஆ. ட/164

சு. வி. 8

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்
ஆ. அம்பலவாண தேசிகர் தசகாரியம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 56

## 3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்
ஆ. 21 நீளம் செ.மீ.; அகலம் 5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் 17, 18 வரி.
உ. சிறிய அழகான கையெழுத்து
ஊ. மிகப் பழுதுற்ற சுவடி
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

(முதற்பாடல் மிகவும் சிதைந்துள்ளது)

அருந்திடும் வினையு மையல் ஆக்கிடு முடலும் போதத்
திருந்திடும் மலமு மின்னே யிருந்திட வுயிரு மின்பம்
பொருந்திட வுமையாள் கண்டு போற்றிட அம்ப லத்தே
திருந்திட நடனஞ் செய்வோன் திருவடி யுளத்தில்
வைப்பாம். (2)

ஆ. முடிவு

தசகாரிய மைம்பத் தஞ்சாய் விருத்தத்
திசையாய் வருள்புரிந் தானின்று—வசைதீர்ந்த
மேலா வடுதுறைக் கோர் வீரம் பலவாணன்
மாலாய் மருவினர்க்கு வந்து. (56)

தசகாரியம் முற்றும்,

## 1085. தட்சிணாமூர்த்தி தேசிகர் தசகாரியம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 829-2

ஆ. டி/164

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தட்சிணாமூர்த்தி தேசிகர்

ஆ. தட்சிணாமூர்த்தி தேசிகர் தசகாரியம்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 13

### 3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 4 பக்கம்.

ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 17, 18 வரிகள்.

உ. சிறிய அழகான கையெழுத்து.

ஊ. மிகப் பழுதுற்ற நிலை

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருந்து வடகயிலை தனிற்பரம சிவனளித்த
சிவஞான போதமுணர் நந்திமுதற் சிறந்தே
வருங்குரவர் வெண்ணெய்நல்லூர் மெய்கண்ட தேவன்
வழங்கருட் சந்ததியின் நமச்சிவாய தேசிகனாம்
இருங்குரவ னளித்தசிவப் பிரகாச தேசன்
இலங்குமறை வன்தகரு கோர்வனக் குகைளிலு றைநாட்
பொருந்தியவன் திருவடிக்கீழ் . . . . . .
. . . . வடுதுறைவாழ் நமச்சி வாயனைப் புகழ்வாம். (1)

(பாடலடிகள் மிகவும் சிதைந்துள்ளன)

ஆ. முடிவு

உண்மையாஞ் சிவானு பவமுன் போகமருந் திடினும்
உத்தமர்க்கே யாகுமிவை தானென்பேர லுலகி லுள்ளோர்
வண்மையாங் கனவுத னில்வல்லி தனைப்புல் கிடவே
வருவதெலாந் தூலவுடற் கொலைதனி லானறு வதுபோற்
திண்மையாஞ் சாதக ரூதருந் திடினுந் துணைமறவார்
செயவினை யாட்டினை மறவாதார் தனையடித்தூட்
டிடினுமிக
வெண்மையாங் குணக்கோ மானிலங் கிடுமா வடுதுறை
வாழுவேனும் நமச்சிவாய னெனக்களித்த நெறியிதே
தேரே. (13)

தசகாரியம் விபூதி விளக்கம் முற்றும்.

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1086. சுவாமிநாத தேசிகர் தசகாரியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 829-3
ஆ. டீ/164

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. சுவாமிநாத தேசிகர்
ஆ. சுவாமிநாத தேசிகர் தசகாரியம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.

ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 18, 19 வரி.

உ. சிறிய அழகிய கையெழுத்து

ஊ. மிகப் பழுதுற்ற நிலை

எ.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அளவிலா அண்ட மாயை ஆனகன்மம் ஆணவத் தோடு
அளவிலாச் சீவ னுற்ற அபக்குவம் அறிந்த ஜீவன்
அளவிலாப் பிறவி நீத்தே அளவிலா அருளைச் சார்ந்தே
அளவிலா அரனைப் பெற்றே அளவிலாச் சுகமா ரும்மே (1)

ஆ. முடிவு

பூருவ வினையே கன்ம புகழான பஞ்ச சத்தி
பேறுகோ ணவபே தங்கள் பிறிவிலா வக்க ரங்கள்
மாறுகோ ளான்மா ஞானம் வகைவகைத் தத்து வங்கள்
ஈறிலாத் தனுக்க ளாதி இவையின்ப துன்ப மூலம் (24)

தசகாரியம் முற்றும்.

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1087. உபதேசப் பஃறொடை

1. நூலகக் குறிப்புகள்

அ. 829–4
ஆ. ட/164

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தட்சிணாமூர்த்தி தேசிகர்
ஆ. உபதேசப் பஃறொடை
இ. தத்துவம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 11 பக்கம்.
ஆ. நீளம் 21 செ. மீ; அகலம் 5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 18, 19 வரி.
உ. சிறிய அழகிய கையெழுத்து
ஊ. மிகப் பழுதுற்ற சுவடி
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தேனார் கமலந் திருந்தியபூ......
டானா தவன்பா லரிச்சிக்கு — மேனாளில்
ஆங்கதனிற் றெய்வீக மாயோன் கன்றிடவே
ஏங்கியுயிர்த்....தாங்கியே — யோங்கியதோர்
.. .. .. ..

ஆ. முடிவு

அருளா லுனைத்துதிக்கு மன்பரைப்போற் றீய
இருளா லுலர்ந்தேனு மின்றிங் — கருளான
சுத்தாபுன் சொல்லாற் றொடுத்ததொடை நீபுனந்தாள்
அத்தா நமச்சிவா யா.

தட்சிணமூர்த்தியார் அருளிச்செய்த
உபதேசப் பஃறொடை முற்றும்.

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1088. அநுபோக வெண்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 839–5
ஆ. ட/164

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. அநுபோக வெண்பா
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 218

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம்.
ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 18,19 வரி.

உ. அழகிய, சிறிய கையெழுத்து

ஊ. மிகப் பழுதுற்ற நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அளித்த கருணை அநுபோகந் தன்னை
விளக்கி யொருபாவின் விரிக்க — உளக்கணிரு
மெய்யாகோ முத்திநகர் மேவியசீர் நற்கருணை
அய்யா நமச்சிவா யா. (1)

ஆ. முடிவு

பன்னரிய மெய்கண்டான் பன்னுமருட் போதத்தைச்
சென்னியின்மேற் கொண்டொருநூல் செய்தேனா —
வினனூன்மெய்
முத்தாக்கு நெஞ்சத் தமுதாம்பொய் மூடர்க்கும்
பெத்தத்தைத் தீர்க்குமருட் பேறு. (218)

அநுபோக வெண்பா முற்றும்.

## 1089. நிட்டை விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 829—6

ஆ. ட/164

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்

ஆ. நிட்டை விளக்கம்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 29

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 4 பக்கம்.

ஆ. நீளம் 21 செ. மீ ; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 18,19 வரி.

உ. அழகிய, சிறிய கையெழுத்து.

ஊ. மிகப் பழுதுற்ற நிறை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நெஞ்சே யுனையிரந்தேன் நீஅம் பலவாணன்
நெஞ்சா விடுதுறைமெய் யின்பருளச் — செஞ்சொல்புனை
நிட்டை விளக்க நினைதலினா லெப்பிறப்பும்
இட்ட முனைப்பிறப்பென் றென்.

ஆட்டி மவுலியை ஆர்ப் பரித்தோங்கி அடித்துக் கைகால்
நீட்டிக் கிடப்பது நிட்டையதோ நிலையாத் தனுவை
யோட்டி நின்பாதத் தொடுக்கி யுயிரையு நீயெனவே
நாட்டிய வம்பல வாணாதிருத் தில்லை நாயகமே. (1)

ஆ. முடிவு

சொக்கிட்ரட மனை முக்குத் திருடிய துட்டர் வந்து
திக்குற்ற மன்னனைக் கேட்பன்போற் சிவசிந் தனையே
மிக்குக் குருலிங்க சங்கமம் பங்கித்து வீடிற்
சிக்கு மெக்குப் பெருத்ததனக் கென்செய்வேன் கச்சியே
கம்பனே (25)

நிட்டை விளக்கம் முற்றும்.

## 1090. உபாயநிட்டை வெண்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 829-7

ஆ. டி/164

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்

ஆ. உபாயநிட்டை வெண்பா

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 46

## 3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 5 பக்கம்

ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 18,19வரி.

உ. அழகிய, சிறிய கையெழுத்து

ஊ. மிகப் பழுதுற்ற நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கற்றுடலற் றேயுயிரைக் கண்டருள்கொண் டேயரனைப்
பெற்றனமெய் யம்பலவா ணன்பெருமை — உற்றநற்
பண்பா வடுதுறைச்சீர் பன்னுமு பாயநிட்டை
வெண்பா வுரையே விரும்பி. (1)

ஆ. முடிவு

சீவிக்குங் காயஞ் சிவனலவே யென்னுமலம்
பாவிகட் கிந்நூலைப் பகரற்க — மேவும்
உயரே செயலற் றொடுங்கும்போ தீசன்
செயலேயென் பார்க்குரைக்கச் செய். (46)

உபாயநிட்டை வெண்பா உரைத்தனாற் பத்தாறு
அபாயநிட்டை வாராம லார்க்கு — முபாயநிட்டை
வெண்பாவா லாவடு தண்டுறையை வெஃகினர்க்கு
நண்பாகு மம்பலவா ணன்.

உபாயநிட்டை வெண்பா முற்றும்.

# 1091. சித்தாந்த சிகாமணி

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 829—8
ஆ. ட/164

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்
ஆ. சித்தாந்த சிகாமணி
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 92

## 3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 18,19 வரி.
உ. அழகிய, சிறிய கையெழுத்து.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சாதித்த தெல்லாந் தவமெனுஞ் சற்குருவைப்
பேதித்தா ரெல்லாம் பிழையாகும் — வேதத்
தறம்புரிந்த தக்கனுக்கன் றாக்கினைவந் துற்ற
திறம்புரிந்த வாறாந் தெளி. (1)

ஆ. முடிவு

செய்யாப் பணிபலவுஞ் செய்வேன் திருவுளத்திற்
செய்யும் பணிசிறிதுஞ் செய்தறியேன் — உய்யுநெறி
எத்தால் வழியேற இன்பா வடுதுறைக்குள்
அத்தா நமச்சிவா யா, (92)

சிந்தாந்த சிகாமணி முற்றும்,

## 1092. சித்தாந்தப் பஃறொடை வெண்பா

### 1. நூலகக குறிப்புகள்

அ. 829—9

ஆ. ட/164

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்

ஆ. சித்தாந்தப் பஃறொடை வெண்பா

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 650 கண்ணி

### 3. தோற்றக் கூறுகள்

அ. 14 ஏடு; 28 பக்கம்.

ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 18,19 வரி.

உ. அழகிய, சிறிய கையெழுத்து.

ஊ. மிகப் பழுதுற்ற நிலை.

எ. முழுமை

### 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

திருவாரு ஞானத் திலதத்தா னீற்றான்
மருவாரு மேனி வளத்தா — னொருவாத

கண்டிகை சென்னி களங்காது மார்புகரங்
கொண்டிலங்கு மேனி குறியுடையான் — மிண்டிலங்கப்

பேதித்த மும்மலமாம் பெற்றியென முப்புரத்தைச்
சேதித்த பொல்லாச் சிறுத்தையான் — சாதித்த

ஆ. முடிவு

ஆகத் தறிவை அகற்றி அவ்வாவினுள்
ஊகத் தனுவை உறவைத்துத் — தேகத்
தறிவாக்கி மங்கையரு ளானான்மற் றொன்றைப்
பிரிவாக்குந் தேசிகனைப் பெற்று.

சித்தாந்த மென்னத் தெரித்த பஃறொடையிற்
சித்தாந்தம் முந்நூற்று எண்பத்தஞ்சாய் — முத்தாந்தஞ்
சொன்னான் திருவா வடுதுறையைச் சூழ்ந்தோர்க்கு
மன்னாகு மம்பலவா ணன்.

## 1093. சிவாச்சிரமத் தெளிவு

1. நூலகக் குறிப்புகள்

அ. 829-10
ஆ. ட/164

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்
ஆ. சிவாச்சிரமத் தெளிவு
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 71

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 8 பக்கம்.
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 18,19 வரி
உ. அழகிய, சிறிய கையெழுத்து.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை,
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவா வடுதுறையிற் தேவே யடியேற்கு
ஒருவா வினையா லொருங்கக் — குருவாய்த்
திரள்வா யறத்தின் சிறந்தவினா வுற்றேன்
அருள்வாய் நமச்சிவா யா. (1)

ஆ. முடிவு

சிவாச்சிரமத் தின்றெளிவைச் செய்தெழுப தாகப்
பவாச்சிரம மாற்றப் பணித்தான் — சிவாச்சிரமந்
தென்னா வடுதுறையிற் றேவம் பலவாண
னென்னாகத் தின்பா யெழுந்து.

## 1094, சன்மார்க்க சித்தியார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 829–11
ஆ. ட/164

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்
ஆ. சன்மார்க்க சித்தியார்
இ. தத்துவம்
ஈ செய்யுள் 29

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்.
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது,
ஈ. ஒரு பக்கத்திற்கு 19 வரி.

உ. அழகிய, சிறிய கையெழுத்து.

ஊ. மிகப் பழுதுற்ற நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சிறியே னறியாமை தீர்ப்பதற்குப் புத்தி
அறியே னெனினும் அருளி — னெறியே
முளைத்தார்க ணீர்மை முதிரவினா வுற்றேன்
அளித்தான் நமச்சிவா யா. (1)

ஆ. முடிவு

சன்மார்க்க சித்தியெனச் சாற்றியிரு பானெட்டை
புன்மார்க்கஞ் சென்றோர்க்குப் போக்கினான்—நன்மார்க்கங்
காட்டா வடுதுறையிற் கண்ணம்பல வாணன்
தாட்டா மரையெனக்குத் தந்து. (29)

சன்மார்க்க சித்தியார் முற்றும்.

## 1095. அதிசய மாலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 829–12

ஆ. ட/164

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்

ஆ. அதிசய மாலை

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 76

## 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 8 பக்கம்.

ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 19 வரி.

உ. அழகிய, சிறிய கையெழுத்து.

ஊ. மிகப் பழுதுற்ற நிலை,

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கண்ணாகுங் கண்ணா முயிர்க்கா வடுதுறையிற்
தண்ணாகு மம்பலவா ணன்தகுதி — எண்ணி
அதிசய மாலை அறைந்ததைத் தேர்ந்து
கதிசெயுமா லார்க்கண்டு கண்டு.

ஆ. முடிவு

அதிசய மாலை அருளெழு பானாறும்
மதிசெய் மலமற்ற வைத்தான் — துதிசெய்வார்
கூடா வடுதுறையின் கூடம் பலவாணன்
வீடாயென் னெஞ்சில் விளைந்து.

அதிசய மாலை முற்றும்.

# 1096. உபதேச வெண்பா

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 829–13

ஆ. ட/164

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்
ஆ. உபதேச வெண்பா
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 44

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 5 பக்கம்.
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 18, 19 வரி.
உ. அழகிய, சிறிய கையெழுத்து.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உரைத்த கருணை உபதேசந் தன்னை
விரித்தொரு பாவில் விளக்கக் — கருத்துவரல்
ஒத்தாசை நீயே உணர்த்தா வடுதுறையென்
அத்தா நமச்சிவா யா. (1)

ஆ. முடிவு

உபதேச வெண்பா நாற்பத்தி மூன்றையும்
உபதேச மாக வுரைத்தார் — உபதேசம்
பண்ணா வடுதுறையில் பண்ணம் பலவாணன்
கண்ணா ரமுதாய்க் கலந்து. (44)

உபதேச வெண்பா முற்றும்.

## 1097. நமச்சிவாய மாலை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 829–14
ஆ. ட/164

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்
ஆ. நமச்சிவாய மாலை
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 137

### 3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு; 15 பக்கம்.
ஆ. நீளம் 21 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 18,19 வரி.
உ. அழகிய, சிறிய கையெழுத்து.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரேற்று நின்கருணைச் சித்தமே புக்குமலப்
போரேற்றி நிற்கப் பொருந்திடுவ தென்னாளோ
வாரேற்றுங் கொங்கை மகளீரக் கருணைத்
தூரேற்று மாவடுதண் டுறைநமச்சி வாயனே. (1)

ஆ. முடிவு

உன்னியல்பே யென்னோ டுறுமியல்பா மென்னியல்பே
உன்னியல்பே யொட்டியுணர் வதற்கென் கைம்மாறே
தன்னியல்பே யெல்லாந் தவிர்ந்தநடை தானாகும்
உன்னியல்பே யாவடுதண் டுறைநமச்சி வாயனே, (137)

நமச்சிவாய மாலை முற்றும்,

## 1098. திருவண்ணாமலை அய்யர் கட்டளை நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 829—15
ஆ. ட/164

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருவண்ணாமலை அய்யர்
ஆ. திருவண்ணாமலை அய்யர் கட்டளை நூல்
இ. தத்துவம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 7 பக்கம்.
ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 18,19 வரி.
உ. அழகிய, சிறிய கையெழுத்து.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

செய்யாப் பணிபலவுஞ் செய்வேன் திருவுளத்திற்
செய்யும் பணிசிறிதுஞ் செய்தறியேன் — உய்யுநெறி
எத்தால் வருமடியேற்கு இன்பா வடுதுறைக்குள்
அத்தா நமச்சிவா யா.

இருவினை யற்றுக் கீழ்மேல் இசையும் எவ்வுயிர்க்கும் முன்னாய்
உருவினை யுற்றுக் கீழ்மேல் உறும்வினை தன்பால் பரவ
அருவினை யாக்கித் தென்ஆ வடுதுறைக் கண்ம கிழ்ந்த
திருவினை நமச்சி வாயன் திருவடிக் கமலம் போற்றி.

ஆ. முடிவு

பதிபசு பாசப் பனுவலருள் செய்தான்
பதிபசுபா சந்தெரிவோர் பற்றுப் — பதிபசுவா
மாற்றா வடுதுறையில் வந்தம் பலவாணன்
றோற்றார்கள் நோக்கக் கதி.

முற்றும்.

## 1099. உலகுடைய நாயனார் கழிநெடில்

1. நூலகக் குறிப்புகள்

அ. 829–16
ஆ. ட/164

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........
ஆ. உலகுடைய நாயனார் கழிநெடில்
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 10

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 3 பக்கம்.
ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 18, 19 வரி.
உ. அழகிய, சிறிய கையெழுத்து
ஊ. மிகப் பழுதுற்ற நிலை,
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

மலமெனுந் தடத்திற் கருமசே தகுத்தின்
மாயையாங் கிழங்கிலங் குரித்த
மன்னு மூவெட்டாந் தத்துவநாள
மலரிதழ் வித்தையேழ் வித்தை
நலமிகு மீசன் சதாசிவ மிரண்டு
நண்ணுகே சரங்களாஞ் சத்தி
நற்பொருட் டாகு நாதமே விந்து
நயந்தகண் ணாமென விரவி

இலகுமென் னுடலப் பதுமபீ டிகைநீ
இருந்தரு ளாசன மெனாமல்
எனதுபுக் கில்தர எண்ணினேன் தெளிய
இயவருட் பார்வைதந் தனையே
அலகிலா வுயிர்கள் மலநடைக் கிலையாய்
. . . குண்மை யாய் நின்ற
வாவடு துறைசை யம்பல வாணா
அடியவர்க் கருளுமா நிதியே. (1)

### ஆ. முடிவு

முந்துமா கமத்தை யருட்டுறை யண்ணல்
மொழிபெயர்த் துரைத்தநூன் முதலா
முதல்வழி சார்பா மூன்றுநூற் கருத்து
முறைதெரி யாலே கருதி
நந்தவே யெழுதுமு றைதனைக் குருவாய்
நாடிய குரவரை நம்பி
நற்கதி யடையா வுயிர்களுக் கிரங்கி
நற்கதி கொடுத்திட வேண்டிச்
சிந்தனை யாக்கிப் பதிபசு பாசந்
தெரிந்திட வெளிதாமா றுரைத்துன்
திருவடி நீழன் மருவிட வைத்தாய்
தேசிகா மணிநீ காண

அந்தலை யரவி னடித்தமால் ஈரைந்து
ஆகிய பிறவிநோய் தவிர்த்த
வாவடு துறைசை யம்பல வாணா
அடியவர்க் கருளுமா நிதியே. (10)
திருச்சிற்றம்பலம்.

6. ......... .............

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1100. சிவபுரம் பெரியபிள்ளை பாடல்

1. நூலகக் குறிப்புகள்
அ. 829-17
ஆ. ட/164

2. உள்ளீடு: நூல் விவரம்
அ. பெரியபிள்ளை
ஆ. சிவபுரம் பெரிய பிள்ளை பாடல்
இ. தத்துவம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்
அ. 3 ஏடு; 4 பக்கம்.
ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 18,19 வரி.
உ. அழகிய, சிறிய கையெழுத்து.
ஊ. மிகப் பழுதுற்ற நிலை.
ஏ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொல்லையென்ப தெ....கன்றோ தொல்லையற்ற
எல்லையென்ப தென்றோ விமல்பாகும் — இல்லமென்ப
பட்டார்க்குந் தீதெப் பகுதியென்ப தெல்லாம்போய்
விட்டார்க் கிதுவென் விதி. (1)

ஆ. முடிவு

சுத்திநெறி யாமெனவே சொல்லியே மெய்கண்டான்
வைத்தநெறி நூலும் வகுத்துரைத்துப் — பத்தா
குருவிலிங்க முண்மையெனக் கூறிநீ டின்பந்
தருமன்பை என்சொல்வேன் தான்.

முற்றும்.

இ. பிற்குறிப்பு

பெருமாள் எழுதினது

6. ........................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1101. தேவமாதா அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 830

ஆ. ர/9

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. தேவமாதா அம்மானை

இ. நாட்டுப் பாடல்

ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 136 ஏடு; 272 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு இரு பத்திகள், பத்திக்கு 6, 7 வரி.

உ. தெளிவான கையெழுத்து. ஓரளவு பிழைகள் காணப் படுகின்றன.

ஊ. பல ஏடுகள் பழுதடைந்துள்ளன. பொதுவாகச் சுமாரான நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அந்தரம் புவியும் யாவும் அனைத்தையும் படைத்த சோதி
எந்தையாம் பரனை ஈன்ற ஈறிலாக் கன்னி மாதின்
சுந்தர சரித்திரத்தைத் தூயநற் கதையாய்ப் பாட
இந்தமா நிலத்திற் சேசு இறந்தநற் சிலுவை காப்பு.

ஆ. முடிவு

வனத்துத் தவசியர்க்கும் மாதவத்தின் கன்னியர்க்கும்
இனத்தைப் புவியை இகழ்ந்த த்போதனர்க்கும்
வால விருத்தர்க்கும் மறைவேத சாட்சியர்க்கும்
பாலனென வந்த பரன்அருளால் தோத்திரமே.

இ. பிற்குறிப்பு

நந்தன வருஷம் கார்த்திகை மாதம் 9ஆம் தேதி சண்டமங்கலத்தில் இருக்கும் மைக்கேலுடையான் மகன் சந்தியாகுக்கு தேவமாதா அம்மானை எழுதி முகிந்தது முற்றும். மேற்படி அம்மானை எழுதினது மேற்படியூர் மு. உ. மயேசுவரியா பிள்ளை மகன் சவரிமுத்துப்பிள்ளை கையட்சரம்.

## 1102. கித்தேரியம்மாள் அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 831

ஆ. ர/10

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. கித்தேரியம்மாள் அம்மானை

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 38 ஏடு; 76 பக்கம்.

ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு இரு பத்திகள் பத்திக்கு 6 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. 5, 11 - 14, 16, 18 - 23, 25, 29 - 34, 36 - 41, 44, 45, 48, 50, 52, 54 - 59, 62 - 77, 82 - 90, 93, 96 - 98 ஆகிய ஏடுகளும் 99க்கு மேல் இருக்க வேண்டியனவும் காணப்படவில்லை. உள்ளவை நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தென்மலைசேர் மையினான் தேவ கதைபாடப்
பொன்மலைசேர்ந் தாளைப் புகழ்ந்தேத்தி — நன்மலை
சேர்ந்து
எச்சிரத்தார் தாமும் இறைஞ்சித் தினம்வாழ்த்தும்
கைச்சிரத்தாள் திண்சரணே காப்பு.

ஆ. முடிவு

வான்விளைந்த நல்அமுது மட்கலத்து இருந்தபெதன
தேன்விளைந்த காதைநலம் செப்பியசொல் தீதுளனினும்
உயிர்தரும்என்று இன்அமிர்தம் உண்டுஉயிர்தாம் வாழ்ந்து வந்து
செயிர்தரும்என் சொல்வெறுக்கார் தேர்ந்தநல்லோர் அம்மானை.

புதுமைக்காதை முற்றும்.

இ. முற்குறிப்பு

கர்த்தர் மனுஷாவதாரம் பண்ணின 1915 ஆம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி இதனடியில் காட்டியுள்ள அம்மானையில் அர்ச்சயசிஷ்ட கித்தேரியம்மாளின் பேரால் இராமநாதபுரம் ஜில்லா கண்டமங்கலத்தில் வசித்திருந்த உ.ப.ம. சவேரிமுத்துபிள்ளையவர்களினது புத்திரசிகாமணி யாகிய எம். எஸ். மரியசௌரிய பிள்ளையவர்களால் பரம தாயார் உதவியை முன்னிட்டு இவ்வம்மானை எழுதியதாகை யால் இக்காதையில் மாசு இருக்குமாகில் தங்கள் சேயனைப் போல் பாதுகாத்து மன்னிக்கக் கோரினன்.

5. பிற செய்திகள்

இச்சுவடியில் இந்த அம்மானையை அடுத்து முதலாவது பிறப்புக்காதை எனத் தொடங்கும் ஒரேடும். கித்தேரியம்மாள் பேரில் புகழ்ச்சி வெண்பா 100 எனத்தொ டங்கி சிந்து நடையில் செல்லும் ஏடு ஒன்றும் கோக்கப்பட்டு உள்ளன. இது வீரமாமுனிவர் பாடிய நூல் போலும்.

## 1103. மதிஉள்ளான்

1. நூலகக் குறிப்புகள்

அ. 832

ஆ. ட/165

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . .

ஆ. மதி உள்ளான்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 394

3. தோற்றக் கூறுகள்

அ. 62 ஏடு; 124 பக்கம்.

ஆ. நீளம் 26 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.

உ. சற்றுக் கிறுக்கலான எழுத்து

ஊ. சுவடியின் வலப்பகுதியின் மேற்புறம் சிதைந்துள்ளதால் ஆங்காங்கே படிக்க இயலவில்லை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அரிவிந்து நாத முற்றும் ஆனந்தி பதத்தைப் போற்றிப்
பரிமுந்து பத . . . . . . பரிவுள்ளோர் தன்னை வாழ்த்தி
உரிமுந்து உளக்க ரெண்டு ஒன்றென்ற . . ருளி னாலே
கரிவந்து மதியுள் ஆடக் கணபதி காப்புத் தானே. (1)

(குறிப்பு :- மூன்றாமடி பொருளாலும் யாப்பாலும் தெளிவாகவில்லை)

ஆ. முடிவு

குருநெறி யருளி னாலே கொந்திமா தேசத் துள்ளே
அருள்நெறி வளரும் சோதி அல்லிமா நகரில் வந்தும்
வருநெறி அறிவுநன்மை வகுத்துஒரு வயண மாகத்
திருநெறி மதிநூல் சொன்னான் சிந்தா . . . . முத்தே,

இ. பிற்குறிப்பு

விசுவாவசு வருஷம் மாசி மாதம் 26ஆம் தேதி வெள்ளிக் கிழமை திருத்துறைப்பூண்டியிலிருக்கும் முத்துச்சாமி மதியுள் ளான் எழுதி நிறைவேறினது. பருத்தியூரில் இருக்கும் குருவப்ப நாயகர்மகன் வீராநாயகர் சுவடி. ''வீரா நாயகர் எனக்குக் குருவான படியினால் அவர் மகன் சீனிவாசனுக்கு அருளிச்செய்த சாத்திரம். சிவாயநம'' என்பது பிற்காலத்தே எழுதப்பட்ட மற்றொரு பிற்குறிப்பு.

## 1104. பிரமமுனி வைத்திய சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 833

ஆ. ட/217

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பிரமமுனி

ஆ. பிரமமுனி வைத்திய சூத்திரம் 300

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 308

3. தோற்றக் கூறுகள்

அ. 81 ஏடு; 162 பக்கம்.

ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8,9 வரி.

உ. சற்றுக் கிறுக்கலான கையெழுத்து

23. சுவடியின் வலது மேல்புறம் சிதைந்துள்ளது. மற்றபடி நல்லநிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரரு ளான சோதி சின்மய ஞான சோதி
ஆரணி கொன்றை சூடி ஆறணிந் தானைப் போற்றி
வாரணி ரிஷிகள் பாதம் வணங்கியே வைத்ய நூலைக்
காரண மாகப் பாடக் குணபதி காப்புத் தானே. (1)

ஆ. முடிவு

வாரான கருவையெல்லாம் வெளியாய்ச் சொன்னேன்
வாதமொடு வைத்தியமும் வகையாய்ச் சொன்னேன்
கூரான செந்தூரம் கலங்கம் சொன்னேன்
குருமுறைமு டிக்கவகை குறியாய்ச் சொன்னேன்
வாரான அஞ்சனமும் திலதம் சொன்னேன்
வசியமொடு அழைப்புவித்தை மாரணமும் சொன்னேன்
ஆரான ஞானமொடு வாசி யோகம்
அடங்கிநின்ற பூரணமும் அறியச் சொன்னேன்
தேறவே வழலையுட கருவும் சொன்னேன்
செப்பினேன் கருக்கிடைசூத் திரந்தான் முற்றே. (308)

இ. பிற்குறிப்பு

பருத்தியூரிலிருக்கும் குருவப்பநாயக்கர் மகன் வீராநாயக்கன் எழுத்து. மேற்படியான் மகன் சீனிவாச நாயக்கன் சாத்திரம். முற்றும்.

## 1105. சிந்தாமணி வாகடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 834
ஆ. ல/218

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. சிந்தாமணி வாகடம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்,

3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு; 32 பக்கம்.

ஆ. நீளம் 29 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி,

உ, பலபேரால் எழுதப்பெற்ற கையெழுத்து, பலவிதமாக உள்ளது.

ஊ. மேற்புறம் சிதைந்துள்ளது,

எ. குறை

4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

பார்தனைச் சுமந்த ஆதிசே ஷனுக்கு
. . . . தனைப்பகர்ந்திடத்தூதாத் தேவர்கோ னிடத்தில்
பதறிவந்துரைத்தன . . சித்தர்மா முனியும்
சிறந்திடு மந்திரவிதியில்
அத்திமுள் பகவான் தவத்தினில் மிகுந்த சீழமா
ரிழியெனு முனியும்

பேர்தனை உகந்த விரகினி லதிய
பிரபல காங்கையர் தனையும்
பெருமைசேர் மார பதிதனுக்கு இறைவன்
பேர்பெறு முனிதனை அழைத்து
நேர்தனை உரைக்க அவர்கள்பா தாள
நிலையுறும் ஆதிசே டனுக்கு
நிகழ்த்தியே அவிழ்தம் கொடுத்திட அதனால்
நீங்கிடா திருந்ததே பிணிகள். (1)

(இப்பதினான்கு சீர் ஆசிரிய விருத்தத்தின் முதல் இரண்டு அடிகளின் சரியான வடிவம் ஏட்டின் சிதைவுகளால் அறியக்கூடவில்லை).

ஆ. முடிவு

பூரம் கட்ட :- கட்டின வீரத்தில் பாதி உமிழ் நீரில் அரைத்துக் குழம்பாய் வைத்துக்கொண்டு பூரத்தை........................

இ. பிற்குறிப்பு

"வீராநாயக்கர் மகன் சீனிவாசன் சாஸ்திரம்" இது சுவடி எழுதப்பட்ட பல காலத்திற்குப் பிறகு வேறொருவரால் கிடைத்த சந்தில் எழுதப்பட்ட குறிப்பாகும்.

## 1106. திருப்புகழ்

1. நூலகக் குறிப்புகள்

அ. 835–1

ஆ. த/25

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அருணகிரிநாதர்

ஆ. திருப்புகழ்

இ. தோத்திரம்

ஈ. செய்யுள் 23

3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு; 24 பக்கம்.

ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.

உ. பிழை மலிந்த கிறுக்கலான கையெழுத்து.

ஊ. சுமாராக உள்ளது

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

எல்லோரும் ஞானத்து இளைஞரே கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்கும் செவி,

ஆ. முடிவு

ஈர மோடுசி ரித்து வருத்தவும் நாத கீதந டிப்பி லிருக்கவும்
ஏவ ராயினும் ஏத்தி அழைக்கவும் மதராசன்
ஏவை மோதுகண் இட்டு மருட்டவும் வீதி மீதுத லைக்கலிட்டு
நிற்கவும்
ஏறு மாறும னத்தில் நினைக்கவும் விலைகூறி
ஆர வாபர ணத்தனம் விற்கவும் மாலை கோதிகு லைத்து
முடிக்கவும்
ஆடை சோரஅ விழ்த்துஅரை சுற்றவும் அதிமோகம்
ஆசை போலவள் இட்டம் உரைக்கவும் மேல்அ ழாவெரு
துக்கம்விளைக்கவும்
ஆன தோதக வித்தை கற்பவர் உறவாமோ
பார மேருப ருப்பதம் மத்தென நேரி தாகஎ டுத்தக ணத்துஉமை
பாக ராயின ரத்னப ணித்தொடை வடமாக
பாதி தேவர்பி டித்திட லட்சுமி பூர்வ தேவர்பி டித்திட
மத்தது
பாரி சாதமு தற்பல சத்திகள் வருமாறு
சீர வாரிதி யைக்கடை வித்ததி காரி யாய்அமு தத்தை தகிரு
பாலு வாகிய வச்சுரு வைத்தன மருகோனே
சேகி மேலவி யலநிறப்பதி நிறபபற மாட கூடம
லர்ப்பொழில் மேத்திய
கீர னூருறை சத்தி தரித்தருள் பெருமாளே. (23)

(குறிப்பு :- மாற்று எழுத்து உள்ள பகுதிகள் தெளிவாக விளங்கவில்லை. சில சந்தக் குறிப்பிற்கும் பொருந்தவில்லை.

இ பிற்குறிப்பு

பாளையம். குழந்தைசெட்டி மகன் திருப்புகழ்.

6. மாற்றுச் சுவடிகள் காணுமிடம்
பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்
பல பதிப்புகள் வெளிவந்துள்ளன.

## 1107. தனிப்பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 835–2

ஆ. த/25

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. தனிப்பாடல்கள்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள் 2

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்.

ஆ. நீளம் 42 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.

உ. கிறுக்கலான கையெழுத்து; பிழைகள் மிகுதி.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அந்தியொளி வானதுங் காகமெறி மித்ததும்
அண்டபகி ரண்டமுதலாய்
அதிரவே இடிவந்து பூசனைபு ரிந்ததும்
அறியமு சக்கற மதவாய
பந்திதனி லேவைசியர் பதினொருவ ருடபங்கில்
பன்னிரெண் டாரென்னவே
பங்கிக் கிருநதி செம்புவே நின்மகிமை
பகரல்எவ ராலும்எளிதோ

புந்திதனி லேவெகுசி னங்கொண்டு வெட்டப்
பொறுத்ததும் அருள்செய்வது
புலவர்மூ வர்க்குளலாம் உரைக்கே தனிலக்காக
பொன்கொடுத் ததுமுன்நாளினில்
நந்திவா கனர்ஆன அண்ணலே எந்தெந்த
நாள்இதனிலச்சிஅய்யா
ரத்னகிரி மீதில்வளர் நவரத்ன ஒளிவர்ண
ரத்னாச லக்கடவுளே,

ஆ. முடிவு

அட்டலட் சுமிஎனது பங்கிலே நின்றுதினம்
அகலாது இருக்கவேணும்
அதிகசம் பத்துடன் புத்ரசந் தானமும்
அறிவுணர்வு கொடுக்கவேணும்
பட்டிமாடு ஆடுடன் குதிரைபல தானியம்
பாலாறு பெருகவேணும்
பசியாம லேஅன்னம் வந்தவர்க்கு எந்நாளும்
பந்தியில் பெருகவேணும்
சட்டழகு வாலிபம் வயசுநூறு ஆகவே
கருத்துடன் துலங்கவேணும்
கண்ணீர்வ ராமலே வச்சிரச ரீரமாய்க்
கருணையுடன் பெருகவேணும்
துட்டகன ராட்சதர்க ளொடுபில்லி சூனியம்
தூரவே நிற்கவேணும்
துளபமால் மருகனே பழனிமா முருகனே
தோகைமயில் ஏறுகுகனே

## 1108. முத்துநாச்சி சண்டை

1. நூலகக் குறிப்புகள்

அ. 836—1
ஆ. ர/11

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. முத்துநாச்சி சண்டை

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 75 ஏடு; 150 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான கையெழுத்து; பிழைகள் மிகுதி.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

முந்திமுந்தி விநாயகனே வாலைமுருக நல்லசரஸ்வதியே
கந்தனுக்கு நல்லமுன்பிறந்த பின்னும்கச்சிக்கணபதி
முன்நடவாய்
தங்கைமுத்து நாச்சிசண்டை சொல்லிவாரேன் தப்பாமல்
எல்லோரும் கேட்டிருங்கள் ஊமைத்துரை இன்னம்
காயம்அடா.

ஆ. முடிவு

ஏழுபேர் கள்ளச்சி தங்கைமுத்து நாச்சி
இன்பம தாகவே வாழியதே
இந்தப்பா ரதமும் கேட்டுஇ னாம்கொடுத்த
ஆரிமசு துரைவா ழியதே
மங்கையர் பாரதம் கேட்டஊர் அதனிலே
மாசம்மூன்று மழைதான் பொழியுமே

திங்களும் மாரியும் தான் பொழிந்து இன்னம்
    செழித்து இருப்பார்கள் வையகத்தில்
தங்கை முத்து நாச்சி பாதம் சொல்லவே
    தப்பாமல் கேட்டீர்கள் எல்லோரும்

இ. பிற்குறிப்பு

பிலவ வருஷம் தை மாதம் 20ஆம் தேதி அசுபதி நட்சத்திரமும் சிங்க லக்கினமும் கூடிய சுபதினத்தில் எழுதியது. முத்து நாச்சி சண்டை முற்றிற்று. சம்பூரணம். தாழப்பட்டியிலே இருக்கும் வீரமலைப் பிள்ளை குமாரன் திருமலைக்கொழுந்தா பிள்ளை முத்துநாச்சி சண்டை.

## 1109. ஊமைத்துரை சண்டை

1. நூலகக் குறிப்புகள்

அ. 836-2

ஆ. ர/11

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. ஊமைத்துரை சண்டை

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 31 ஏடு; 62 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ ; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான கையெழுத்து; பிழைகள் மிகுதி.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

இனிஊமைத்துரைசண்டை சொல்லி வருகிறேன்
    எல்லோரும் கேளுங்கள் இன்பமதாய்
வக்கப் பட்டியானும் கொள்ளை கொடுத்துமே
    வகையாய்க் கூப்பிட்டுக் கொண்டுபோனான்
பாளையங் கோட்டைக்குத் தானும் போய்இன்னம்
    பாங்குடன் பிராது சொல்லிக்கொண்டான்.

ஆ. முடிவு

வாழி மிகவுமேதான் வாழி இன்னம்
    வரிசைக் கும்பினியும் வாழியதே
பாடின பேர்களும் ஆடின பேர்களும்
    பதுமைக் கும்மியும் வாழியதே
நீடூழி காலமும் ஆறு பெருகியே
    நிச்சய மாகவும் வாழியதே
மூங்கில்மேல் கிளையும்தான் கிளைத்து இன்னம்
    முசியாமல் தானும் வாழியதே
சக்தி கவுரி சாம்பிராணி வாசகி
    சக்காள பரமேஸ்வரி வாழியதே.

இ. பிற்குறிப்பு

பிலவ வருஷம் தை மாதம் 26ஆம் தேதி தாழப்பட்டியிலே இருக்கும் வீரமலைப் பிள்ளைக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய திருமலைக்கொழுந்தாபிள்ளை கைப்பட எழுதியது.
ஊமைத்துரை சண்டை முற்றிற்று. சம்பூர்ணம் முற்றும்.

## 1110. விடுகதைக் கணக்கு

1. நூலகக் குறிப்புகள்

அ. 836–3

ஆ. ஏ/11

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. ஒரு விடுகதைக் கணக்கு

இ. பல்வகை நூல்கள்

ஈ. உரைநடை
அச்சில் ஒரே பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி

உ. தெளிவான கையெழுத்து; பிழைகள் மிகுதி.

ஊ. நன்றாக உள்ளது.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. (சுவடியில் உள்ள கணக்கு)

ஒரு கடைக்காரி சில கோழிமுட்டை கொண்டுவந்தாள். அதை ஒரு வியாபாரி பைசாவுக்கு இரண்டு முட்டை கேட்டுக் கொண்டான். அதற்கு அவள் ஒரு முட்டை இரண்டு பைசாவுக்கு தான் கொடுக்கிறதென்று சொல்லினாள். அதற்கு அவன் பிடித்து இழுத்தான். இழுத்த மாத்திரத்தில் தவறி விழுந்து நொறுங்கிப் போய்விட்டன. அதற்கு அவள் மேஜிஸ்திரேட்டிடத்தில் சொல்லிக்கொண்டாள். அதன்பிறகு மேஜிஸ்திரேட்டும் நீர் கொண்டுவந்த முட்டை எத்தனை என்று கேட்க அதற்கு அவள், ''எனக்குக் கணக்குத் தெரிய வராது. ஆகையால் ஒரு திஷ்டாந்தரம் என்னவென்றால் அந்த முட்டைகளை இரண்டாய்ப் பகுத்தால் ஒன்று மிச்சம்.மூன்றாய்ப் பகுத்தால் இரண்டு மிச்சம். நான்காய்ப் பகுத்தால் மூன்று மிச்சம். ஐந்தாய்ப் பகுத்தால் நாலு மிச்சம். ஆறாய்ப் பகுத்தால் ஐந்து மிச்சம். ஏழாய்ப் பகுத்தால் கணக்கு சரியாய் இருக்கும்'' (என்றாள். கூடையில் எத்தனை முட்டைகள் இருந்தன?),

## 1111. குருக்ஷேத்திர மாலை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 837

ஆ. ந/38

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. குருக்ஷேத்திர மாலை

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 444

### 3. தோற்றக் கூறுகள்

அ. 62 ஏடு; 124 பக்கம்.

ஆ. நீளம் 43 செ, மீ; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.

உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது.

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தென்னவன் வில்லிமுன் சென்று கானிலே
மன்னவன் குருச்சேத் திரன வமையாய்
பொன்னெனக் காத்தநற் புகழைக் கூறவே
கன்னலின் மொழிச்சுவை யானை காப்பதாம்.

(இரண்டாம் அடி விளங்கவில்லை).

ஆ. முடிவு

ஆதிமால் அரனும் வாழி அயனுடன் முனிவர் வாழி
சோதிகார் மேகம் வாழி தொல்லுலகு ஏழும் வாழி

மூதறி வாளர் வாழி முத்தமிழ்ச் கவியோர் வாழி
நீதிஆ லயமும் வாழி நிசமுற வாழி தானே. (444)

இ. பிற்குறிப்பு.

பவ வருஷம் வைகாசி மாதம் 9ஆம் தேதி எழுதத் தொடங்கினது.

## 1112. அல்லி அரசாணி அம்மானை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 838
ஆ. ர/12

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ...........
ஆ. அல்லி அரசாணி அம்மானை
இ. நாட்டுப்பாடல்
ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 122 ஏடு; 244 பக்கம்.
ஆ நீளம் 43·5செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு இரு பத்திகள்; பத்திக்கு 5 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து; பிழைகள் மிகுதி.
ஊ. பல ஏடுகள் முறிந்துள்ளன. மிகச் சிதைவுற்ற நிலை
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அல்லி அரசாணி அம்மானை பாடுதற்குக்
கல்விக்கு அரசே கணபதியே முன்நடவாய்

ஆராரும் கேட்க அல்லிகதை பாடுதற்குக்
காராரும் மேனிக் கணபதிதாள் காப்பாமே.

ஆ. முடிவு

எங்கும் தழைக்க இனிதாக வாழிய(வே)
வையகம் தழைக்கமழை மாரிமிகத் தான்பொழி(ந்து)
ஆல்போல் தழைத்து அறுகுஅதுபோல் வே(ரோடி)
மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்(திருப்பார்)

இ. பிற்குறிப்பு

துத்துபி வருஷம் சித்திரை மாதம் 12ஆம் தேதி அல்லிமாலை (எழுதி நிறைவேறி)னது. சிவமயம். ராமசெயம். ராசலிங்கம் து(ணை)

5. பிற செய்திகள்

நூல் அல்லி அரசாணி அம்மானை எனத் தொடங்குகிறது. ஈற்றுக் குறிப்பு நூற்பெயரை அல்லிமாலை எனக் குறிப்பிடுகிறது. அச்சில் உள்ள அல்லி அரசாணி மாலை என்பது இதனின் வேறாகத் தோன்றுகிறது.

## 1113. நளச்சக்ரவர்த்தி நாடகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 839

ஆ. ற/50

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. நளச்சக்ரவர்த்தி நாடகம்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுளும், உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 80 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 113 ஏடு; 226 பக்கம்.

ஆ. நீளம் 38 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.

உ. சற்றுக் கிறுக்கலான கையெழுத்து.

ஊ. முதல் இரண்டு ஏடுகளும், 115க்கு மேல் இருக்க வேண்டியனவும் காணப்படவில்லை. உள்ளவை சுமாரான நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கொட்டம்இட்டு உலாவிப் பாயும் குரகதப் பரியில் ஏறி
வட்டம்இட்டு உலாவி ஓங்கும் வான்கடல் சூழ்ந்த பூமி
திட்டம்இட்டு உலாவிச் செங்கோல் செய்நள ராசன் வாசல்
கட்டியக் காரன் வந்து களரியில் தோன்றி னானே.

ஆ. முடிவு

மன்னவா நீதான் தோற்றால் மனைவியை அருள்நான் தோற்றால்
என்னுடை உயிரும் நாடும் ஈகிறேன் எனஇ சைந்து
பன்னிய கவர்கை கொண்டு பரிவுடன் ஆட வீறு
சொன்னபுட் கரனும் தோற்றான் சூதையும் நளன்வென் றானே.

வசனம்:- நள ரா(ச)ன் கோட்டைக்குள் புஷ்கரனிடத்தில் வந்து ஒரு ......

(இதற்கு மேல் ஏடுகள் காணப்படவில்லை.)

## 1114. குசலவ நாடகம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 840

ஆ. ற/51

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. குசலவ நாடகம்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 162 ஏடு; 324 பக்கம்.
ஆ. நீளம் 50 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது.
ஊ. 125 ஆம் ஏடு முறிந்துள்ளது. மற்றவை நல்ல நிலை
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திசைகள்புகழ் ஸ்ரீராமர் செல்வர்என வேஉதித்த
குசலவ நாடகத்தைக் கூறுதற்குச் — சுசிகரம்சேர்
இந்துஅணியும் சங்கரனார் ஈன்றஉயர் தும்பிமுகன்
கந்தமலர்ச் செஞ்சரணம் காப்பு.

ஆ. முடிவு

சீர்மிகுந்த குசலவநா டகமும் வாழி
ஸ்ரீராமர் வாழிஇளை யோரும் வாழி
பேர்மிகுந்த ஜானகியாள் அறவோர் வாழி
பெருமைமிகு முதியோர்கள் மன்னர் வாழி

பார்மிகுந்த இந்தநல்நா டகத்தை அச்சில்
பதித்தரங்க சாமிசுபம் பொருந்தி வாழி
ஏர்மிகுந்த உலகில்இதைப் படிப்போர் கேட்போர்
யாவர்களும் இன்பமுற வாழி மாதோ.
குசலவ நாடகம் முற்றிற்று.

இ. பிற்குறிப்பு

பிச்சம்பட்டி வையாபுரிப் பிள்ளை மகன் வெங்கடாசலம் பிள்ளை கைப்பட எழுதியது. பிரசோத்பத்தி வருஷம் புரட்டாசி மாதம் 18ஆம் தேதி.

5. பிற செய்திகள்

இச்சுவடி அமரம்பேடு இரங்கசாமி முதலியார் அவர்களால் பதிப்பிக்கப்படுவதற்காக எழுதப்பட்டது. இஃது திருமயிலை கன்னியப்ப முதலியாரால் அச்சடுக்கப்பட்டது என்ற குறிப்பும் விளம்பரமும் உள்ளன.

## 1115. பாண்டவர் வனவாசம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 841

ஆ. ர/13

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. பாண்டவர் வனவாசம்

இ. நாட்டுப் பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 21 ஏடு; 42 பக்கம்.

ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 2.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 2 பத்தி; பத்திக்கு 6 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. சுவடின் நிலைமை நன்றாக உள்ளது.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஐந்து கரத்தோனே அருள்சடையான் புத்திரனே
அறுமுகற்கு மூத்தவரே ஆனைமுகப் பிள்ளையாரே
தொந்தி விநாயகரே தொப்பைக் கணபதியே
பானை வயிற்றோனே பழம்ஏந்தும் கையோனே
மூல முதலேநீர் முன்நடக்க வேணும்ஐயா.

ஆ. முடிவு

வடக்குத் திசைநோக்கி மன்னவர்கள் போரதில்லை
அவ்வனத்தி லேஒருநாள் அடங்காத வீமனவன்
மெத்தஆங் காரத்துடன் மதகரியான் ஏதுசெய்வான்
கடுகி எழுந்திருந்தான் கனிகள் பறிக்கவென்று
(இதற்குமேல் ஏடுகள் இல்லை).

## 1116. அரிச்சந்திரன் அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 842
ஆ. ர/14

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. ......
ஆ. அரிச்சந்திரன் அம்மானை
இ. நாட்டுப்பாடல்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 212 ஏடு; 424 பக்கம்

ஆ. நீளம் 42•5 செ.மீ.; அகலம் 2•5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு இரண்டு பத்தி; பத்திக்கு 5 வரி.

உ. எழுத்து நிலை நன்றாக உள்ளது

ஊ, முதல் 78 ஏடுகள் காணப்படவில்லை. மற்றவை நல்ல நிலை,

எ, குறை

4. சிறப்புச் செய்திகள்

அ, தொடக்கம்

வீறான மங்கையரும் மெய்ப்பான ஆடவரும்
சென்றுவந்து தான்அணுகிச் சீர்வேந்த னைத்தொழுது
நன்றிபெற வும்வணங்கி நாட்டமுடன் நிற்கலுற்றார்
ஆதி புகழ்மன்னன் அடர்ந்ததெரு வீதிதொறும்
வீதி வலமாக மிகவந்தார் அம்மானை.

ஆ. முடிவு

அம்புவியில் இந்த அரிச்சந் திரன்கதையை
இன்ப முடனே இதமாய்ப் படிப்போரும்
எழுதிமிக வைத்தவரும் இசைவாக வேபெருகி
பழுதிலா ஈசன் பதம்பெற்று இருந்திடுவார்.

விருத்தம்

ஆதி வாழி அருமறை வாழி (இதற்குமேல் எழுதப்பட வில்லை)

## 1117. வீடணன் அறிவுரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 843

ஆ.. ந/86

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . .

ஆ. வீடணன் அறிவுரை

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 69

## 3. தோற்றக் கூறுகள்

அ. 35 ஏடு; 7 பக்கம்

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் 4 வரி.

உ. தெளிவான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மதத்தினால் வலிய வீரன் மன்னனுக்கு இளையோன் தம்பி
விதத்தினால் இலங்கை ஆண்ட விபீஷணன் சொன்ன புத்தி
செகத்தினில் நல்லோர் கேட்கத் திருவழுந் தூரான் சொன்ன
கதைக்குநான் முகத்தோன் மாதும் கந்தனும் காப்புத்
தானே (1)

ஆ. முடிவு

கோடா கோடி படைகூடிக் கொடிவேல் அரசர்
தன்னாலும்
வாடா வேந்தே எனக்குளதிராய் வருவார் உண்டோ
வையகத்தில்
நாடுஆள அறியாத் தார்வேந்தை நாரா யணனா
அடவுசொன்னாய்
போடா என்றால் போகலைநீ புத்தி யற்ற புகழ்வேந்தே
(69)

(இதற்குமேல் எழுதப்படவில்லை)

## 1118. வீடணன் அறிவுரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 844
ஆ. ந/87

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ............
ஆ. வீடணன் அறிவுரை
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 90

3. தோற்றக் கூறுகள்

அ. 45 ஏடு; 90 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.
உ. எழுத்து நிலை நன்றாக உள்ளது
ஊ. 42, 43 ஆகிய ஏடுகளும், 45க்குமேல் இருக்க வேண்டியனவும் காணப்படவில்லை. சுமாரான நிலை.
எ. குன்ற

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 843 காண்க.

ஆ. முடிவு

அரவணைப் பள்ளி கொள்ளும் அச்சுதன் ராமன் தன்னை
பாரினில் பறக்க விட்டுப் பரிசிலை விடுவ னென்று
சீர்கண்ணை விடுவ தில்லை சிறுத்ததோர் கரியன் முன்னை
திரைகடல் சேனை முன்னே செப்புவேன் ராமன் வன்மை.
(90)

(இதற்குமேல் ஏடுகள் காணப்படவில்லை).

## 1119. வீடணன் அறிவுரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 845

ஆ. ந/88

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .

ஆ. வீடணன் அறிவுரை

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 50

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு இரண்டு பத்திகள்; பத்திக்கு 4 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. 13ஆம் ஏட்டிற்குமேல் எழுதப்படவே இல்லை. சிதைவுற்ற சுவடி.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 843 காண்க.

ஆ. முடிவு

ஆதியும் முடிவும் இல்லா அருமறைக் கரத்தில் வாழும்
போதுவை யில்லா நீளம் எண்டிசைப் பொருப்பைத்
தாங்கும்

போதியும் மலையும் அந்தப் புயமும்இங்கு இருக்கக் கண்டு
ஏதுநீ உரைசெய் தாலும் விடுவதே இல்லை கண்டாய் (50)

(இதற்குமேல் எழுதப்படவே இல்லை).

இ. பிற்குறிப்பு

மன்மத வருஷம் ஆனி மாதம் 30ஆம் தேதி.
துரைசாமி விபீஷணப் படலம்.

5. பிற செய்திகள்

இந்நூல் விபீஷணப் படலம் எனவும் கூறப்படுகிறது.

## 1120. அரிச்சந்திரன் கும்மிப்பாட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 846
ஆ. ற/52

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. .........
ஆ. அரிச்சந்திரன் கும்மிப்பாட்டு
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள் 205 கண்ணி

3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு; 22 பக்கம்.
ஆ. நீளம் 43 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.
உ. கிறுக்கலான கையெழுத்து.

ஊ. ஈற்றில் 3 ஏடுகள் வலதுபுறம் முறிந்துள்ளன. சுமாரான நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அந்தி முகவனைப் பெற்ற மனோன்மணி
ஆதி பராபரை தாள்போற்றி
சத்திய வாய்மை தவறா அரிச்சந்த்ரன்
தாரணி ஆண்ட கதைஉரைப்பேன் (1)

ஆ. முடிவு

துன்பமுற் றேயிணை இல்லாப் புகழ்பெற்ற
சுந்தர னாம்அரிச் சந்திரன்கொம்மி
இன்ப முடன்இப் புவியோர் படித்திட
எழுதி முடிந்தது ஈசன்அருளால் (205)

அரிச்சந்திரன் கொம்மி முற்றிற்று.

## 1121. நீதிசாரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 847

ஆ. ள/9

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. ..........

ஆ. நீதி சாரம்; மூலமும் உரையும்

இ. நீதி நூல்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 30 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 18 ஏடு; 36 பக்கம்.

ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான எழுத்து

ஊ. 12ஆம் ஏடு காணப்படவில்லை, 11,17,18,19 ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன. உள்ளவை நல்லநிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அனைத்துலகு எங்கும் தானாய் அமரர்தம் தேவன் ஆகி
நினைத்தவர் உளத்தில் நித்தம் நேசமாம் நெடுமால் பாதம்
மனத்தினில் இருத்தி முன்னம் மறைவலோர் உரைத்த நீதி
இனத்தினைத் திரட்டி உள்ள சாரமாய் இயம்ப லுற்றேன்.

ஆ. முடிவு

சர்ப்பத்திலும் கொடியோர் யாரோவென்னில் துர்ச்சனன் கொடியன். அதே....வென்னில் சர்ப்பமானது மணிமந்திர அவுஷதங்களிலே கேட்கும். துர்ச்சனானவன் ஒருவர் பேச்சும் கேளானென்றவாறு. (60)

இ. பிற்குறிப்பு :

தானப்பட்டியிலே இருக்கும் தொப்பபிள்ளை மகன் வீரமலைப் பிள்ளை நீதிசாரம் முற்றும்.

## 1122. கூளப்பநாயக்கன் காதல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 848
ஆ. ய/52

## 2 உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . .

ஆ. கூளப்பநாயக்கன் காதல்

இ. சிற்றிலக்கியம்

ஈ. செய்யுள் 371 கண்ணி

## 3. தோற்றக் கூறுகள்

அ. 37 ஏடு; 74 பக்கம்.

ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி

உ. தெளிவான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பேரான பெஞ்சைப் பெரியநா கேந்திரன்மேல்
சீராரும் காதலையான் செப்பவே — நேராரும்
அக்கனித ரச்சொலிமுன் அப்பனைவ லத்தில்வரு
கைக்கசமு கக்கடவுள் காப்பு.

ஆ. முடிவு

சீர்வாழி லோகம் செழித்துமிக வாழி ஒன்ப
தூர்வாழி வெள்ளை யுபையங் கொடிவாழி. (370)
பெஞ்சை நகர்வாழி பெரியநா கேந்த்ரதுரை
கஞ்சமலர் மாதின் கருணைபெற்று வாழியதே. (371)

இ. முற்குறிப்பு

ஆனந்த வருஷம் மார்கழி மாதம் 23ஆம் தேதி புதன்கிழமை எழுதத் தொடங்கினது.

பிற்குறிப்பு

ஆனந்த வருஷம் தை மாதம் 15ஆம் தேதி முற்றுப்பெற்றது. தாளப்பட்டியிலிருக்கும் வீ ர ம லை ப் பிள்ளை மகன் முனிய பிள்ளை புண்ணிய குமாரன் தொப்பனுக்கு எழுதிய கூளப்ப நாயக்கன் காதல்.

6. .................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1123. மகாபாரத அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 849

ஆ. ர/15

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .

ஆ. மகாபாரத அம்மானை

இ. நாட்டுப் பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 151 ஏடு; 302 பக்கம்.

ஆ. நீளம் 34 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு இரண்டு பத்தி; பத்திக்கு 5,6 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. 11-17 வரையான ஏட்டெண்கள் இருமுறை வருகின்றன. 65ஆம் ஏடு முறிந்துள்ளது. சில ஏடுகள் சிதைந்து விட்டதால் பிறகு வேறொருவரால் புதிதாக எழுதிச் சேர்க்கப்பெற்றுள்ளன. சுமாரான நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

முந்திமுந்தி விநாயகனே முக்கணனார் தம்மகனே
சத்தி கணபதியே தையல்நல்லாள் புத்திரனே
வித்தைக்கு நல்ல வேதம் உடையவனே
புத்தியுடன் தந்தருளும் புண்ணியனே முன்நடவாய்

ஆ. முடிவு

வாளால் அபிமன்னன் வகையாகத் தெண்டனிட்டு
அப்போது மதவீமன் அன்பாக ஏதுரைப்பான்
வாருங்காண் என்மருகா வண்மையுள்ள மன்னவனே
அழகுள்ள பெண்திருவும் ஆரென்று கேட்கலுற்றார்
அப்போது அல்லிராசா அன்பாக ஏதுரைப்பான்.

(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1124. பெருமாள் அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 850–1

ஆ. ர/16

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .

ஆ. பெருமாள் அம்மானை

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 310 ஏடு; 620 பக்கம்

ஆ. நீளம் 44 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு இரண்டு பத்தி; பத்திக்கு 6 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. 70, 94, 140 ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன. 231, 250 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. உள்ளவை சுமாரான நிலை.

எ. முழுமை

அ. தொடக்கம்

அரியுமாய் அயனு மாகி அண்டமும் தானே யாகிப்
பெரியதாய்ச் சிறியது ஆகிப் பேச்சிதன் முலையை உண்ட
கரியமால் அரக்கர் தன்னால் கழல்இணை சரண மென்றால்
அரியவும் உளதோ எந்தன் அல்லலும் அகன்று போமே.

ஆ. முடிவு

ஆவாழி பூவாழி அனைவோரும் தான்வாழி
ஊர்வாழி பேர்வாழி உற்ற குருவாழி
வாழிசேர் நீடூழி மாயவனார் வாழிவாழி
திருச்சிற்றம் பலதேவர் சேனாபதி ரட்சிக்கவாழி,

பெருமாள் அம்மானை எழுதி முகிந்தது. முற்றும்.

இ. பிற்குறிப்பு

சாலிவாகன சகம் 1772. பவ கார்த்திகை 9 ஞாயிற்றுக் கிழமை கோயமுத்தூர் சில்லா கரூர் தாலுகா காக்காபாடி கிராமம் தாளப்பட்டியில் இருக்கும் தொப்ப பிள்ளை குமாரன் வீரமலைப் பிள்ளைக்கு மேற்படியூர் பிச்சம்பட்டியிலிருக்கும் வாத்தியார் வையாபுரிப் பிள்ளை மகன் வெங்கடாசலம்பிள்ளை கைப்பட எழுதினது பெருமாள் அம்மானை. எடுத்த பேர்கள் நன்றாய் வாசித்துக் கொடுக்க வேண்டியது.

## 1125. தனிப்பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 850–2

ஆ. ர/16

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. தனிப்பாடல்கள்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்.

ஆ. நீளம் 44 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. ஒரே பக்கம் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு இரண்டு பத்தி; பத்திக்கு 4 வரி.

உ. தெளிவான எழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அன்னத்தைப் போல நடையழ கீ!அடி ஆரணங்கே
என்னத்துக் காகநான் ஆசைகொண் டேன்இது நாள்வரைக்கும்
பொன்னிட்ட காதுக்கும் பூவர்ணச் சேலைக்கும் பூமுலைக்கும்
கன்னத்திற் பூசிய மஞ்சளுக் காவி கலங்கியதே.

ஆ. முடிவு

செங்கீரை ஆரியன் தாண்டவ ராயன் செழுங்கிரிமேல்
சங்கீத வல்லியை மார்போடு அணைத்துச் சரசம்செய்ய
இங்கித மாக மயிலாளைக் கூடி இருக்கையிலே
சங்கீத மேளத் துடனே நிலாவும் தனிப்பட்டதே.

## 1126. அசுவ சாத்திரம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 851
ஆ. ற/52

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. . . . . . . . .
ஆ. அசுவ சாத்திரம்
இ. பல்வகை நூல்கள்
ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 60 பக்கம் வரும்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 116 ஏடு; 232 பக்கம்.
ஆ. நீளம் 29·5 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நூலின் பயன்:- நெடிய கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் குதிரைகளின் குணம், சுழி, குறி, வடு, இலக்கணம், அளவு, பிரமாணம், சாதி, நிறம், தேகபலன், நாடி, குணவாகடம், அவிழ்தம், முறை முதலிய பொருள்கள் அடங்கிய அசுவ சாஸ்திரம் இதுவரையில் தமிழ்ப்பாஷையில் வழங்காமையால் குதிரை வைத்துச் சவாரிசெய்யப் பிரியமுள்ள கனவான்கள் தனவான்கள் மற்றுமுள்ளவர்கள் குதிரைப் பரிச்சையில்லாதவர் களைக் கொண்டு துர்ச்சுழி, துர்க்குறி, துர்க்குணம் முதலிய குதிரைகளை

அநேக திரவியங்கள் கொடுத்து விலைக்கு வாங்கித் துன்பப்படுவ தானாலும்......

ஆ. முடிவு

பெண்களின் சுபாவம் எப்படியோ அப்படியே குதிரைகளின் சுபாவம் என்று எண்ணிப் பெண்களை வசியப்படுத்தித் தனக்குள் அடக்கி ஆள்வதற்கு எப்படி இலகு, பிகு, பயம், பட்சம், நகைப்பு, நைப்பு முதலியவைகளைச் செய்யவேண்டியதோ அப்படியே குதிரைகளுக்கும் செய்து வசியப்படுத்தித் தனக்குள் அடக்கி ஆண்டு வரவேண்டும் சிவமயம்.

அசுவ சாஸ்திரம் முற்றியது.

இ. பிற்குறிப்பு

இந்தப் பொஸ்தகம் யாருதென்றால் காக்காவடியில் இருக்கும் கருப்பகவுண்டன் குமாரன் நல்லியணக் கவுண்டன் அசுவ சாத்திரம் என்று அறியவும். இந்தப் பொஸ்தகம் யார் எழுதியதென்றால் வாத்தியார் முத்துக் கருப்பக் கவுண்டன்.

## 1127. மார்க்கண்ட புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 852

ஆ. ந/89

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. குழந்தைவேலன், புதுவை,

ஆ. மார்க்கண்ட புராணம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 669

3. தோற்றக் கூறுகள்

அ. 94 ஏடு; 118 பக்கம்.

ஆ. நீளம் 42 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ,

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. சுவடியின் இடப்புறம் சிதைந்துள்ளது. 37 என்றும் ஏட்டெடன் இருமுறை எழுதப்பட்டுள்ளது. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வித்தை முத்தி விளங்கும் பராபர
சத்தி யீன்ற கரிமுகத் தாணுவைப்
பத்தி யாகப் பணிந்துஒரு வேதியன்
பெற்ற பெ.... ...... பேசுவாம். (1)

ஆ. முடிவு

ஆகையால் வேத நூலன் மார்க்கண்டன் அடைந்த பேற்றைப்
பாகமாய்ச் சொன்னேன் காதை படித்தவர் கேட்போர் யாரும்
ஏகையாய்ப் புகழ்ந்தோர் இந்த யிதினுட வளமை பெற்றுச்
சேகமாய்ப் புவியில் வாழ்ந்து சிவபதம் அடைந்து வாழ்வார்.. (162)

திருச்சிற்றம்பலம். எமனை எழுப்பிய சருக்கம் முற்றும். ஆகச் சருக்கம் பத்துக்குப் பாயிரம் உட்படத் திருவிருத்தம் 669 மார்க்கண்ட புராணம் முற்றும்.

இ. பிற்குறிப்பு:

ஆனந்த வருஷம் மாசி மாதம் 9 ஆம் தேதி சோமவார நாள் சதய நட்சத்திரமும் திரிதியையும் கூடிய சுபதினத்தில் மார்க்கண்ட புராணம் எழுதி நிறைவேறியது. முற்றும்.

## 1128. மாவிந்த நாடகம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 853

ஆ. ற/54

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. வாலை சேஷன்

ஆ. மாவிந்த நாடகம்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுளும் உரைநடையும், அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 124 ஏடு; 248 பக்கம்.

ஆ. நீளம் 40·5 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. ஈற்றில் 4 ஏடுகள் சற்றே சிதைந்துள்ளன. 124 ஆவது ஏடு வலப்புறம் முறிந்துள்ளது. மற்றபடி நல்ல நிலை.

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருதுணைசெய் அத்திபுரத்து அரசு செங்கோல்
  திக்குவிசை யம்செலுத்தும் தரும ராசன்
பரமபதம் உதவுகதி தருவை குண்டப்
  பதிஉலவும் சரிதைநா டகத்தைப் பாடப்
புரமூன்றை எரித்தவனே தழுவும் காளி
  புத்திரனே சரிந்ததொந்திப் பொருளே எந்தன்
கரம்இரண்டுக்கு உதவியதாய் நிற்க வேணும்
  கடவுள்சுத விகடதடக் கடவுளானே: (1

ஆ. முடிவு

நேயமிகு ..... ..... ......
..... ..... தவமும் வாழி
தூயதமிழ் பிழைபொறுக்கும் பெரியோர் வாழி
சொந்தம்நமக்கு அரிதிருமால் பதமே வாழி
..... ..... ..... நோக்கிப்
படிப்பவரும் கேட்பவரும் கதிசேர் வாழி
மாயவன்தன் அருமைதரும் பெருமை பூண்ட
வைகுண்ட ..... ..... .....

இ. பிற்குறிப்பு

.......... .. மார்கழி மாதம் 11ஆம் தேதி தர்ம நாடகம் எழுதி முகிந்தது. முற்றும். சம்பூரணம்.

## 1129. மகா பாரத அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 854
ஆ. ர/17

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........
ஆ. மகாபாரத அம்மானை-முதற்பகுதி
இ. நாட்டுப்பாடல்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 400 ஏடு; 800 பக்கம்.
ஆ. நீளம் 46 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு இரண்டு பத்தி. பத்திக்கு 7 வரி,

உ. தெளிவான எழுத்து

ஊ. சுமாரான நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஏடா வடமேரு எழுத்தாணி ஆகத்தன்
கோடாக மாமுனிசொல் குன்றாமல் — பாடப்
பழுதிலா வண்ணமிகப் பாரதத்தை எல்லாம்
எழுதினான் எங்கட்கு இறை.

ஆ. முடிவு

வெகுசால மண்டபத்தே வேந்தருடன் வாள் அபிமன்
ஆன கடோற்கயனும் அரியதோர் அராவானும்
உரித்தான ஆசனத்தே உற்றவரோ டேஇருக்க
அப்போது கேசவனும் அரியதொரு வேதியரை

... ... ... ...

(இதற்குப் பின் வரும் பகுதிகள் அடுத்த சுவடியில் உள்ளன. எண் ; 855 இல்)

## 1130. மகாபாரத அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 855

ஆ. ர/18

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. மகாபாரத அம்மானை-பிற்பகுதி

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 327 ஏடு; 654 பக்கம்.

ஆ. நீளம் 46 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு இரண்டு பத்தி, பத்திக்கு 7 வரி

உ. தெளிவான எழுத்து.

ஊ. நல்ல நிலை,

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

செப்பமுட னேஅழைத்துத் திறமாக நல்முகூர்த்தம்
இப்போதே சொல்லும்என்ன இதமான வேளைஎன்றார்
இதமான வேளைஎன்ன எல்லோரும் தான்மகிழ்ந்து
அரியசிங் காசனத்தில் அபிமனையும் கூட்டிவந்து
உரிமையுடன் அங்குவைத்து உற்றசடங்கு அத்தனையும்
வளமாகத் தான்நடத்தி வாய்த்ததொரு சுந்தரியை

ஆ. முடிவு

கருமேக வண்ணன் அயன்தனை ஈன்றவன் கஞ்சமலர்த்
திருமேவும் மார்பன் சிலையேந் தியவள்ளல் திருப்பதத்தைத்
தருமேவும் இந்திரன் தேவர்கள் போற்றிச் சரணம்செய்து
வருமென்று வைகுண்ட வாசனை யேதினம்
வாழ்த்துநெஞ்சே.

இ. பிற்குறிப்பு:

இந்தப் பாரதத்தை எழுதினது கலியுகம் 4970 ஆவது சுக்ல வருஷம் தை 17 வெள்ளிக்கிழமை மூலம் ஏகாதசி கூடிய சுப தினத்தில் தாளைப்பட்டியிலிருக்கும் வயிரப்பெருமாள் பிள்ளை குமாரன் தொப்பப்பிள்ளை ஈன்றெடுத்த செல்வப்புத்திரனாகிய வீரமலைப் பிள்ளைக்கு மேற்படி ஊர் பிச்சம்பட்டியில் இருக்கும் முத்தையபிள்ளை குமாரன் வையாபுரிப்பிள்ளை ஈன்றெடுத்த வெங்கடாசலம்பிள்ளை கைப்பட எழுதினது. பாரதக்கதை. இதை எடுத்தவர் வாசித்துக் கொடுக்கவேண்டியது.

5. பிற செய்திகள்

தொடர் எண். 854, 855 ஆகிய இரு சுவடிகளும் சேர்த்து ஒரு நூல் ஆகும்.

## 1131. அல்லி அரசாணி மாலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 856

ஆ. ர/19

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. அல்லி அரசாணி மாலை

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 130 ஏடு; 260 பக்கம்,

ஆ. நீளம் 45 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு இரண்டு பத்தி; பத்திக்கு 7 வரி.

உ. தெளிவான எழுத்து

ஊ. 130ஆம் ஏட்டிற்குமேல் காணப்படவில்லை. உள்ள ஏடுகள் நன்றாக உள்ளன.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அத்தி முகனே அரனார் திருமகனே
சத்தி கணபதியே சரிந்த வயிற்றோனே
காரானை மாமுகனே கணபதியே முன்நடவாய்
சீராமர் தன்மருகா செல்வக் கணபதியே

ஆ. முடிவு

தங்கத்தால் பொம்மைகளும் தந்தநாற் காலிகளும்
செம்பொன்னால் சீலைகளும் செம்பவள மாலைகளும்
வாழை கமுகுகளும் வண்ணமலர்ச் சோலைகளும்
சேரவே நாட்டிச் செம்பவளத் தூண்நிறுத்தி

இதற்குமேல் ஏடுகள் இல்லை

## 1132. வைகுண்ட அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 857

ஆ. ர/20

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. வைகுண்ட அம்மானை

இ. நாட்டுப் பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 308 ஏடு; 616 பக்கம்.

ஆ. நீளம் 44 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு இரண்டு பத்தி; பத்திக்கு 6 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. பல ஏடுகள் சிதைந்துள்ளன. 307ஆம் ஏட்டிற்குமேல் காணப்படவில்லை.

ஏ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வாரிசூழ் உலகு தன்னில் மன்னுயிர் துதிக்க வேண்டிச்
சீரிய தமிழி னாலே தெரிந்துநான் மாலை பாட
ஆரியன் அனந்த ராமன் அச்சுதன் கமலக் கண்ணன்
பாரிய மேக வண்ணன் பச்சைமால் பதமே காப்பாம். (1)

ஆ. முடிவு

வில்லம்பு தன்னை விலக்கியே நின்றவன்காண்
பாரின்மேல் ஆசைஅற்றுப் பரிந்தே பரகதியைச்
சேரவே தான்நினைந்து தீங்குஒன்றும் பேசாமல்
ஆவலுடன் இங்குவந்தான் அன்பாக நம்அருகில்
.. .. ... ...

(இதற்குமேல் ஏடுகள் இல்லை.)

## 1133. அண்ணன்மார் கதை

1. நூலகக் குறிப்புகள்

அ. 858
ஆ. ர/21

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........
ஆ. அண்ணன்மார் கதை
இ. நாட்டுப்பாடல்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 125 ஏடு; 250 பக்கம்.
ஆ. நீளம் 44 செ.மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு இரண்டு பத்தி; பத்திக்கு பலவித வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. 1-48, 131 ஆகிய ஏடுகளும் 174க்குமேல் இருக்க வேண்டியனவும் காணப்படவில்லை. 170க்குமேல் ஏடுகள் முறிந்துள்ளன.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பதினாறு வயதிற்குப் பார்உலகை ஆண்டிருந்து
பதினாறு முகிஞ்சுநீங்கள் பரலோகம் வாரபோது
வேடுபழி மூளும் வின்னவந்து நேரும்இப்போ
வேடுபடை பொருந்தநீங்கள் வினைப்போரு செய்யுங்கள்.

ஆ. முடிவு

அந்தஅடை யாளம்எங்கள் அண்ணரும் தானாகும்
என்றுசொல்லி உத்தமியாள் ஏங்கி அழுகையிலே
முத்தான வாய்திறந்து தாயார் பெரியகாண்டி
உத்தரவு ஏதுசொல்வாள்.
அஞ்சிக் கலங்காதே நல்லதங்காள் அழுகவேண்டாம்
சும்மாஇரு.
உங்கள்அண்ணா பட்ட படுகளத்தை . . . .
(இதற்குமேல் ஏடுகள் இல்லை).

## 1134. அகத்தியர் திருநடன சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 859

ஆ. ல/219

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் திரு நடன சூத்திரம் 48
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 13

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம்.
ஆ. நீளம் 36·5 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6,7 வரி.
உ. தெளிவான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

நாடியதோர் பூரணமாம் வேதாந் தத்தில்
நடனதிரு சூத்திரத்தைப் பாடு தற்கு
ஆடியதோர் கணபதியும் கந்தன் காப்பு
அருள்பெருகும் சித்தர்முதல் ரிஷிகள் காப்பு
கூடியதோர் ஞானபர வாலை யாலே
கூறுகிறேன் அகாரமுடி சிகாரத் தாலே
பாடியதோர் பலநூல்கள் பொய்யாய்ப் போக
பாலகர்க்கு எந்தனுட நூலு தானே. (1)

ஆ. முடிவு

வேமடா திரிகோணம் சிகார பீசம்
விளம்புகிறேன் சிவாயநம என்றே ஓதும்
காமமடா இரையாதே போகத் தாலே
கருணைவரும் பூரணத்தில் கலந்து ஆடும்

நாமடா உரைத்துஅல்லால் வேறே நூலில்
நன்றாகச் சொல்லவில்லை நாடிப் பாரு
தாமடா பெருநூலில் சாரம் சொன்னேன்
தரியான செம்புசுத்தி சார்பு கேளே. (13)

(இதற்குமேல் எழுதப்படவே இல்லை).

## 1135. இராமாயண வசனம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 860

ஆ. ம/15

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. இராமாயண வசனம்

இ. உரைநடை இலக்கியம்

ஈ. உரைநடை அச்சில் ஏறத்தாழ 300 பக்கம் வரும்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 339 ஏடு; 678 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. சற்றுக் கிறுக்கலான கையெழுத்து.

ஊ. பல ஏடுகள் சிதைந்துள்ளன. சுமாரான நிலை.

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கானேந்து தாமரை வாவியுள் ஆனை கராவில்நொந்து
ஊனேந்து மூலமென்று ஓதிய நாள்சென்று உதவுதலால்

தேனேந்து சோலை அரங்கன் இலாத தெய்வமில்லை
மானேந்து கைராமன் மழுவெடுத் தார்இந்த வையகத்தே.

(மூன்று, நான்காமடிகளின் யாப்பமைதி சரியாக இல்லை).

ஆ. முடிவு

வாழி வாழி வையகம் வாழியே
வாழி இராமன் மலர்ப்பதம் வாழியே
வாழி வாழி வைகுண்டம் வாழியே
வாழி இராமன் மலர்ப்பதம் வாழியே.

இ. பிற்குறிப்பு;

வெகுதானிய வருஷம் ஆவணி மாதம் 29ஆம் தேதி கோயமுத்தூர் ஜில்லா பல்லடம் தாலூகா சலக்கரச்சலிலே இருக்கும் தேவாங்கர் சாதி அப்பாச்சி செட்டிமகன் இராமன் செட்டியாருக்கு மேற்படி ஊர் மருதாசலவாத்தியார் எழுதிக்கொடுத்த நடை ராமாயணம். இராமசாமி கடாட்சம் பொருந்தி நிறைந்திருக்க வேண்டியது.

## 1136. மாட்டு வாகடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 861

ஆ. ல/220

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. மாட்டு வாகடம்

இ. மருத்துவம்

ஈ. உரைநடை. அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 30 ஏடு; 60 பக்கம்.

ஆ. நீளம் 24 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. சிதைவுற்ற நிலை
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆவாரங் கொழுந்து கொண்டுவந்து பசுவின் வெண்ணெயுங் கூட்டி வெந்நீர் விட்டு நேக அரைத்து, வெந்நீரில் கலக்கி முப்பது நாழிகையும் ஊற வைத்து, விடிந்து அந்தத் தண்ணீரைப் புழுத்தவிடம் புண்ணு மேலே தெளிக்கப் புழு விழுந்து புண்ணும் ஆறும்.

ஆ. முடிவு

கல்லிச்சிப்பட்டைச்சாறு இடித்து, ரெண்டுபடி சாறு வாழைப்பழத் துரலியும், ஈர வெங்காயமும் சமன்கூட்டி இடித்துச் சாறு வாங்கி, இரண்டுபடி சாறு, இரண்டும் ஒன்றாய்க் கலந்து மிளகுபொடி செய்து சாரைமண் இதுகள் கூடப் போட்டுக் கலக்கி வைத்துக் கொண்டு மூன்று நேரமும் வார்க்கவும். சாவளரி, பெருநோவும் இப்படிச் செய்யவும்.

## 1137. நெஞ்சறி விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 862
ஆ. ள/10

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. கணபதி தாசர்
ஆ. நெஞ்சறி விளக்கம்

இ. நீதி நூல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 24 ஏடு; 48 பக்கம்.

ஆ. நீளம் 31 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. சிதைந்துள்ளது. 2,3,16-20 ஆகிய ஏடுகள் இல்லை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வஞ்சக மனத்திலாசை மாற்றிய பெரியோர் தாளை
கஞ்சமா மலரிட்டேற்றுங் கணபதி தாசன் சொன்ன
நெஞ்சறி விளக்க மான நீதிநூல் நூறும் பாட
குஞ்சர மூர்த்திமூலக் குபேரன் காப்ப தாமே.

ஆ. முடிவு

உருப்படு கல்லும்செம்பும் உண்மையாய்த் தெய்வமென்று
மருப்புனை மலரைச்சூடி மணியாட்டித் தூபங்காட்டி
விருப்பமுற் றலைந்தாயந்த வினைமயல் விட்டுநின்று
இருப்பவ னாகநாதர் இணையடி பூசி நெஞ்சே (60)

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1138. மாட்டு வாகடம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 863
ஆ. ல/221

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ............
ஆ. மாட்டு வாகடம்
இ. மருத்துவம்
ஈ. உரைநடை. அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 18 ஏடு; 36 பக்கம்.
ஆ. நீளம் 18செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி
உ. சுமாரான எழுத்து
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

**சொக்குக்கு மருந்து :**

கரும்பைத் தின்னக் கொடுக்கச் சொக்குத் தெளியும். மசக்கொட்டையைப் பாலோடே தின்ன கொடுக்கச் சொக்குத் தெளியும். ஈர வெங்காயத்தையும் மிளகையும் வாயில் போட்டு மென்று' செவியிலூத சொக்குத் தெளியும்.
மந்திரம் :-

நந்தி ஈஸ்வரன் நடுவழி சென்று
புந்திப் பசியால் பூவைத் தின்று

தொந்தி சரிய சொக்கிக் கிடக்க
வந்த மனிதன் வாங்கி நீர்குடிக்க
எந்தனை யாளும் ஈஸ்வரன் ஆணை சொக்கிக்கிடக்க
எந்தனை யாளும் ஈஸ்வரன் ஆணை
சொக்கு இறங்கிப்போக சிவாய நமா.

ஆ. முடிவு

**மாடுகன்று பார்க்க:-**

கம்பு ரெண்டுபடி பொரித்து மாவாக்கி, கருப்பட்டியிட்டுக் கொதிக்க வைத்து, கன்றைக் கழுவி இந்த மாவை கன்றின்மேல் பூசி மாட்டின் மடியிலும் பூசி கன்றைப் பிடித்தூட்டி வைக்கவும்.

## 1139. சிவஞான தீபம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 864

ஆ. ட/166

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........
ஆ. சிவஞான தீபம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 27 ஏடு; 54 பக்கம்.

ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 3செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 11 வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. பல ஏடுகள் சிதைந்துள்ளன

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீரார்அக் கரமுதலாங் கலைகள் யாவும்
 சிவன்சத்தி நுதலியதத் துவங்கள் யாவும்
ஓராருஞ் சராசரமா முயிர்கள் யாவும்
 ஒண்ணரிய புவனமும்மற் றியாவு மெல்லாம்
ஆறாத கருணையினால் நோக்கி நோக்கி
 அளித்திரலி விழிநறவு மலரும் போலப்
பேராம லுயிர்க்குயிராய் மன்று ளாடும்
 பெருமானை யவனருளாற் பேணு வோமே. (1)

ஆ. முடிவு

கருமுகிகரன் சூழன்மட வாலியர்
 களபமென் நகிலி ணைகல வாரே
மருமல ரயனுட னரிமக பதிமிக
 மகிழ்பதி மனமு றமதி யாரே
உருவுத விருவினை விதிமதி விபரிதம்
 உறுயிரவி லெறியு தழலாரே
அருமறை முடிவினில் நடமிடு மிறையவன்
 அடிதொழு மடியவர் அடியாரே. (173)

சிவஞானதீப1 முற்றும்.

5. .................

6. .................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1140. நெஞ்சறி விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 865
ஆ. ள/11

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. கணபதிதாசர்

ஆ. நெஞ்சறி விளக்கம்

இ. நீதிநூல்கள்

ஈ. செய்யுள் 103

## 3. தோற்றக் கூறுகள்

அ. 21 ஏடு; 42 பக்கம்.

ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. பல ஏடுகள் சிதைந்துள்ளன

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 862 காண்க.

ஆ. முடிவு

கனகமா மணிசேர் மூல கணபதி தாச னானோன்
நினைவினா லறிந்து செப்பு நெஞ்சறி விளக்கம் நூறும்
வினவியே படிப்போர் கேட்போர் வினையெலா மகன்று
மெய்யுற
பனமெனு மோட்ச நாலாம் பதம்பெற்றுப் பரத்துள்
வாழ்வார். (103)

கணபதிதாசர் அருளிச்செய்த நெஞ்சறி விளக்கம் முற்றும்.

# 1141. வேதாந்த சூளாமணி

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 866

ஆ. ட/167

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. சிவப்பிரகாசர்: துறைமங்கலம்

ஆ. வேதாந்த சூளாமணி: மூலமும் உரையும்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 600 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 274 ஏடு; 548 பக்கம்.

ஆ. நீளம் 26 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8,9,10 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சில ஏடுகள் மேல்புறம் சிதைவு, சில ஏடுகளில் எழுதப் பெறவில்லை. சுமாரான நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அத்தி முகனடி நித்தம் நினைபவர்
சித்தி திருவொடு முத்தி பெறுவரே.

இதன் பொருள்: அத்தி முகன் - யானை முகத்தினுடைய விநாயக மூர்த்தியினது; அடி - உபய; பாதத்தை; நித்தம் - சதா காலமும்; நினைபவர் - தியானிக்கின்ற சத்துக்கள்; சித்தி திருவோடு - அஷ்டமாசித்தியாகிய செல்வத்துடன் (அஷ்டமா சித்தியாவது, அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராப்தி, பிரகாமியம், ஈஸ்வரத்துவம், வசித்துவம். அவற்றுள் அணிமா—மிகவுஞ் சிறிய உயிர்தோறும் பரம காஷ்டையாய்ச் சென்றிருத்தல்; மகிமா—மிகவும் உயர்ந்த மக மேருவைப்போல ஆக வேண்டுமெனில் ஆதல்; இலகிமா - மேரு பாரத்தையொத்த யோகியை எடுத்தால் இலேசாயிருத்தல். கரிமா — அணுப்போலிருக்கும் யோகியை எடுத்தால் மேருபாரமாயிருத்தல். பிராப்தி — எவ்

வுலகத்தினுந் தடையறச் சஞ்சரித்தல். பிரகாமியம் – பரகாயப் பிரவேசம் பண்ணுதலும் அண்ட சராசரஞ் செய்தலும், இச்சித்த போகம் அனுபவித்தலும் மண்ணில் விண்ணில் உள்ள பொருள் களையும் முக்காலங்களையும் தனது தேக காந்தியால் அறிதலு மாம். ஈசத்துவம் – சர்வேஸ்வரனைப் போலத் தன்னிச்சை வழியில் முத்தொழில்களுஞ் செய்து சூரியன் முதலிய கோள்கள் ஏவல் கேட்க விளங்குதல். வசித்துவம் - தேவர் முதலிய உயிர் களையும் எல்லா உலகங்களையும் தன் வசமாகக் கொள்ளுதல். முத்தி பெறுவர் - உற்பத்தி நாசமின்றிய மோக்ஷத்தையுமடை வார்கள். ஏகாரம் ஈற்றசை.

ஆ. முடிவு

....,முமுட்சுத்தத்துவமாகிய நான்கு சாதனத்தையும் பெற்று – எவராலும் – பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர ராகிய நான்கு வருணத்தில் பக்குவிகள் யாவராலும்; என்றும் - எப்போதும்; தடுப்பரிய - நீக்குதற்கரிய; பிறவிநோய் - சன்ன மரண துன்பத்தை; தணிப்பதனுக்கு - நீக்குவதற்கு; எண்ணி – நினைத்து; ஆதரவின் - ஆசையினால்; அருட்குரவன் றனை - அருளிறையை; தேடி - அவர் எழுந்தருளியிருக்கின்றவிடத்தைத் தேடி; உருகும் - மனமுருகா நின்ற; அன்புடையோர்தமை - மிகுந்த சிறந்தா பக்தியுடையோர்கள்; காணில் - கண்டால்; உவந்து - சந்தோசத்துடன்; அளித்திடு - கொடுப்பாயாக, இதன் தாத்பரியம் - தீவிரதர பக்குவமுள்ள சாதன சதஷ்ய சம்பனான வதிகாரிக்கே ஈஸ்வரனுபவ நூலிற் பிறந்த மையினர்கட்கே இந் நூல் உரித்தென்பதை யுரைத்தியதாம் (185)

வேதாந்த சூடாமணி மூலமும் உரையும் முற்றுப்பெற்றது.

## 1142. திருக்களிற்றுப்படியார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 867

ஆ. ஞ/19

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. திருக்களிற்றுப்படியார்: உரை

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. செய்யுளும், உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்,

3. தோற்றக் கூறுகள்

அ. 81 ஏடு; 162 பக்கம்.

ஆ. நீளம் 17 செ. மீ; அகலம் 3,5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சில ஏடுகள் சிதைந்துள்ளன,

எ. குறை

4, சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

அம்மையப்ப ரேஉலகுக் கம்மையப்ப ரென்றறிக
அம்மையப்ப ரப்பரிசே வந்தளிப்பாம் — அம்மையப்பர்
எல்லா வுலகுக்கும் அப்புறத்தா ரிப்புறத்தும்
அல்லார்போல் நிற்ப ரவர்.

ஆ. முடிவு

....தோன்றுவதுபோல தீவாதசத்தினிபாத முடைய உயிர்கள் பல தோன்றினதுபோல நம்மை வந்திப்பார்கள் ஆகையால் அவர்களுக்கு இப்பிறப்பிலே பேரின்பமும் உதவி பிறப்பை அறுப்போமென்றறிவாயாக ஆகையால் காட்டாக்கினி வெளியாய்க் கண்டதனை யொக்குமென்றது - ஆசாரியனுக்குப் பிரகாசமாய் விளங்கப்பட்ட ஞான சொரூபமாகிய இன்ப வொளியே திருமேனி ஆகையால் வாட்டான விளங்குமுருவ மென்றது காரணமுங் காரியமும் காரியப்படுகையும் காரியப் பட்டுவிட்டதும் நாலுவிதமாய் இருக்கும்....

(இதற்குமேல் ஏட்டில் இடம் இருந்தும் எழுதப்பெறவில்லை)

5. ........................

6. ........................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1143. கீதாசாரத் தாலாட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 86
ஆ. ட/168

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. வேங்கடநாதன்—மாதை
ஆ. பரமார்த்த தரிசன கீதாசாரத் தாலாட்டு
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 103

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.
ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மாவையர்கோன் வேதநவில் வாய்வேங் கடநாதன்
காதையுறப் பார்த்தனுக்குக் கண்ணனருள் — கீதைத்

கருத்துயர்தா லாட்டாகக் கட்டுரைத்தான் யாருங்
கருத்துயர்தீர்ந் தெய்தக் கதி.

சீராரும் பரமார்த்த தரிசனத்தை யருள்செய்யப்
பேராருந் தேசிகனாம் பெருமானாய் வந்தவரோ, (1)

ஆ. முடிவு

பரம முனிவர் முன்னே பரிக்ஷித்தைத் தீண்டியன்று
பிரம சரியஞ் செலுத்தும் பேரொளியே கண்வளரீர் (103)

ஆதிமூ லம்விசயற் காதிமறை யின்பொருளை
ஓதியு ணர்த்துமிந்த உண்மைதனைக் — காதலுற்றுக்
கற்றோருங் கேட்டோருங் காசினியில் வாழ்ந்துமற்றும்
பெற்றோரே முத்தர்பெறும் பேறு.

பரமார்த்த தரிசன கீதாசாரத் தாலாட்டு முற்றும்.

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1144. ஞான சோபனம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 869

ஆ. டீ/169

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. வேங்கடநாதன் — மாதை

ஆ. ஞான சோபனம்

இ. தத்துவம்

ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு; 30 பக்கம்,

ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி,

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை,

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூவிசைந்த குழன்மடவார் புகழ்சோபனத் தமிழ்பாடக்
கோவியர்மோ கனரான கோபாலர் பதந்துணையே,

சுகமொழியோர் கற்குமிந்தச் சோபனச் செந்தமிழ்பாடச்
செகமூன்று மயல்விளைக்குஞ் சிலைக்காமன் துணையாமே.

ஆதிப் பெண்காள் சோபனமே அச்சுதப் பெண்காள்
சோபனமே

நீதிப் பெண்காள் சோபனமே நியமப் பெண்காள்
சோபனமே

கல்விப்பெண்காள் சோபனமே கற்புடைப் பெண்காள்
சோபனமே

செல்வப் பெண்காள் சோபனமே சிற்சுதப் பெண்காள்
சோபனமே,

ஆ. முடிவு

போதத் தமிழுக்கும் வடகலைக்கும்
புலவோர் தமக்கும் பொருள்விரித்துச்
சீதைக் கிறைவனென நீதி
செங்கோல் செலுத்தித் திசைபுரந்து
வேதப் பனுவன் மெய்ஞ்ஞான
விளக்கா வுலகை விளக்குமெங்கண்
மாதைத் திருவேங் கடனாத
மறையோன் வாழி வாழியவே,

## 1145. சுருதிசாரம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 870
ஆ. ட/170

### 2. உள்ளீடு; நூல் விவரம்

அ. ..........
ஆ. சுருதிசாரம்; மூலமும் உரையும்
இ. தத்துவம்
ஈ. செய்யுளும் உரைநடையும்,
அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம்.
ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தேசிகன்தன் னடிவணங்கிச் சுருதிசாரத் தினுரைப்பாஞ்
சுகர்க்குப தேசித்திடும் வாக்கி யங்கள்
ஆசிற்பிர பஞ்சம தேபிர மோகமே
ஆமேவரத் தொய்தம்பிர மோகம தற்கப் பாலாம்
பேசிய பரவா பரவாதீதம் பிரமோகம்
பேசரிய சுவானுப வாதீதம் பிரமோகம்
நாசமிலா திவைநான்கு வாக்கியங்கள் தன்னை
நாரதாதி யர்நால்வர் நவின்றா ரன்றே.

ஆ. முடிவு

இப்படி மகாவாக்கிய விசாரமெல்லாம் பரோஷசமாய் நாட்டுமென்றால் அபரோஷச சித்தி எப்படிக் கூடுமென்றால் இதுவே பேசாமற் பேசிக்காட்டும் அனுபவத்தில், அத்தொய்தந் தானே சித்தித்திருக்கும். குறிப்பெஞ்சி நின்றதாகையால் அபரோஷசமாகிய மௌனாதீதமே பொருளென்றுங் குறிப் பெச்சமறிக. இப்படிச் சுகப்ரமரிஷிக்கு வியாசர், நாரதர், தக்ஷிணாமூர்த்தி, சனக மகாராசா இவர்களால் போதிக்கப்பட்டு சந்தேக நிவர்த்தியாய் அபரோஷச்சாஷசரத்கார சொரூபரானா ரென்று நாலு வேதத்தின் முடிவாகிய வேதசாரத்தினையும் தமிழினாலே பனுவலாகப் பண்ணப்பட்டது.

## 1146. சொரூபசாரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 871
ஆ. து/171

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. சொரூப சாரம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 37 ஏடு; 74 பக்கம்.
ஆ. நீளம் 28 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சிற்சொரூபந் தானே சசுச்சொரூப மானவெல்லாந்
நற்சொரூப சாரமாச் சாற்றவே — பொற்சொரூப
மச்சுருவாம் போலவது வதுவாய்த் தோற்றுமொரு
சொச்சொரூபந் தானே துணை.

சுசாதி விசாதி சுக்த பேதமின்மையின் அனைத்துஞ்
சித்தே யென வஸ்து நிச்சயங்கூறல்.

ஆ. முடிவு

பருவசா ரத்தாற் பலிக்குமனு பூதிச்
சொரூபசா ரத்தின் சுவையை — இருசெவியால்
உண்டிருக்க வல்லா ருலகமெல்லாந் தாமாகக்
கண்டிருக்க வல்லார்கள் காண். 102

சொரூபசாரம் முற்றிற்று.

## 1147. கைவல்ய நவநீதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 872

ஆ. ட/172

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தாண்டவராய சுவாமி

ஆ. கைவல்ய நவநீதம்-பூர்வபடலம்: மூலமும் உரையும்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 122 ஏடு; 244 பக்கம்.

ஆ. நீளம் 26 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வடமொழி தென்மொழியில் வல்லமையுள்ள இந்நூலாசிரியர் தாமடைந்த வத்துவிதஜ்ஞானஅய்யரிதியந்தஅபரோக்ஷிசாக்ஷரற் காரஅனுபவத்தை முமுட்சுகள் சுளுவில் அடைந்து ஆனந்தாதீத மாகும் பொருட்டுப் பேரருளினாற் சொல்லப் புகுந்த ........

ஆ. முடிவு

இந்நிலந் தனிற்கை வல்லிய நவநீத மெனப்பே ரிட்டு
நன்னில மருவுநா ராயணன் சொன்ன ஞான நூலிற்
புண்ணிய ராய்ந்து பார்ப்போர் பரமார்த்த சொரூபராகி
அன்னிய வனரத்த மண்டா லுலகினிற் தீர்த்த ......

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1148. வேதாந்த சூளாமணி

1. நூலகக் குறிப்புகள்

அ. 873

ஆ. ட/173

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .............

ஆ. வேதாந்த சூளாமணி; விசேஷார்த்தங்கள்.

இ. தத்துவம்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ300 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 152 ஏடு; 304 பக்கம்.

ஆ. நீளம் 31 செ.மீ.; அகலம் 4 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு பலவித வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்லநிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அத்திமுகன் - யானை முகத்தினையுடைய விநாயகமூர்த்தியினது. அடி - உபய பாதத்தை. நித்தம் - சதாகாலமும். நினைபவர் - தியானிக்கின்ற முமுட்சுக்கள். சித்தி திருவொடு - அஷ்டமாசித்தியாகிய செல்வத்துடன், முத்தி பெறுவர் - உற்பத்தி நாசமின்றிய மோக்ஷத்தையுமடையவர்கள்.

ஆ. முடிவு

மரத்தின் - நெடும்பணையோன் - நெடிய கிளையிலிருப்பவன், விழ - பூமியில் விழ, நினைவின்றியினும் - மனமின்மையாயினும், முறிய - அம்மரம் முறிந்து விழ, விழல்போல் -அம்மரத்தினிற்பவன் பூமியிதனமாவது போல,தேகாந்தமதனில் -தேகாந்தத்தில், உயர் - மேலான,முத்தியினை - மோக்ஷத்தை, பெறுவர் - அடைவர். சீவன் முத்தன் (சரீரமிருக்கும் பரியந்தம் எப்படியிருப்பனெனில்) உடற்கமைந்த சரீரத்திற்கு பொருந்திய வினையால் - பிராரத்த கன்மத்தால், பிறந்திடும் - உண்டான, துக்கானுபவம் - சுகதுக்கமனுபவித்தல். உளதாதல் - உண்டென்பது, திண்ணம் - நிச்சயம்.

இ. முற்குறிப்பு
'இஃது தருமலிங்கம் வேதாந்த் சூளாமணி'

## 1149. திருமந்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 874

ஆ. ல/222

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. திருமூலர்

ஆ. திருமூலர் திருமந்திரம் 200

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 200

ஈ. செய்யுளும் உரைநடையும்

3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு; 32 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

எண்ணா யிரத்தில் இருநூறு மந்திரம்
அண்ணாவி சொல்ல அடியே னறிந்தேன்
சொண்ணான் சிகப்பு சேர்பச்சை நீலம்
வண்ணா னறிவான் வகாரத்தி றயமே. (1)

ஆ. முடிவு

குருவான தந்தையென் நந்தி யப்பா
திருமூலன் நானே செய்தொழில் சொன்னேன்
கருவூரான் கொங்கணன் போக ளிவர்கள்
தருபொய் தனிலடி யென்னே. (200)

திருமூல நாயனார் அருளிச் செய்த
திருமந்திரம் இருநூறு முற்றும்.

## 1150. காலங்கிநாதர் சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 875

ஆ. ல/223

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. காலங்கிநாதர்

ஆ. காலங்கிநாதர் சூத்திரம் 36

இ. மருத்துவம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சோதியுரு வாயகில மண்டல மெங்கும்
துகளில்பர வெளியாகிச் சுருபா னந்தம்
ஆதியுரு வந்தமதாய் அளவில் லாத
அகிலசரா சரஉயிர்கள் அனைத்து மாகிப்
பாதியுரு வொருபாகம் பெண்ணோ டாணாய்ப்
படர்ந்துநின்ற ஞானமென்னும் பரையோ டென்ற
வீதியுறு நால்வேதம் தங்கள் பொங்கும்
விரிகதிராம் ஆனைமுகன் பாதங் கொள்வாம். (1)

ஆ. முடிவு

போடப்பா வெண்ணெய்க்குச் சவுக்கா ரந்தான்
பொன்னான தங்கம்போல் வெளுத்துக் கட்டும்
கூடப்பா அண்டநீர் தன்னில் தோய்த்து
கொடுரவியில் போட்டிடவே கொடிய சுன்னம்
மூடப்பா சகலதுறைக் கெல்லா மாதி
மூச்சுவிட்டுப் பேசாதே முப்பத்தாறில்
சூடப்பா தத்துவநூல் அறியச் சொன்னேன்
சூத்திரமின் பலவாமே சோதி முற்றே. (37)

இ. பிற்குறிப்பு

காலாங்கி நாயன் போகருக்கருளினது. முற்கருவிபோலே முப்பத்தாறும் ஏழு லக்ஷம் கிரந்த முதல் சகல நூலுக்கும் கருவிநூல். மற்ற நூல்கள் பிற்கருவியாம்.

## 1151. சட்டை முனி நிகண்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 876

ஆ. ல/224

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சட்டைமுனி

ஆ. சட்டைமுனி நிகண்டு: சொச்ச சூத்திரம் 50

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 53

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.

ஆ. நீளம் 38 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சோதியே துரியவெளிக் குள்ளே ஐயர்
சொற்பெரிய கைலாசம் பரமே ஞானம்
ஆதியே ஞானபர கேது மார்க்கம்
அந்தரத்தே யென்றுரைத்தா லார்தான் காண்பார்
வாதியென்று பேர்கொண்ட சுந்தரமே ஐயா
வரிசையுட னுபசார வழலை மார்க்கம்
நீதியாய்ச் சொல்லுகிறேன் நினைவாய்க் காணும்
நிகண்டுபன் னிரண்டுநூறு நிலைத்திட் டோர்க்கே. (1)

ஆ. முடிவு

ஆமப்பா சுந்தரமே ஐயா கேளு
அண்டத்தின் சுண்ணமொடு வாசிமூலம்
நாமப்பா நிகண்டுபனி ரெண்டு நூறு
நாட்டினேன் சூத்திரம்போல் சொச்சம் பாடி
வாமப்பா ரெண்டுகாண்டம் வாதத்துக்கும்
மகத்தான சூத்திரத்தில் இருநூறு சொன்னேன்
தாமப்பா சூத்திரமும் நிகண்டுஞ் சொச்சஞ்
சூத்திரமும் பார்த்தவர்க்கு முத்தியாமே. (53)

**சட்டைமுனியார் நிகண்டுக்குச் சொச்ச சூத்திரம் முற்றிற்று முற்றும்.**

## 1152. அகத்தியர் திருநடன சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 877
ஆ. ல/255

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் திருநடன சூத்திரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 48

3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம்.
ஆ. நீளம் 38 செ.மீ.; அகலம் 3 செ.மீ
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. நல்லநிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 859 காண்க.

ஆ. முடிவு

தானென்ற சாதிலிங்கச் செந்தூரம் சொல்வேன்
தாம்பிரப் பொடிவெண் கருவா லரைத்துபூசி
மேனென்ற வழகில் முலைப்பால் மேலே
ஏழில்துத்தம் எருக்கம்பா லதற்கு மேலே

நானென்ற சாம்பிராணி சூடனி ரண்டும்
நலமாகச் சீலைசெய்து காடை மூண்டே
வேனென்ற சாதிலிங்கம் வெகுநோய்க்கு மாகும்
விளம்பிஞேன்நாற் பத்தெட்டுசூத்திரந்தான் முற்றே.
(48)

## 1153, ரோமரிஷி வைத்தியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 378

ஆ. ல/226

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ரோமரிஷி

ஆ. ரோமரிஷி வைத்தியம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 19

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்

ஆ. நீளம் 29 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நீதமுடன் ரோமரிஷி பூத லத்தில்
நெறிகெட்ட மானிடர்க்கு மருந்து சொல்வேன்
காதலுடன் கணபதியைத் தியானஞ் செய்து
கார்மேக நிறமுடைய தயிலம் போக்கு

ஆதரவாய் மருந்துவகை சொல்லக் கேளு
அப்பனே நிலவாகை சிவனார் வேம்பு
போதமுடன் விராலியுட மூலந் தானும்
புகழ்பெறவே கொண்டுவந்து உலர்த்திக் கொள்ளே. (1)

ஆ. முடிவு

சேரப்பா முன்சொன்ன அஞ்சுங் கூட்டித்
திறமாகப் பொடிசெய்து சீலையிற் பரப்பி
வாரப்பா திரியாகத் தைலந் தோய்த்து
வளம்பெறவே திரிகொளுத்தி பூத்தயிலம் வாங்கிக்
காரப்பா சிவகாமி பூசை செய்து
கழஞ்சிவெள்ளி யுருக்கையிலே தைலத்தாக்குப்
பாரப்பா ஏழுரை மாற்றுக் காணும்
பரமன்மேல் ஆணையிட்டோம் பசும்பொன்னாமே.
ரோமரிஷி வைத்தியம் முற்றிற்று.

## 1154. அகத்தியர் வைத்தியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 879

ஆ. ல/227

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் வைத்தியம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 205.

3. தோற்றக் கூறுகள்

அ. 38 ஏடு; 72 பக்கம்.

ஆ. நீளம் 29 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

௩. ஒருபக்கத்திற்கு 9 வரி.

௨. வெவ்வேறு கையெழுத்து

௩௮. நல்ல நிலை,

ஏ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூரணமாய் மும்மலமும் பொறியிற் சூடாம்
புகையெழும்பி மேகமதாய்ச் சிரசில் சூடாம்
காரணமாய் நீர்கலந்து கண்ணில் ரோகம்
கனலெழுந்த வாயுவினாற் கிராணிசூலை ரோகம்
மாரணமாம் வாதத்தி லெழுந்த மேகம்
மருவியதோர் பித்தத்தாற் கிராணியாச்சு
காரணமாய் வாயுவினால் குன்ம மாச்சு
சார்ந்தசிலேற் புனங்கூடில் சயமதாமே (1)

ஆ. முடிவு

ஈயவென்றே நூல்தொகைதா னிருநூற் றஞ்சு
இகத்திலுள்ளோர் மலைக்கவென்று இறங்கிச்
சொன்னோம்
தாயிழந்த பிள்ளைக்குத் தவக மில்லாத்
தன்மைபோல் இந்நூலைச் சாற்றி னேன்யான்
நோய்மிகுந்து சாவில்லை ஒருநா ளுந்தான்
உண்மையாய் சரச்செல்லாம் நீத்திக்கொண்டு
வாயமுடன் எண்ணெயொடு கிரதஞ் சொன்னேன்
வைத்திடுவாய் அனுபான வைத்தியம் முற்றே. (205)

வைத்தியம் முற்றும்

## 1155. புலிப்பாணி வைத்தியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 880

ஆ. ல/228

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. புலிப்பாணி

ஆ. புலிப்பாணி வைத்தியம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 501

3. தோற்றக் கூறுகள்

அ. 134 ஏடு; 268 பக்கம்.

ஆ. நீளம் 29 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. சுமாரான நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அண்டரண்ட மாகிநின்ற வானே காப்பு
ஆனந்த மாகிநின்ற உமையாள் காப்பு
குண்டமெனுங் குண்டலியின் குறியே காப்பு
குமரகுரு வென்முருகா பாதங் காப்பு
புண்டரிக மானதிரு மாலுங் காப்பு
புகழ்பிரமன் முதற்குலி சனையா காப்பு
சண்டமெனு மாருதம்போல் வையகத்தில்
சாற்றுகிறேன் போகருட பாதங் காப்பே. (1)

பிரமன் - பிரமா; குலிசன் - வைரவன்.

ஆ. முடிவு

நவின்றிட்டோம் வைத்திய மார்க்கம்
நன்றாகச் சொல்லிவைத்தேன் இந்நூல் வேண்டும்
பவின்றிட்ட நோயாளர் வைத்தி யோர்க்குப்
பண்பாகத் தொழுதேற்றித் தாம்பூல மீய்ந்து

இவின்றிட்ட மவைவயெல்லாம் அவர்க்குச் சொல்லி
இதம்பெறவே செய்தபின்பு அள்ளதங் கொள்வாய்
கவின்றிட்ட போகருட கடாட்சத் தாலே
காசினியில் புலிப்பாணி ஐந்நூறு முற்றே. (501)

புலிப்பாணி மகாமுனிவர் அருளிச்செய்த வைத்தியம் 500
முற்றிற்று

இ. பிற்குறிப்பு

ராமநாதபுரம் சீமைபள்ளிமடந் தாலூகா அல்லிக்குளம் கரியமால் அளக்கிற கிருபையினாலே நாரணப்ப ரெட்டியார் மகன் சுப்பாரெட்டி வைத்திய சாத்திரத்தை ஆருமொருத்தர் எடுத்த பேர்கள் கொடுக்க வேண்டியது.

5. பிற செய்திகள்

முதல் எட்டு ஏடுகளில், இந்நூலில் கூறப்பெறும் நோய்களுக்கான அகராதி எழுதப்பட்டுள்ளது.

## 1156. கைவல்ய நவநீதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 881
ஆ. டி/174

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தாண்டவராய சுவாமி
ஆ. கைவல்ய நவநீதம்: மூலமும் உரையும்
இ. தத்துவம்
ஈ. செய்யுளும் உரைநடையும்,
அச்சில் ஏறத்தாழ 560பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 245 ஏடு; 490 பக்கம்.
ஆ. நீளம் 29 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. சுமாரான எழுத்து,

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 872 காண்க.

ஆ. முடிவு

குலவுசற் குருவின் பாதக் குளிர்புன் றலைமேற்
கொண்டால்
உலகினிற் றீர்த்த மெல்லாம் உற்றபே றடைவார் போல
நலமையா குங்கை வல்ய நவநீத நூலைக் கற்றார்
பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார்.
(186)

இரண்டாவது சந்தேகந் தெளிதல் படலம் முற்றிற்று.
ஆகப் படலம் 2க்குப் பாடல் 296.
கைவல்ய நவநீதம் முற்றிற்று.

இ. பிற்குறிப்பு

விப வருஷம் மாசி மாதம் 8ஆம் தேதி மாயூரம் வள்ளலிங்க அய்யர் மகன் சுப்பராய உபாத்தியாரால் எழுதி முடிந்தது.

## 1157. அகத்தியர் சரக்கு சுத்தி

1. நூலகக் குறிப்புகள்

அ. 882–1

ஆ. ல/229

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் சரக்கு சுத்தி

இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 17

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி
உ. சுமாரான எழுத்து
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பதினெண் சித்தர் துதி

பார்த்திடவே நந்தீசர் மூலமூர்த்தி
பண்பான அகத்தீசர் சட்டநாதர்
கோர்த்திடவே இடைக்காடர் சிவாய சித்தர்
கொங்கணவர் கருவூரார் போகநாதர்
கூர்த்திடவே பதஞ்சலியார் கண்ணிச்சித்தர்
கோரக்கர் கமலமுனி சண்டிகேசர்
கார்த்திடவே மச்சமுனி புண்ணாக்கீசர்
காலாங்கி சுந்தரனுங்காப்புத்தானே.

பாகுடன் கணேசன் பாதம் பணிந்துமுக் குணங்க ளாய்ந்து
வாகடத் தொகுதி யெல்லாம் வகுத்த சூத்திரம தாக்கி
ஆகம விதியின் ஞாலத் தடர்ந்திடும் நோய்க ளெல்லாம்
போகநல் மருந்து சொல்வோம் புலத்தியா பொருந்திக்
கேளே. (1)

ஆ. முடிவு

மூட்டவே நேர்வாளஞ் சுத்திகேளு
முழுமேதிச் சாணியிலே வாளம் போட்டு
ஆட்டுவாய் கமலாக்கினி யாலே யப்பா
ஆறவிட்டு எடுத்ததனைத் தோடு போக்கி

முட்டுவாய் குற்றமறும் சுத்தி யர்கும்
உறவாகும் சரக்கோடு ஊட்டு பந்தாம்
நீட்டியே சுத்திவகை மெத்த வுண்டு
நினைவு கொண்டு இவ்வளவு சொன்னேன் பாரே. (17)
சுத்தி வகைகள் முற்றிற்று

## 1158. யாகோப் பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 882—2

ஆ. ல/229

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. யாகோப்

ஆ. யாகோப் 700 இல் சில பாடல்கள்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 298

3. தோற்றக் கூறுகள்

அ. 65 ஏடு; 130 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மூட்டியே சந்துவாய் சீலை செய்து
முதிரவதைக் கஜபுடமாய்ப் போடு போடு
நீட்டியிடு லோகங்கள் வெவ்வே றாக
நீட்டியே புடம்போடு வண்ணம் ஏறும்

ஆட்டிநின்ற காந்தத்தைச் செந்தூ ரிக்க
அறைகிறேன் சுத்திசெய்த காந்தத்தை வாங்கி
நாட்டியொரு சட்டிக்குள் காந்த மிட்டு
நலமாக மேல்சட்டி கவிழ்த்து மூடே. (1)

ஆ. முடிவு

விதியுயர்ந்த பதியானும் வேதத் தானும்
வீதவிடை மிளகுயிஞ்சி தெளிசுன மாட்டி
பதிகடலைப் போலுண்டை பண்ணி நெய்யில்
பார்த்திடவும் எலிக்கடியும் சுரமு மேகும்
கதிபடவே சூலைசன்னி கெட்டு ஓடும்
கிருபைதரும் நோய்களறும் புளியுந் தள்ளு
நிதிபெறவே வாயுபுத்திரன் என்று பேரு
நிதானித்தார் யாகோபு நிசஞ்சொன் னாரே. (298)

## 1159. யூகிமுனி பூரணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 883
ஆ. ற/230

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. யூகிமுனி
ஆ. யூகிமுனி பூரணம் 100
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்.
ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. சுமாரான எழுத்து
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒத்தையாம் கொம்புடைய கணேசன் பாதம்
ஓதரிய சிவனுடைய பாதம்போற்றி
நித்தியமாய் நிறைந்தவுமை பாதம் போற்றி
நினைவில் வைத்து அநுதினமும் துதியே செய்து
சித்தி பெற நாதாக்கள் பாதம் போற்றி
சித்தருட அடியிணையைச் சிறக்க வாழ்த்தி
நந்தியே பூரணத்தைச் சுருக்க மாக
நலமாக நூறாகப் பாடி னேனே. (1)

ஆ. முடிவு

காணவே நோயெல்லாந் தீர்ந்து போகும்
கனிவான தாளகத்தின் சுன்னத் தாலே
வாணவே வகைவிபர மாக வைத்து
வடிவாக யோக சித்தி வாத சித்தி
நாணவே நானூறு யிருநூறு பாரு
நலமாகச் சூத்திரத்தை நவின்று பார்த்து
தோணவே கைபாக மாகச் செய்தால்
தொல்லுலகில் ரசவாதஞ் சித்தி தானே. (100)

யூகி முனி பூரணம் முற்றும்.

## 1160. அகத்தியர் பஞ்சபூதக் கும்மி

1. நூலகக் குறிப்புகள்

அ. 884—1
ஆ. ல/231

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் பஞ்சபூதக் கும்மிச் சுருக்கம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 5

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 1 பக்கம்.

ஆ. நீளம் 37 செ.மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6,7 வரி.

உ. தெளிவான எழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கும்மியடி பெண்காள் கும்மியடி
கோரக்க நாதர் திருமூலர்
செம்மை யுறையூர் வண்ணான் பாதத்தைச்
சேர்ந்து கும்மியடியுங்கடி (1)

ஆ. முடிவு

பூசப் பூசப் பொருமு வளாம் — வாலை
பூப்போலே மலர்ந்து திரிவாளாம்
ஆசைக்கு இசைந்த துய்யானில்
அன்பதுக் கொன்றிடுந் தோழிப் பெண்காள். (5)

பஞ்சபூதக்கும்மி முற்றும்

## 1161. அகத்தியர் செயநீர்

1. நூலகக் குறிப்புகள்

அ. 884—2

ஆ. ல/231

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் செயநீர்—சுருக்கம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 2

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 1 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6,7 வரி.

உ. தெளிவான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தானென்ற குருமுறைக்கு நாத விந்து
 சார்வாகத் துவைத்தால் பசுமை காணும்
பானின்ற பசுமையறும் ரவியி னுள்ளே
 பரங்காக துருசியது மாவு மாச்சு
வானென்ற துருசிலே வீரம் போட்டு
 வாகான வழலையிட்டுச் சுக்கி லத்தை வாரு
வேனென்ற துருசோடே சாரஞ் சேர்த்து
 மேதிச்சு ஆட்டையிலே செயநீ ராச்சு. (1)

ஆ. முடிவு

நீரான செயநீரில் வீரஞ் சேர்த்து
நீடுபடக்க வாட்டையிலே கட்டிப் போகும்
நீரான செயநீரில் தாரந் தோய்த்து
நேர்பட வாட்டையிலே கட்டிப் போகும்
நீரான செயநீரில் கூட்டினங்க ளறிந்து
நேராகக் கழங்குசெந் தூரஞ் செய்யே. (2)

முற்றும்.

## 1162. நாதாந்தக் குறிப்பு

1. நூலகக் குறிப்புகள்

அ. 884—3
ஆ. ல/231

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. நாதாந்தக் குறிப்பு
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 11

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.
ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.
உ. தெளிவான எழுத்து
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அடியாகி யண்டரண்டத் தப்பா லாகி
அகாரமெனு மெழுத்ததுவே பாத மாகி
முடியாகி நடுவாகி மூலந்தன்னில்
முப்பொருளுந் தானாகி முதலு மாகி
படியாறு ஆறாறு படிக்கு மப்பால்
படிகூர்ந்தப் பரஞ்சோதிப் பதியு மாகி
அடியாகும் மூலத்தே அகார மாகி
அவனவளாய் நின்ற நிலை யதுவ தாமே (1)

ஆ. முடிவு

அருவல்ல உருவல்ல அன்பத்தோ ரெழுத்துமல்ல
தெருவல்ல தேடிநான் காணமாட்டேன் கருவல்ல
கலைகளல்ல கண்டதோர் வெளியுமல்ல கருவினாற்
தலத்தைப் பெற்றுக் குருதிட்டமாய்க் காணே (11)
நாதாந்தக் குறிப்பு முற்றும்

## 1163. போகர் வாதமுறை

1. நூலகக் குறிப்புகள்

அ. 884–4

ஆ. ல/231

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. போகர்

ஆ. போகர் வாதமுறை ஞானநூல்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 14

## 3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6,7 வரி.

உ. தெளிவான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தானென்ற வஸ்துவுக்குப் பெண்ணைக் கேளு
சந்திரன்போல் முகமதுவு மொப்பாய் வேணும்
வானென்ற மேகம்போல் குழலும் வேணும்
மணியதரம் பவழம்போ லிருக்க வேணும்
கானென்ற கஞ்சம்போல் கண்கள் வேணும்
சிறந்தரவி குலைமதிபோ லிருக்க வேணும்
ஊனென்ற உடம்பழகு உற்றுப் பார்த்தால்
ஓகோகோ பொற்றகடோ சம்பழமோ வென்னே. (1)

ஆ. முடிவு

ஆவெனவும் பத்மினிதான் கிடையாவிட்டால்
அடுத்தரெண்டாம் சித்தினியை அறிந்து கூடு
பாவெனவுஞ் சித்தினியுங் கிடையா விட்டால்
பகர்ந்துநின்ற அத்தினியைப் பார்த்துக் கூடு
தாவெனவு மிதுமூன்றா லாகும் வித்தை
சமுசயங்க ளொன்றுமில்லை தப்பா தொன்றும்
கோவெனவும் வாதமிடங் கொள்ளை போகும்
குறிகெட்ட வாதிகளே குறிப்பாய்ப் பாரே. (14)
போகநாதர் வாதமுறை ஞானநூல் முற்றும்.

## 1164. சட்டைமுனி கற்பம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 885

ஆ. ல/232

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. சட்டைமுனி

ஆ. சட்டைமுனி கற்பம் 100

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 101

3. தோற்றக் கூறுகள்

அ. 22 ஏடு; 44 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6,7 வரி.

உ. தெளிவான எழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பாடுகிறேன் காயசித்தி ஐயங்கரனே காப்பு
பரிவான சின்மயத்தின் பாதங் காப்பு
நாடுகிறேன் சித்தருட பாதங்காப்பு
நாதாந்த மனோன்மணித் தாய் பாதங் காப்பு
தேடுகிறே னென்றாலும் என்னூலைப் போலே
செப்பார்கள் சித்தரப்பா காய கற்பம்
பாடுகிறேன் காசித்திக் காதி யந்தம்
சொல்லுகிறேன் கற்பம் நன்றாய்க் கேளு கேளே. (1)

ஆ. முடிவு

பாரப்பா காயசித்தி செய்யும் மார்க்கம்
பஞ்சிட்டுப் பாரம் வைத்தாற் போலே சொன்னேன்
ஏரப்பா சித்தர் சொன்ன கற்பத் துக்கும்
இசைந்துபா ரிதுவப்பா யீடு மல்ல
.. .. .. .. .. .. .. ..
சொல்லாம லொளித்திட்டார் சித்தரெல்லாம்
காரப்பா குருபதத்தைக் காத்தால் சித்தி
காயசித்தி பாடினது காட்சி முற்றே. (101)

சட்டை முனியார் அருளிய கற்பம் நூறு முற்றும்.

## 1165. வெடி மருந்துகள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 886

ஆ. ற/55

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. வெடி மருந்துகள்

இ. பல்வகை நூல்கள்

ஈ. உரைநடை.
அச்சில் ஏறத்தாழ 10 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வெடிமருந்து: வெடியுப்பு 10 சேர், துவரங்கட்டை கரி 2 சேர், குழாய்க்கந்தகம் 10 சேர், சின்னப்படிக்குப் படி தண்ணீர் விட்டு, உப்பைப் போட்டுக் காய்ச்சி உருக்கி, தனித்தனியே நுணுக்கிக் கலந்து' வேறே வைத்திருக்கிற கந்தகம், கரித்தூளை உப்பைக் கீழே இறக்கிக்கொட்டிக் கிண்டி, சாக்கில் உலர்த்தி, முக்கால் ஈரத்தில் சூடாத்தி உரலில்போட்டு, இரண்டு பேர் உலக்கை கொண்டு, பேருக்கு 400, 400 உலக்கை இடித்து காய வைத்து, கட்டி உடைத்துக் கொள்கிறது, கரமாக வேண்டுமானால் உலக்கை 500

ஆ. முடிவு

### வில்லை முறை

பச்சைக் கற்பூரம் 2 வராகன், குங்குமப்பூ 1 வராகன், அதி மதுரம் 1 வராகன், சண்பகமொக்கு 1½ வராகன், பூஞ்சாந்து பட்டை 2½ வராகன், வெட்டிவேர் 3 வராகன், விலாமிச்சை வேர் 1 வராகன், திரவியப்பட்டை 2 வராகன், தெரியரிசிப்பால் 1 வராகன், கத்தூரிமஞ்சள் 2 வராகன், மட்டிப்பால் ½ வராகன், கல்பாசி 1 வராகன், பச்சிலை ½ வராகன், அகில் கட்டை 1 வராகன், சுத்தப்பால் சாம்பிராணி ½ வராகன், சங்கு நாக்கு நெய்யில் பொன் வறுவலாய் வறுத்து 2 வராகன், கிராம்புப்பூ ஆவின் பாலில் அவித்து உலர்த்தியது 2½ வராகன், மகிழம்பூ 1½ வராகன். ஆகச் சரக்கு 18ம் உலர்த்தி இடித்து, பன்னீர்விட்டு அரைத்து, சவ்வாது 1 வராகன், சந்தன அத்தர் 2 வராகன், மல்லிகைப்பூ அத்தர் 1 வராகன், நல்ல வெல்லம் 1 வராகன் தேன் ½ வராகன் விட்டுப் பிசைந்து வில்லை செய்யவும்.

இதற்குமேல் ஏட்டில் இடம் இருந்தும் எழுதப்பெறவில்லை)

## 5. பிற செய்திகள்

இந்நூலில் வெடிமருந்து, துப்பாக்கி மருந்து, சக்கரம், புதை வானம், வெள்ளை மத்தாப்பு, தேவகோட்டை ஐயர் வத்தி முறை, புதுச்சேரி அக்கரசாமி மடத்து வத்திமுறை, மேட்டுப்பாளையம் சுவாமி வத்திமுறை, வில்லை முறை' என்னும் தலைப்புகளில் செய்திகள் உள்ளன.

## 1166. யூகிமுனி பூரணம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 887

ஆ. ல/233

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. யூகிமுனி

ஆ. யூகிமுனி பூரணம் 200

இ. மருத்துவம்

ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.

ஆ. நீளம் 37 செ.மீ.; அகலம் 3 செ.மீ

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. குறை

### 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

ஆதிகுரு நாதனுட பாதம் போற்றி
அடுத்துநின்ற மயிலேறும் முருகன் பாதம்
நீதியாய்ப் பாதமலர் போற்றி செய்து
நிலையான அம்மையுட பாதம் போற்றி
சோதியென்ற சிவனுடைய பாதம் போற்றி
சொல்லுகிறேன் வாதபூ ரணத்தை நல்லாய்
கோதியே யிரண்டுநூறு தன்னாற் சொல்லக்
கூர்ந்துபா ரிந்நூலைக் கூர்ந்து பாரே. (1)

ஆ. முடிவு

தள்ளிடுவாய்க் கூட்டுவது யென்ன வென்றால்
    தாட்டிகமாய் நெய்யோடு பாலு மாகும்
கள்ளியே மோராகுஞ் சக்கரையு மாகும்
    கனிவாக யிதுவெல்லாங் கூட்டிக் கொள்ளு
துள்ளியே தேகமது உறைத்து நிற்கும்
    துடியான யுகாந்தவரை தேகம் நிற்கும்
மெள்ள .. .. .. .. ..
    .. .. .. .. .. (68)

இதற்குமேல் ஏட்டில் இடம் இருந்தும் எழுதப்பெறவில்லை.

## 1167. அகத்தியர் பள்ளு

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 888

ஆ. ல/234

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் பள்ளு 300

இ. மருத்துவம்

ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்.

ஆ. நீளம் 34 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்துக்கு 7 வரி

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதிபரை சிவனுடைய பாதம் போற்றி
அருள்ஞான வேதியர்தன் பாதம் போற்றி
நீதியினால் வடமொழியைத் தமிழ தாக
நேரான சாத்திரங்க ளெல்லாம் பார்த்து
ஓதியே அதைக்குறுக்கி முந்நூ றாக
உகந்துரச வாதமொடு பண்டி தங்கள்
வாதியே பள்ளாகப் பாடி னேன்பார்
வரிசையுடன் பார்த்துணர்ந்தோர் வைத்திய னாமே. (1)

ஆ. முடிவு

பத்திலே பதினைந்திலே வைத்தானில்லைக்—குடும்பன்
பண்டே சரடுகட்டிக் கொண்டநாள்முதல்
எத்திசையுந் தான்புகழும் பண்ணை யாண்டவர்—நல்லா
இன்பமாகக் கேளுமென்று தெம்புடன் பள்ளி
சொல்லியவள்—ரண்டையிடம்
ஆண்டை யின்னங்கேளு சேதியைச் சொல்லவா
ரம்பித்தாள்
சூதரசமான நல்ல மாத்திரைகள் சொல்வேன். .. ..

(இதற்குமேல் ஏட்டில் இடம் இருந்தும் எழுதப்பெறவில்லை.)

## 1168. இருபா இருபது

1. நூலகக் குறிப்புகள்

அ. 889
ஆ. ஞ/20

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அருணந்தியார்
ஆ. இருபா இருபது: உரை மட்டும்

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. உரைநடை.
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்,

ஆ. நீளம் 42 செ, மீ.; அகலம் 3.5 செ, மீ,

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி

உ. தெளிவுடன் கூடிய கையெழுத்து.

ஊ. பல ஏடுகள் சிதைந்துள்ளன,

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கண்ணுதலுங் கண்டக்கறையுங் கரந்தருளி எ-து.—நெற்றித் திருநயனத்தையும் நீலகண்டத்தையும், சிவனிவை முதலிய வற்றை யெல்லாம் மறைத்துக் கிருபையினாலே; மண்ணிடை யின் மாக்கள் மலமகற்றும் எ-து. — உலகத்தின் கண்ணிலே உண்டாகிய பக்குவ ஆன்மாக்களுக்கு மலமாயாதி கன்மங்களை யகற்றி விக்கும் பொருட்டு வெண்ணெய் நல்லூர் மெய்கண்டா னென்றொரு கான்மேவுவரால் வேறின்மை கைகண்டாருள்ளத் திற்கண் எ-து.

ஆ. முடிவு

ஒழுக்கறாத புனல்பொருந்திய பெண்ணையாறு சூழப்பட்ட வெண்ணெய் நல்லூர்க்குத் தலைவனாகிய மெய்கண்டதேவன் அருளே கோவிலாக உடைய தலைவன் - நண்ணிய மல முதலா யின மாய்க்குமுலக உயிர்க்கெல்லாமொரு கண்ணே எ-து. பொருந்திய மலமுதலியவற்றைக் கெடுக்குந் தலைவன் பிரபஞ் சத்துக்கும் ஆன்மாக்களுக்கும் அவனே புகலிடமென்றவாறு.
இச்செய்யுள் கர்த்தா விரிவித்த முறைமை கூறியது.

இருபா இருபது முற்றும்,

# 1169. திருவுந்தியார்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 890
ஆ. ரு/21

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. உய்யவந்த தேவ நாயனார்–திருவியலூர்
ஆ. திருவுந்தியார்: உரை
இ. மெய்கண்ட சாத்திரம்
ஈ. உரைநடை.
அச்சில் ஏறத்தாழ 60 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்.
ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. பல ஏடுகள் சிதைவுற்ற நிலை
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவுந்தி யென்கிற சாத்திரத்துக்கு வரலாறு – சைவ சித்தாந்தத்தின் உண்மையை யுணர்த்த வல்ல உய்ய வந்த தேவ ரென்று திருநாமத்தையுடைய பரம கலியாணன் உத்தர பூமி யினின்றும் தட்சண பூமியிலுள்ள ஆன்மாக்கள் ரட்சிப்பிக்கை காரணமாகக் காவேரிக்கரையிலே எழுந்தருளா நிற்க, திருவிச லூரில் ஆளுடைய தேவ நாயனார் கண்டு தரிசிக்கப் பெற்றுத் தரிசன விசேஷத்தினாலே இவருக்குக் கன்மத்தில் உபேட்சையும்

ஞானத்தில் அபேட்சையும் உண்டாய் ஸ்ரீ பாதத்திலே தண்டன் பண்ணிச் சுவாமி யடியேன் ஆதி தொடங்கிச் செனன மரண மாகிய துக்க சாகரத்திலே வீழ்ந்து கரைகாணாமல் அழுந்தா நின்றேன், அடியேனை இந்தத் துக்க சாகரத்தினின்று மெடுத் தருளித் திருவடியாகிய கரையிற் சேர்த்தருள வேணுமென்று ...

ஆ. முடிவு

உண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற எ-து அவர்களே அசத் தியத்தை அசத்திய மென்றறிந்து நீங்கிச் சத்தியத்தைத் தரிசித்து சாயச்சியத்தைப் பெற்ற நித்திய கல்யாணர்கள் என்றவாறு (45)

திருவுந்தியார் உரை பாடம் முற்றும்.

## 1170. கொடிக்கவி

1. நூலகக் குறிப்புகள்

அ. 891

ஆ. ஞ/22

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்

ஆ. கொடிக்கவி: உரை

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சிதைவுற்ற நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சார்புநூல் பண்ணின கொற்றங்குடியார் இதிலே கொடிக் கவி நாலு பாட்டு ஒரு சாத்திரமெல்லாத்துக்கு மேம்படச் சங்கையைத் திருவுளம் பற்றினதெனவறிக.

ஒளிக்கு மிருளுக்கு மொன்றேயிட மொன்றுமே
விடிலொன்று
ஒளிக்கு மெனினு மிருளட ராதுள்ளு யிர்க்குயிராய்த்
தெளிக்கு மறிவு திகழ்ந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும் படிகொடி கட்டினனே.

ஆ. முடிவு

சிவன்தானே இவனைக் கிரகித்துக்கொண்டு இவன் செய லெல்லாந் தன் செயலாகவும் இவனுந் தானாகவே நிற்பன். உ-ம். திருவுந்தி . . . . செயலற்றிந்த நாமற்ற பின் நாதன்தன் செயலானே யென்றுந்தீபற-இந்த மூன்று வகையுங் கண்டு கொள்க. (4)

கொடிக்கவி முற்றும்.

## 1171. உண்மை விளக்க உரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 892

ஆ. ஞ/23

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. மனவாசகங் கடந்தார்—திருவதிகை

ஆ. உண்மை விளக்க உரை

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்

ஆ. நீளம் 41 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி

உ. சுமாரான எழுத்து

ஊ. சிதைவுற்ற நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வண்மைதரு மாகமநூல் வைத்தபொருள் வழுவாது
உண்மை விளக்கம் உரைசெய்யத்—திண்மதஞ்
சொந்திறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியில் வைப் பாம்.

வண்மை தரு மாகம நூல் எ-து வளப்பத்தைத்தாராநின்ற ஆகமே நூலிலே; வைத்தபொருள் வழுவாதுண்மை விளக்கம் உரை செய்ய எ-து பரமேசுரனருளிச் செய்துவைத்த பதியினுண்மையும் பசுவினுண்மையும் பாசத்தினுண்மையும் வழுவாது இந்த நூலிலே விளங்கச் சொல்லுவது பொருட்டாக......

ஆ. முடிவு

மன்னதிகை வாழும் மனவா சகங்கடந்தான்
பின்னையார் வாழ்விலுறு மெய்கண்டான்—பன்மறைகள்
வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவாது
உண்மை விளக் கஞ்செய்தா னுற்று. (55)

**உண்மை விளக்கம் முற்றும்.**

## 1172. திருக்களிற்றுப்படியார் உரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 893

ஆ. ஞ/24

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. உய்யவந்த தேவநாயனார்: திருக்கடவூர்

ஆ. திருக்களிற்றுப்படியார் உரை

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 42 ஏடு; 84 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. மிகச் சிதைவுற்ற நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 867 காண்க.

ஆ. முடிவு

மாணவகனே பிருதிவி முதல் நாதரான தத்துவங்கள் சிருட்டிக்கும்படி அந்தந்தத் தத்துவங்களுக்குத் தத்துவமாய் நின்றானும் அந்தப் பரமேசுவரனே தோற்றப்பட்ட பூதகாரியங்கள் ஆன்மாக்கள் செய்த வினைக்கீடாகப் பெண், ஆண், அலியென்ன வகுப்புண்டு. வடிவாம்படி அவ்வயிற்றை வகுப்பித்து, அந்த வகுப்புக்கு வகுப்பாகி நின்றானுமந்தப் பரமேசுரனே

இவற்றை இப்படியறிந்து கூட்டி, இவை தானாய் நின்று நடத்துகையிலும் இந்த முறைமைகள் ஒன்றுமறியாதபடி திரோபவித்து, ஒருபணியற நின்றானும் அந்தப் பரமேசுரனே என்றவாறு (88) இப்படிக்கொத்த பரமேசுரனை இந்தத் திருட்டியினாலே காண வொண்ணாதோவென்று அன்பின் மிகுதியினாலே கேட்ட மாணாக்கனை நோக்கியருளிச் செய்கிறார். இன்றுதான் நீ என்னைக் கண்டிருந்தே கண்டாயோவன்றி நான்தான் உன்னைக்

(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1173. சிவஞான சித்தியார்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 894

ஆ. ஞ/25

### 2. உள்ளீடு: நூல் விபரம்

அ. அருணந்தியார்

ஆ. சிவஞான சித்தியார் : சுபக்கம் உரை

இ. மெய்கண்ட சாத்திரம்

ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 400 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 166 ஏடு; 332 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9, 10 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. மிகச் சிதைவுற்ற நிலை.

எ. குறை.

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருமகளுங் கலைமகளுஞ் சேவித் தேத்துஞ்
    சிவகாம சுந்தரியுஞ் சிவனு மீன்ற
குருமணியாங் குமரனுக்கு மூத்தோன் பாதங்
    கொண்டெனது புந்தியினிற் கூறு கின்றேன்
அருமறையுஞ் சைவநெறி யனைத்துந் தேர்ந்தே
    அருணந்தி தேவனா ரருளிச் செய்த
தருநிகருஞ் சிவஞான சித்தி யுண்மை
    தரும்பொருளைக் குருவருளென் தலைமேற் கொண்டே. (1)

ஆ. முடிவு

....சகல கர்மங்களும் எக்காலத்திலே பரிபாகமாகில் ஆணவ மலம் பக்குவமாகாமலிருந்தால் சகல கர்மங்களும் நசிக்க விஞ்ஞானகலனாவன் ஆணவ மலம் பக்குவமாகில் சத்திபதியும். அசுவ மேதப்பிரமகத்தி என்றது, சொர்க்க நரகத்துகேதுவாய், அன்னிய வுன்னிய விருத்தமாய் சம்பலமாயிருக்கிற பரலோகப் புண்ணிய பாவங்களுக்கு உபலட்சணம், இகத்திலும் அலியா கிறத்துக் கேதுவாகிற பாவமும், புருஷனாகிற தேகத்துக்கேது வாகிற புண்ணியமும். அன்னிய வுன்னிய விருத்தம் இவ்வாறு எல்லாங் கண்டு கொள்க. (40)

நாலாஞ் சூத்திரம் முற்றும்.

இ. பிற்குறிப்பு.

சார்வரி வருஷம் ஆவணி மாதம் 18ஆம் தேதி சோம வாரமும் பஞ்சமியும் கூடின சுபதினத்தில் எழுதி முகிந்தது.

# 1174. அத்வைத போத தீபிகை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 895

ஆ. டீ/175

2. உள்ளீடு: நூல் விபரம்

அ. ..........

ஆ. அத்வைத போத தீபிகை உரை

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 500 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 235 ஏடு; 470 பக்கம்.

ஆ. நீளம் 19 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி

உ. சுமாரான எழுத்து

ஊ. பல ஏடுகள் சிதைவு.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பரம குருவாய்ச் சகல செகத்துக்குஞ் சரணமாய்ச் சமுசாரத்தைக் கொல்லுகிறதிலே காரணமாய். அனாதி கசமுகனாயிருக்கிற விக்கினேசுபரனுடைய பாதார விந்தங்களை நமஸ்காரம் பண்ணுகிறேன். (1)

ஆ. முடிவு

இப்படியாயுள்ள அளவிலே வாராயே சுமதே நீயுஞ் சருவ நினைவையும் விட்டு, பிரம்மமாத்திர நினைவுள்ளவனா யப்பிய சித்து, மனோலயம் பண்ணிச் சகலத்தையும் மறந்தத்தோயதீயப் பிரம்மமாத்திரமாய்ச் சுகியாவாயென்று குரு சொன்னார். இப்படி மனோலயப் பிரகரணம் சொல்லப்பட்டது.

# 1175, திருப்பதிக் கோவை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 896—1

ஆ. ற/56

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. திருப்பதிக் கோவை

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள் 17

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.

ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 16 வரி.

எ. சிறிய கையெழுத்து.

ஊ. சுமாரன நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவளருந் தில்லைநகர் வேட்களம் நெல்வாயில்
திருந்துகழிப் பாலைநல்லூர் மணத்திக் கெல்லாம்
பரவுமயேந் திரப்பள்ளி பொன்னிவட கரைமேற்
பின்முல்லைவா யில்கலிக் காமூர் சாய்க்காடு
கருதுதிருப் பட்டினத்துப் பல்லவ னீச்சரம்வெண்
காடுகடற் கரைக்காட்டுப் பள்ளிகுரு காவூர்
பிரமபுரங் கோலக்காப் புள்ளிருக்கும் வேளூர்
பிறங்குகண்ணார் கோயில்கடை முடிநின்றியூரே. (1)

ஆ. முடிவு

செங்கமல வாவிபுடை சூழ்துளுவ னாட்டிற்
செழித்ததிருக் கோகர்ண மெனுந்தலமொன் றுமையாள்
பங்கர்திருப் பருப்பதமிந் திரன்பணியு நீலப்
பருப்பதம னேகதங்கா பதந்திருக்கே தார
மங்குறவழ் திருநொடித் தான்மலை வடக்கையோர்
வகையாகப் பார்க்கினிரு நூற்றெழுபா னாநகரந்
துங்கமிகு மூவர்தமி ழிருக்குநகர் வைப்புத்
தொகுக்கிலனே கங்களிவை துதித்திடில்வீ டெளிதே. (17)

## 1176. வைப்புத் திருப்பதிக் கோவை

1. நூலகக் குறிப்புகள்

அ. 896-2

ஆ. ற/56

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . .

ஆ. வைப்புத் திருப்பதிக் கோவை

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள் 7

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்

ஆ. நீளம் 23 செ.மீ.; அகலம் 5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 16 வரி

உ. சிறிய கையெழுத்து.

ஊ. சுமாரான நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திங்களூர் பிடவூர்கோ வந்தபுத்தூர் குருக்கேத்
திரம்பொதிய மலைதேனூர் விராடபுரஞ் சூல
மங்கைமாலூ ரளப்பூருற் றத்தூர் சேற்றூர்
மானிருப்பி ராப்பட்டீச் சரஞ்சித்த வடங்காளி
இங்கமுஞ்சை மாகாளம் நல்லாற்றூர் பேரூர்
எம்பபேரூர் குன்றியூர் விடவை பெங்கூர்
செங்குன்றூர் வெற்றியூர்மு வலூர்கருப் பூர்திருத்
தேவனூர் மயிண்டீச்ச ரங்குருந்தங் குடியே

ஆ. முடிவு

மறையனூர் பிறையனூர் தேரனூர் காலம்வாந்தை
புச்சிலிலி மாகச்சை யூர்விடங்க ளூர்சீர்
நிறையனூர் தேசனூர் பேரனூ ருடனே
நிகழ்த்துமுன்னி ரோடங்கோத் திட்டைகர புரத்தோடு
இறையவனார் மருவியவைப் புத்தலங்கள் இவைநூற்று
எண்பத்தெட் டாகுமிசை யாலிவற்றைத் துதித்தோர்
குறையாத செல்வமுடன் வாழ்ந்துதிரு வருளே
கொண்டுசிவ பதமடைவர் பண்டைவினை யறவே.(7)
வைப்புத் திருப்பதிக்கோவை முற்றும்.

5. ........................

6. ........................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1177. அடைவுத் திருப்பதிக் கோவை

1. நூலகக் குறிப்புகள்

அ. 896–3

ஆ. ற/56

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . .

ஆ. அடைவுத் திருப்பதிக் கோவை

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள் 24

## 3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 6 பக்கம்.

ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 16 வரி.

உ. சிறிய கையெழுத்து.

ஊ. சுமாரான நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒருநூற்று நாற்பத்தொன் றூர்குடி தானான்
உறைந்துயர்தான் மூன்றிரண்டென் றுணர்ந்திடுக துருத்தி
திருவாயிற் றொகைபதினொன் றீரேழாம் பள்ளி
செப்பியவீ சுரமிருபத் தொன்பதுசெந் திருமாது
அருணமேவு காடுபதி னொன்றுதுறை யீரெட்டு
அறைந்தமலை யதுமூவெட் டாகுமங்கை நான்காம்
புரமோரெட் டாறெட்டுத் தளியைந்தாம் பாக்கம்
புகன்றவிரண் டாகுங்கா வேழுகரை மூன்றே. (1)

ஆ. முடிவு

சித்தவட மானிருபங் காளிங்க மிடவை
திருக்களர காம்பீலி யசோகந்தி கருமாரி
முத்தர்பயில் மாத்தாரந் திருவெட்டிக் களப்பாழ்
மொழிக்குஞ்சங் கொண்டல்முரு கவிழ்பாவ நாசம்

அத்தர்மகிழ் திருவாலம் பொழிலிவையூர் முதலாய்
மணிதிகழும் பலவிதமாம் பதியீறா யியம்பும்
உத்தமமாந் திருவிருத்த மிருபத்து நான்கும்
உரைப்பவர்கள் சிவலோகத் திருப்பதுநிச் சயமே. (24)
அடைவுத் திருப்பதிக் கோவை முற்றும்.

5. .................

6. .................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1178. பதிகக்கோவை

1. நூலகக் குறிப்புகள்

அ. 896-4
ஆ. ற/56

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........
ஆ. பதிகக்கோவை
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள் 19

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 5 பக்கம்.
ஆ. நீளம் 23 செ.மீ.; அகலம் 5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 16 வரி.
உ. சிறிய கையெழுத்து.
ஊ. சுமாரான நிலை.
ஏ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பன்னுசிவ தலமொருநூற் றைம்பதிற்று மூன்று
பதிகமொன்று நாற்பத்தொன் பதிற்பதிக மிரண்டா
முன்னுமிரு பதிற்றெட்டு நகர்ப்பதிக மூன்றா
மொருபதிற்றோர் தலம்பதிக மொருநான்கென் றுணர்க
முன்னுமிரு நான்குதல மோரைந்தே பதிக
மாறுமைந்து தலங்களுக்கு வரும்பதிக மாறாம்
பின்னுமைந்து தலங்களுக்குப் பெரும்பதிக மேழாம்
பெயர்த்துமோர் நான்குதலம் பெறும்பதிக மெட்டே. (1)

ஆ. முடிவு

பின்புசில நாளின்கண் வன்றொண்டப் பெருமான்
பிறங்குதிரு வெண்ணெய்நல் லூர்ப் பித்தாவென் றெடுத்தே
இன்பமுதற் திருப்பதிக மூழிதோறு மீறாய்
எடுத்ததொகை முப்பத்தே ழாயிரமாம் பனுவன்
முன்பவன்தன் கவிநொடித்தான் மலையைச் சேர்ந்து
முறைகளெல்லாந் திருந்தில்லை மூதூர் தன்னில்
அன்பவாகை இலச்சினையால் வைத்து மன்னர்
ஆராய்ந்து தருகவென்று அருளிச் செய்தார். (19)

பதிகக்கோவை முற்றும்.

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1179. பண்வரிசைப் பதிகக்கோவை

1. நூலகக் குறிப்புகள்

அ. 896—5

ஆ. ற/56

சு. வி. 16

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .........
ஆ. பண்வரிசைப் பதிகக் கோவை
இ. புல்வகை நூல்கள்
ஈ. செய்யுள் 11

## 3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.
ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 16 வரி.
உ. சிறிய கையெழுத்து.
ஊ. சுமாரான நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நல்லதிரு நாரையூர்க் கற்பகமே பேசும்
நம்பியாண்ட ராகந்த நம்பியுட னன்பின்
வல்லவாத மகிமையந்நாள் வளவனிகை யறிந்தே
வருமூவர் பாடலிருப் பிடமறிய வேண்டிச்
சொல்லநம்பி தனைப்பணியத் தும்பிமுக னருளாற்
சோதிதில்லை தனிலிருக்குஞ் சொல்முறைகா ணலுமே
வெல்லுதிரு முறைகண்ட சோழனுட னாளின்
விரிமுறையேழ் பதிகமெலாந் தெரியவிளங் கினதே. (1)

ஆ. முடிவு

மாதுவளர் மெய்யர்பணி வருமூவர் முறையேழும்
வாதவூ ராரி ரண்டும்
மருவுபல் லாண்டொன்று திருவிசைப்பா வொன்று
மானதிரு மூல ரொன்றும்
ஓதுவள ரம்மையந் தாதியு மிரட்டைமணி
மாலையுடன் மூத்த பதிகம்
ஒத்துவரு சேரமான் பொன்வண்ணத் தந்தாதி
உலாமும் மணிக்கோ வையும்

மீதுவள ரையடிக ளருள்செய்வெண் பாவொன்றும்
மெஞ்ஞான ருரைசெய் நூலின்
மேன்மையறி வார்சேவை காவலர் முறையொன்று
மெண்ணியிடி லிருபதாகும்
ஈதுவள மேபாவை பாக்கிரு வருள்சுரந்
திடுமுறைக ளேத்து வோர்கள்
ஈசரிரு பாதமல ரிணையடியி லின்பமுற
வெந்நாளும் வாழ்வார் தாமே. (11)

பண்வரிசைப் பதிகக் கோவை எழுதி நிறைந்தது.
முற்றும்,

## 1180, பெரியபுராண முறை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 896-6

ஆ. ற/56

### 2. உள்ளீடு: நூல்விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. பெரியபுராண முறைப் பதிகக்கோவை

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள் 40

### 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.

ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. சிறிய கையெழுத்து.

ஊ. சுமாரான நிலை,

ஏ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

எந்தையருண் மொழித்தேவர் சேக்கிழார் ஓதும்
எழிற்பெரிய புராணத்தாட் கொண்டபுரா ணத்தில்
சுந்தரர்தாம் வெண்ணெய்நல் லூர்க்குப்பித் தாபிறை
சூடியெனும் பதிகம்பண் ணிந்தளமே துறையூர்
பந்தமகற்றும் பதிகம்பண் ணிந்தளமே மலையார
தக்கராகம் பண்ணதிகை பண்கொல்லிக் கேவாணஞ்
சந்தவிசைப் பதிகந்தம் மானையறி யாத
தருமருந்தே கழுமலம்பண் டக்கேசி பதிகம், (1)

### ஆ. முடிவு

பதிதிருவா லங்காடு பண்நட்ட பாடை
பதிகங்கொங் கைதிரங்கி பண்ணிந்த ளம்மெட்டி
பதிமகிழந் தாதியினிற் பேற்றினும் பிறிதும்
பகரிரட்டை மாலையம்மை பாடினார் திருமூலர்
துதிசெய்யுந் திருமந்திர மொன்றவன்மன் றாரூர்
தூயகயி லாயமேற் தோத்திரஞ்செய் சேரா
கதியருள்பொன் வண்ணத்தந் தாதிதுய ருந்தொழுமழுங்
கருதுமும்ம ணிக்கோவை யுலாவெண் பாவே. (1)

ஆகச் செய்யுள் 40.

பெரியபுராணமுறைப் பதிகக்கோவை முற்றும்.

# 1181. தேவாரம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 897

ஆ. ண/34

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருஞானசம்பந்தர், அப்பர்

ஆ. தேவாரம்

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 228 ஏடு; 456 பக்கம்.

ஆ. நீளம் 24 செ.மீ.; அகலம் 6 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 20 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. சுமாரான நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தோடுடைய செவியன் விடையேறி யோர் தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசி எனதுள்ளங் கவர்கள்வன்
ஏடுடைய மலரான் முனநாட் பணிந்தேத்த வருள்செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மா னிவ னன்றே. (1)

ஆ. முடிவு

முலைமறைக்கப் பட்டுநீ ராடாப் பெண்கள்
முறைமுறை யானந்தெய்வ மென்று தீண்டித்
தலைபறிக்குந் தன்மையர்க ளாகி நின்று
தவமென்றவஞ் செழுத்தையது தக்கதோ ராமல்
மலைமறிக்கச் சென்றுறவி லங்கைக் கோனை
மதனழியச் செற்றசே வடியி னானை
இலைமறித்த கொன்றையந் தாரான் தன்னை
ஏழையே நான்பண் டிகந்த வாறே. (11)

5. பிற செய்திகள்

இறுதியிலுள்ள ஒரு ஏட்டில், 'திருவதிகை வீரட்டானம் ஏழைத் திருத்தாண்டகம்' நாலம் பாடல் தனியே எழுதப்பட்டுள்ளது. அதன் கீழே, ''நாலாம் பாட்டுப் போய் எழுதிச் சேர்த்தது'' என்ற குறிப்பும் எழுதப்பட்டுள்ளது.

## 1182. பஞ்சதசப் பிரகரணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 898

ஆ. டி/176

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. ..........

ஆ. பஞ்சதசப்பிரகரணம்

இ. தத்துவம்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 300 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 147 ஏடு; 294 பக்கம்.

ஆ. நீளம் 26 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி

உ. சற்றே கிறுக்கலான எழுத்து.

ஊ. பல ஏடுகள் சிதைந்துள்ளன

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வித்தியாரண்ணியசுவாமிகள் லோகானுக்கிரக நிமித்தியமாகச் சகலவேதாந்தத்தினுடையபொருள்களெல்லாம் மனதிலே சேகரித்துக் கொண்டு, சகல வேதாந்தமெல்லாம் அதிகரிக்க மாட்டாத பேருக்கும் சகல வேதாந்தமெல்லாம் படித்தாலும் அதினின்றுந் தெளிந்தறிய மாட்டாதப் பேருக்கும் எளிதாக வேதாந்தத்தினுடைய உண்மைப் பொருள்களைக் கண்டனுபவித்து மோட்சமடையத்தக்கதாக, சகல வேதாந்த சம்மதப் படிக்குத் தம்முடைய மனதிலேயிருக்கின்ற பிரமானுபவத்தைப் பஞ்சதசப் பிரகரணத்தினாலே வெளிபண்ண வேணுமென்று..

ஆ. முடிவு

....நித்திய நின்மல நிட்கள நிராமய நிறைவாய்ச் சுத்தா சுத்த மற்றவராய்த், தூரஞ் சமீபமு மற்றவராய்,வாக்கு மனோதீத கோசரராய், அகலராய், அசோதராய், அகேயராய், அப்பிரமேயராய்,அம்பாதிகம்பராய், அச்சுதானந்தானந்தராய், அகோசா அனாவிருத அனாமய அமூலராய், அகண்ட பரிபூரண சச்சிதானந்தராய்,வேதாந்தவேதியராய்,விபுவாய்,அற்புதராய், ஆனந்த பூர்த்தியராய், அத்துவிதராய், நிச்சயராய், சொரூப சாட்சாத்காரவனு பூதியராய், சாந்தாதீதராய், மனாதீதராய், பகவத்பத்தராய்,பிராமணராய், அறிவானந்தாதீத சுகசொரூப ராய் இருக்கப்பட்ட சற்குரு நாதன் துணை.

பஞ்சசதப் பிரகரணம் முற்றும்.

ஆகப் பிரகரணம் 15க்கு சங்கை 600.

## 1183. மகா வாக்கியம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 899—1

ஆ. ட/177

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .........

ஆ. மகா வாக்கியம்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 51

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.

ஆ. நீளம் 19 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. பல ஏடுகள் சிதைவு.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உலகமுதற் பொருளையும்பர்க் குணர்வரிதாம் பொருளை
ஓதியவே தாகமத்தி னுச்சியினுட் பொருளை
பல்கலையின் பொருள்முடிவின் முடிவான பொருளை
பற்றறப்பற் றியபெரியோர் பரவியவான் பொருளை
அலைதிவலை நுரைகடலி லுதித்தொடுங்குமா போல
அகிலாண்ட முதித்தொடுங்கு மதன்மூலப் பொருளை
இலகியசற் குருவாகி யானாகும் பொருளை
எங்குமாம் பரம்பொருளை யானும்வணங் குவனே. (1)

ஆ. முடிவு

அற்றைதோறும் ஆயிரமாயிரம் பிழைகள் செய்தாலு
மடியேன் றன்பார்
பெற்றதிரு வருள்கடலில் குளிப்பர...மலரும் பேராய் சூட்டி
சொற்ற தெல்லாந் தோத்திரமாய்ப் புனைந்தருளி
என்னை வளர்க்கும் தொட்டிலாகி
உற்றகுரு ஐயனெங்கள் விநாயக பாரதி தமியே
னுள்ளத்தானே. (51)

மகாவாக்கிய மதிகாரியக்கவி முற்றும்.

## 1184. தத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 899–2

ஆ. ட/177

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. தத்தாத்திரையர் 24 குருவை அடைந்த அத்தியாயம்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 48

3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு; 16 பக்கம்.

ஆ. நீளம் 19 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9,10 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. பல ஏடுகள் சிதைவு

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தீதிலன் மகிழுந் தத்தாத் திரையரென் றுலக மெல்லாம்
ஓதவ தூத வேடத் தொருவனை யேதுமுன் கண்டு
நீதிசெய் யறம்போ னகரம் நினைத்திலை சிறிதுமின்ப
ஏதினி லடைகின் றாய்நீ யெனமுனி யிசைக்க லுற்றான். (1)

ஆ. முடிவு

இத்திற மேது வென்பான் எழிற்குலத் திறைவன் கேட்ப
வத்திரி புதல்வ னென்ன வறைதருந் தவத்தின் மிக்கான்
சித்துரு வான தத்தாத் திரையன் செப்பினா னென்று
உத்தவர்க் காழி மாயன் உவந்துரை யாடி னானே. (48)

தத்தாத்திரையர் இருபது நாலு குருவைப் புத்தியினால்
அடைந்த வத்தியாயம் முற்றும்.

## 1185. வாசுதேவ மனனம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 900

ஆ. ட/178

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. வாசுதேவ மனனம்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்,
அச்சில் ஏறத்தாழ 500 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 262 ஏடு; 524 பக்கம்.

ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9,10,11 வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அத்தியாரோபம்ப வாதத்தினாலே பிரமத்தை அறிய வேணுமென்று சாஸ்திரங்களிலே சொல்லுகிறபடியினாலே அந்த அத்தியாரோபத்தை முன்னே சொல்லுகிறோம். அந்த அத்தியாரோப மாவ தேதென்றால், ஒரு வஸ்துவினிடத்திலே அந்நிய வஸ்துவாய்த் தோன்றுகிறது அத்தியாரோபம். அது எப்படி என்றால் திஷ்டாந்த பூருவகமாய்ச் சொல்லுகிறோம். கிளிஞ்சியினிடத்திலே வெள்ளியும், பழுதையினிடத்திலே பாம்பும், கட்டையினிடத்திலே கள்ளனும், கானலிலே தண்ணீரும், ஆகாசத்தினிடத்திலேகறுப்பும் எப்படியாரோபித்துதோ அப்படி

போல இந்த நிட்பிரபஞ்சஸ்த்த சொரூபராகிய ஆத்மாவிடத்திலே பிரபஞ்சாரோபமே அத்தியாரோபம்.

ஆ. முடிவு

வேதத்தையும் பிராமணரையும் பிரமதேவரையும் பிரமத்தையும் பிரமமென்று சொல்லு. இது காணப்பட்டதெல்லாம் அழிந்து போகையினாலே நிர்க்குண பிரமத்தை மாத்திரம் பிரமமென்று சொல்ல வேண்டிச்சுது. மகா வாக்கியப் பிரகரணம் சமர்ப்பிதம் நாற்பத்து மூன்றாஞ் சுலோகம் முற்றும்.

வாசுதேவ மனனம் முற்றும்.

## 1186. தேவாரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 901

ஆ. ண/35

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருஞான சம்பந்தர்

ஆ. தேவாரம்

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 121 ஏடு; 242 பக்கம்.

ஆ. நீளம் 34 செ. மீ.; அகலம் 6 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 21 வரி

உ. சிறிய அழகிய கையெழுத்து.

ஊ. நல்ல நிலை. சிதாள ஓலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 897 காண்க.

ஆ. முடிவு

நறும்பொழிற் காழியுண் ஞான சம்பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன ஒண்டமிழ் வல்லார்க்கு
அறும்பழி பாவம் அவல மிலரே. (11)

திருச்சிற்றம்பலம் (124)

திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த
மூன்றாந் திருமறை முற்றுப் பெற்றது.

இ. பிற்குறிப்பு

1063 ஆம் ஆண்டு, சர்வசித்து வருஷம் ஆவணி மாதம் 6ஆம் தேதி ஆதிவாரம் உதயம் சிம்ம லக்கினத்தில் எழுதி முற்றுப்பெற்றது. சுப்பராயன் கையெழுத்து.

5. பிற செய்திகள்

முதலிலுள்ள தனி ஏட்டில், 'வேயுறு தோளி பங்கன்' என்ற பாடல் தனியே எழுதப்பட்டுள்ளது.

## 1187. தேவாரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 902

ஆ. ண/36

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. சுந்தரர்

ஆ. தேவாரம்

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு; 86 பக்கம்

ஆ. நீளம் 34 செ.மீ.; அகலம் 6 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 21 வரி.

உ. சிறிய அழகிய கையெழுத்து.

ஊ. நல்ல நிலை, சீதாள ஓலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பித்தா பிறைசூடி பெருமானே யருளாளா
வெத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
நல்லூரருட் துறையுள்
அத்தாஉனக் காளா யினியல்லே னெனலாமே. (1)

ஆ. முடிவு

ஊழிதோ றூழிமுற்று முயர்பொன்னொடித் தான்மலையைச்
சூழிசையின் கரும்பின்சுவை நாவல்ஊ ரன்சொன்ன
வேழிசை யின்றமிழா லிசைந்தேத்திய பத்தினையும்
ஆழிகட லரையாவஞ் சையப்பர்க் கறிவிப்பதே. (10)

திருச்சிற்றம்பலம்.

ஆகப் பதிகம் 101.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருமுறை முற்றுப் பெற்றது

இ. பிற்குறிப்பு

கலியுகாதி வருஷம் 4989. கொல்லம் ஆண்டு 1063. சர்வதாரி வருஷம், வைகாசி மாதம் 19 ஆம் தேதி புதவாரம், பஞ்சமி நாள் 8-42, திருவோணம் நா. 41. 43. இந்தச் சுப தினத்தில் பகல் உதயாதி நாழிகை 6க்குள் சிதம்பரத்தில் கூத்தாடும் பிள்ளையார் சன்னதியில் ஸ்வகிரகத்திலிருந்து சபாபதி பிள்ளையவர்களினது குமாரன் சுப்பராயபிள்ளையால் இத்திருமுறைப் புத்தகம் எழுதி முற்றுப் பெற்றது.

## 1188, திருவிளையாடற் புராணம்

### 1, நூலகக் குறிப்புகள்

அ. 903

ஆ. ப/40

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பரஞ்சோதி முனிவர்

ஆ. திருவிளையாடற் புராணம்

இ. தலபுராணம்

ஈ, செய்யுள்

### 3, தோற்றக் கூறுகள்

அ. 195 ஏடு; 390 பக்கம்.

ஆ. நீளம் 30 செ.மீ.; அகலம் 4 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 15 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சுவடியின் முற்பாதியில் இடப்புறம் சிதிலம். சுமாரான நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

**காப்பு**

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொரு ணல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

**பாயிரம், வாழ்த்து**

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளெங்கும் பரவுக வரங்க ளின்பம்
நல்குக வுயிர்கட் கெல்லாம் நான்மறைச் சைவ மோங்கிப்
புல்குக வுலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க, (1)

### ஆ. முடிவு

ஏத்தியருச் சனைசெய்து நினைவி லரிதா யன்பிலெ ளியவட
மூர்த்தியையங் கயற்கண்ணி யன்பனை முப்போதும்
போய்முடி தாழ்ந்தின்பம்
மூத்தமனத் தினராகிக் கருவித்தேன் பொதிந்தசிறு
புட்போ லந்த
மாத்தலனில் வசிட்டாதி முனிவர்தபோ வனஞ்செய்து
வதிந்தார் மன்னோ. (53)

அருச்சனைப் படலம் முற்றுப் பெற்றது.

ஆகப் படலம் 74க்குத் திருவிருத்தம் 3363.

### இ. பிற்குறிப்பு

இந்தத் திருவிளையாடற் புராணம், சால்லிய வாகன சகாப்தமுக்குக் செல்லா நின்ற கொல்லம்....ஆண்டு தாருண வருஷம் மார்கழி மாதம் 8ஆம் தேதி புத வாரம் சுக்ல பட்சம் சதுர்த்தசி மிருகசீரிஷ நட்சத்திரம், உதித்து $2\frac{1}{4}$ நாழிக்குள் தனுசு லக்கினத்தில் சிதம்பரம் கூத்தாடும் பிள்ளையார் சன்னிதி வீதியிலிருந்துவரும் அம்பலவாண பிள்ளை குமாரர் சாவடி முத்தைய பிள்ளையவர் குமாரர், குழந்தை வேலாயுதம் பிள்ளை அவருடைய புத்திரசிரோமணியாகிய சபாபதி பிள்ளையவர்கள் குமாரன் சுப்பராய பிள்ளையினால் சிதம்பர சேத்திரத்தில் ஸ்வய கிரகத்திலிருந்தெழுதி நிறைவேற்றிற்று.

## 1189. திருவிளையாடற் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 904

ஆ. ப/41

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. பரஞ்சோதி முனிவர்

ஆ. திருவிளையாடற் புராணம்

இ. தலபுராணம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 85 ஏடு; 170 பக்கம்.

ஆ. நீளம் 28 செ.மீ.; அகலம் 4 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு 14 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. சுவடியின் வலப்புறம் சிதைந்துள்ளது

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண் : 903 காண்க.

ஆ. முடிவு

கண்ணிறைந்த வமளியிற் கழிந்துவாயில் பலகடந்து
உண்ணிறைந்த மதியமைச்ச ருடன்விரைந்து குறுகியே
மண்ணிறந்த தெனமுழங்கி வருதரங்க வாரிகண்டு
எண்ணிறந்த வதிசயத்த னாகிநிற்கு மெல்லைவாய். (12)

(இதற்கு மேல் ஏட்டில் இடமிருந்தும் எழுதப் பெறவில்லை)

## 1190. எண்ணாயிரத்தில் மூன்றாம் காண்டம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 905

ஆ. ல/235

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .

ஆ. எண்ணாயிரத்தில் மூன்றாம் காண்டம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 848

3. தோற்றக் கூறுகள்

அ. 224 ஏடு; 448 பக்கம்.

ஆ. நீளம் 27 செ.மீ.; அகலம் 3•5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. வெவ்வேறு கையெழுத்து.

ஊ. ஓரளவு பழுதுற்ற நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மதிபெருகுந் திருவளருங் கமல மாது
மனோன்மணியாள் தனக்கானந் தம்வாக்கு மூலம்
நிதிபெருகும் சிவக்கியானம் நிலமை தங்கும்
நிலைத்திடும்எண் ணாயிரத்தின் நேர்மை தன்னில்
கதிபெருகும் மூன்றான காண்டம் தன்னைக்
கருதுகிறேன் கணபதியுங் கந்தன் காப்புத்
துதிபெருகும் நிருவாணி பாதங் காப்புச்
சுருதியடி முடிவான சோதி காப்பே. (1)

ஆ. முடிவு

கேளப்பா வெண்ணாட்டந் தீரும் பாரு
　　கெடியான தேரையினால் பட்சி தோசம்
வாளப்பா தீருமது பச்சைப் பாம்பு
　　மைந்தனே பிரமியந்தான் வாங்கும் பாரு
சூளப்பா ஈசலது கிராணிப் புண்ணைச்
　　சுகமாகத் தீர்க்குமது சொன்னேன் பாரு
நாளப்பா வெகுகோடி சீவ செந்து
　　நவின்றதுதான் அறிந்தமட்டும் நன்றாய்ப் பாரே; (848)
　　　(இதற்குமேல் எழுதப் பெறவில்லை)

## 1191. நந்தீசர் நிகண்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 906
ஆ. ல/236

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. நந்தீசர்
ஆ. நந்தீசர் நிகண்டு 300
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 306

3. தோற்றக் கூறுகள்

அ. 70 ஏடு; 140 பக்கம்.
ஆ. நீளம் 23 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து
ஊ. பல ஏடுகள் சிதிலம்.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

மூலமென்ற கணபதியின் பாதம் போற்றி
முத்திபெற்றுச் சுழிமுனையின் முனைமேல் நின்று
கோலமென்ற குண்டலிக்குள் குகைதா னுண்டு
குகைதனிலே குருபரனும் சத்தி வாழ்ந்தாள்
சீலமென்ற தவமகிமை பெற்ற சித்தர்
தேடியதோர் வீடதனைத் தெளிந்து பார்த்து
ஞானமென்ற கொடிமரத்தின் கீழே நந்தி
நாடிநின்ற பீடமது ஆதி காப்பே. (1)

### ஆ. முடிவு

முத்திபெற்று ஞானறிவு தங்கி நின்று
மோட்சநிலை தானறிந்து சித்தும் பெற்று
பத்திநின்ற சுடரொளியைப் பதிவாய்க் கண்டு
பழக்கத்தால் வாசிநின்ற தலமுங் கண்டு
சித்திபெற்றுக் கருவினுட சூட்சம் கண்டு
தெளிந்தமதி மாய்கைவிட்டு சிவமே யென்று
சத்திநின்ற இடங்காணப் பேரும் பெற்று
சகலஉயிர் தானவனாய் முத்தி யாமே. (306)

### இ. பிற்குறிப்பு

விரோதிகிருது வருஷம் ஆடி மாதம் அமாவாசை திங்கள் வாரம் நந்தீசுவரர் நிகண்டு முந்நூறு பாவாடை செட்டி எழுதினது.

## 1192. ரோமரிஷி 500

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 907
ஆ. ல/237

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ரோமரிஷி

ஆ. ரோமரிஷி 500; 5ஆம் காண்டம்: 100

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 99

3. தோற்றக் கூறுகள்

அ. 32 ஏடு; 64 பக்கம்.

ஆ. நீளம் 23 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. சில ஏடுகள் சிதிலம்

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பராபரமா யம்பரமா யஞ்சாங் காண்டம்
 பாடுதற்குப் புசுண்டரெந்தன் குருதான் போற்றி
தராதரமா யெனையாண்ட சோதி பாதம்
 தற்பரமே அற்புதமே மனமே யாகி
இராதரமாய்ப் பூரணமா யேக மாகி
 ஏகாந்தச் சொரூப வொளிவெளியு மாகி
மராமரமாய் மண்ணுவிண்ணு மொன்றாய் நின்ற
 மவுனமென்ற ஐங்கரனுங் காப்புத் தானே (1)

ஆ. முடிவு

சித்தியாய்ச் செய்வதா ரஞ்சு காண்டம்
 செயலுடனே பார்த்தவர்க்கு எய்தும் எய்தும்
பத்தியாய்ச் செய்வதார் ஆதி யந்தம்
 பார்த்தோர்க்கு எய்துமல்லால் மற்றோர்க் கெய்யா

முத்தியாய்ச் செய்வதார் உறுதி காண்டம்
.. .. .. ..
.. .. .. ..
மக்களே பார்த்தவர்க்கு பத்தி முற்றே. (99)

இ. முற்குறிப்பு

ரோமரிஷி அய்யர் செல்லிய ஐநூற்றில் இது ஐந்தாவது காண்டம் நூறு. இது அறியவும்.

பிற்குறிப்பு

ரோமர் ஐந்து காண்டத்தில் கடைசி ஐந்தாங் காண்டம் முற்றும்.

கூடலூர் பாவாடை செட்டி எழுதினது.

## 1193. அகத்தியர் கருக்கிடை

1. நூலகக் குறிப்புகள்

அ. 908—1
ஆ. ல/238

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் கருக்கிடை 12
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 12

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.
ஆ. நீளம் 23 செ.மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவான கையெழுத்து.

ஊ. இரண்டு ஏடுகள் முறிவு. சுமாரான நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பெருகும் வேதாந்தத் துள்மூ லத்தின்
செயலறிந்து மனமடங்குந் துரிய வீட்டின்
நீர்பெருகு மகாரமறிந் துண்டு வாசி
நேரறிந்து நிலைசெலுத்தி முனையி லேறிப்
பேர்பெருகுங் கேசரியைக் கண்டு போற்றிப்
பேசாம லொடுங்கிநின்ற பெரியோர் பாதம்
நேர்பெறவே நெஞ்சில்வைத்துத் தொழுது நித்தம்
நிச்சயமாய்ச் சொல்லுகிறோ முப்பை தானே. (1)

ஆ. முடிவு

(இறுதி இரண்டு ஏடுகள் பாதி முறிந்துள்ளதால் ஈற்றுப் பாடலடிகளைத் தெளிவாக எழுத இயலவில்லை.)

இ. பிற்குறிப்பு

..சூத்திரம் பன்னிரெண்டு எழுதி நிறைவேறினது...

## 1194. அகத்தியர் வகார சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 908–2

ஆ. ல/238

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் வகார சூத்திரம் 30

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 30

3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு; 24 பக்கம்.

ஆ. நீளம் 23 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. சில ஏடுகள் முறிவு. சுமாரான நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதிபரா பரத்தினுட கிருபை கூர்ந்து
அடிமுடி .. .. .. காப்பு
நீதியாம் வாரணத்தின் முருகன் காப்பு
.. ..த்தின் வடிவேல் காப்பு
பாதிமதி சடை .. .. காப்பு
பத்திமுத்தி சத்திவயி ரவனே காப்பு
.. வாணியுட பாதங் காப்பு
.. .. காப்பாமே. (1)

ஆ. முடிவு

ஆமப்பா இந்நீற்றால் துருசு வெள்ளை
அவ்வெள்ளைச் சுண்ணத்தால் ரசத்தை நீற்றி
ஓமப்பா பரித்தகட்டிற் பூசிப் பாரு
உத்தமனே சொர்ணமது சுண்ணாம் பாச்சு
நாமப்பா சொல்லுகிறேன் தாம்பிரத்திற் கொடுக்க
நாட்டோர்கள் பிழைப்பதற்கு வழியு முண்டாம்
காமப்பா வதையெடுத்து வியக்க நன்றாய்க்
கனகமாங் கருமூன்று முப்பதுவும் முற்றே. (30)

## 1195. நந்தீசர் அதீத சூத்திரம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 909
ஆ. ல/239

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நந்தீசர்
ஆ. நந்தீசர் அதீத சூத்திரம் 100
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 39

### 3. தோற்றக் கூறுகள்

அ. 14 ஏடு; 28 பக்கம்.
ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி
உ. தெளிவான கையெழுத்து
ஊ. சிதைவுற்ற நிலை
எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பாரப்பா கணபதியின் கந்தன் பாதம்
பதிவாக எந்நாளுந் தலைமேல் வைத்து
ஆரப்பா சூத்திரமுஞ் சாத்திரமுஞ் சொன்னேன்
அனுத்தொடுத்து மேருவரை யறையி றேன்கேள்
நேரப்பா எந்நூலைச் சொல்ல வேணும்
நிகழ்த்தினேன் இந்தநூல் கண்ணில் காட்டார்
ஆரப்பா அவனியிலே யார்கொடுக்கப் போரார்
ஆச்சரிய மிந்நூல் தெளிந்து பாரே. (1)

ஆ. முடிவு

ஆச்சப்பா ஆணியொன்று சொல்லக் கேளு
அரகரா கவுதும்பை யகப்பட் டாக்கால்
பேச்சப்பா பேசாதே பிடுங்கி வந்து
பிசகாமல் அரைத்துருட்டிக் குகைபி டித்து
நீச்சப்பா தங்கமது தகடு தட்டி..
... .. .. ..

(இதற்குமேல் ஏடுகள் இல்லை).

## 1196. கைவல்ய நவநீதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 910
ஆ. ட/179

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தாண்டவராய சுவாமி
ஆ. கைவல்ய நவநீதம்: பூர்வ பாகம்: மூலமும் உரையும்
இ. தத்துவம்
ஈ. செய்யுளும் உரைநடையும்,
அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 119 ஏடு; 238 பக்கம்.
ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. பொதுவாக நல்ல நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 872 காண்க.

ஆ. முடிவு

இந்நிலந்தனிற் கைவல்லிய நவநீத மெனப் பேரிட்டு
நன்னில மருவு நாராயணன் சொன்ன ஞானநூலிற்
புண்ணிய ராய்ந்து பார்ப்போர் பரமார்த்த சொரூப மாகி
அன்னிய வனரத்த மண்டா லுலகினிற் தீர்த்த

(இதற்குமேல் ஏடுகள் இல்லை).

## 1197. ஞான வெண்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 911

ஆ. ட/180

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்

ஆ. ஞான வெண்பா 120

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 90

3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு; 32 பக்கம்.

ஆ. நீளம் 25 செ. மீ.; அகலம் 2·5 செ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சில ஏடுகள் சிதைவு

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காயுங் கிழங்குங் கனியும் பலமென்று
மாயுநீர் தின்று மயங்குநீர் — காயத்துள்
கங்குல் பகலற்றவிடங் காணாத மூடர்களே
எந்தவகை ஈடேறு வீர். (29)

ஆ. முடிவு

அண்டங் களுக்கும் அணுவாகி நின்றபிரான்
தொண்ட ரெவர்க்குஞ் சுகமாகிக் — கண்டுதொழ
அந்தக் கரண மடக்கி யதில்மூழ்கி
பந்தம் பிரிந்திருப்பான் பார். (120)

மாணிக்க வாசக மூர்த்திகளருளிய ஞான வெண்பா
120 முற்றும்.

இ. பிற்குறிப்பு

''முதலில் 28 வெண்பாவும்,30,31 ஆவது வெண்பாவும் கிடைக்காததால் விடப்பட்டது''

## 1198. விநாயகர் அலங்காரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 912

ஆ. த/26

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பொன்னைய முதலியார் — புதுவை

ஆ. விநாயகர் அலங்காரம்

இ. பிறதோத்திரங்கள்

ஈ. செய்யுள் 101

## 3. தோற்றக் கூறுகள்

அ. 32 ஏடு; 64 பக்கம்.

ஆ. நீளம் 24 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. சுவடியின் வலப்புறம் சிதிலம்

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

**காப்பு**

உலகம் பலவண்ட கோடி உயிர்கட் கொருமுதலாய்
இலகம் பரமெய்ப் பொருளாம் பிரணவ மேவடிவாம்
திலகஞ் சிறந்த விநாயகர் சீரலங்கா ரஞ்செப்ப
நலதந் தருகந்த வேடுணையார ருந்துணையே.

திருவளர் மார்பனுஞ் செந்தாமரைச் செல்வனுங்கா
மருவளர் நிழலுறை வானரசும் வழுத்தரிய
ஒருபெரு மானருளேரம்பன் முகாம்புயனோன் புகழை
வருபெரு மாதவம் யாதோ வழுத்த வழங்கியதே. (1)

ஆ. முடிவு

நிலங்கா லனல்புன லாகாய மாகி நிறைந்தெங்குமாய்
இலங்கா வுயிர்க்குயி ராயெம் மதத்தரு மேத்துஞ் சித்தாய்
விலங்கா தருள்சர்வ காரண ராகும் விநாயகர்சீர்
அலங்கார மெத்தனை சொன்னாலு மொக்கு மவரருட்கே.
(101)

## 5. பிற செய்திகள்

முதல் மூன்று ஏடுகளில், 'தருமபுரவாதீனம் சோம சுந்திர கவிராயர்', 'சொக்கபுரம் இராமலிங்க தம்பிரான்',

'முத்துவினை தீர்த்த முதலியார்', 'கா.க. சபாபதி முதலியார்' போன்றவர்களின் சிறப்புப் பாயிரமும், அரங்கேற்றிய காலமும் இடமும் எழுதப்பட்டுள்ளன.

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1199. உபநிடதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 913

ஆ. டீ/181

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ...........

ஆ. உபநிடதம்: மூலமும் உரையும்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 21 ஏடு; 42 பக்கம்.

ஆ. நீளம் 26 செ.மீ; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

மெய்யுடைய தேச முதல் பிரகிருதி பரியந்தமுள்ள சகத்தனைத்தும் மெய்யாகிய பிரமத்தைத் தவிரவில்லாதபடியி னாலும் அந்த மெய்யாகிய பிரமமே தானாக விளங்குகிறபடியி னாலும் சத்தியத்தை யுடைய இன்னமொரு வர்த்தம் பொய் யில்லாத படியினால் சத்தியத்தையுடைய, அடியார் மேல், மனதில் பிரமசிந்தனையும் வாக்கு பிரமவசனமும் காயம் சமாதி முதலான விடங்களில் நிறுத்தலுமாகிய மன வாக்கு காயம் ஒத்த அடியுார்களிடத்தில் விருப்புடையான்;

### ஆ. முடிவு

. . எங்கள் சுவாமியாகிய வியாச மகா முனி திருவாய் மலர்ந்தருளிய, மனதினிடத்தில், சௌபாக்கிய குருவென்னும் ஆசாரியர் சொன்ன அர்த்தத்துடன், மருளகற்றும்படி அடியே னுக்கு மயக்கமாகிய அக ஞானம் நீங்கும்படி, அழுத்தி; அவ வர்த்தங்களை அமைத்து, தமிழ்ப் பாடலைப் போலும், அவ் வர்த்தத்தை, ஒரு மார்க்கமாய் முப்பத்திரண்டு கவியாகவும், அருள், சபாத்தியர் கிருபையானது உள்ளத்திலிருந்து உரைத்துச் சொல்வித்து அதிசயமே அதிசயமல்லாமல் வேறோர் அதிசயங் காணேன்.

ஆகக் கவி 33, உபநிடதம் முற்றிற்று.

# 1200. நாநாசீவ வாதக் கட்டளை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 914

ஆ. ட/182

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. சேஷாத்திரி சிவனார்

ஆ. நாநாசீவ வாதக் கட்டளை: மூலமும் உரையும்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 400 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 192 ஏடு; 384 பக்கம்.

ஆ. நீளம் 22 செ. மீ.; அகலம் 4 செ. மீ

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. சுமாரான நிலை. ஆங்காங்கு சிதிலம்.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சுத்தம்; குணங்குறி இறந்த பிரம்மத்திற்குச் சுத்தமென்று நாமம் வருவானேனெனில், நீலோற்பல புஷ்பத்திற்கு நீலநிறமே குணம். நீல நிறத்தையுடைய புஷ்பமே குணி. குணத்தைத் தெரியாமல் குணியைத் தெரியாததுபோல், சச்சிதானந்த லட்சணமே குணம். சச்சிதானந்த லட்சணத்தையுடைய பிரமமே குணி. இந்தக் குணங்குறியின்றி இருத்தலே நிர்க்குணம்.

ஆ. முடிவு

சகலரும் பக்குவமுள்ளவர்கள் யாவரும் இந்தத் தத்துவங்களை விசாரணை செய்து, இந்த முப்பத்தைந்து தத்துவங்களையும் அவற்றின் குணம் குறிகளுடனே விசாரித்து முப்பத்தைந்து தத்துவங்களும் தானன்றென்று தள்ளி முப்பத்தாறாந் தத்துவமாகிய பிரமமே தானென்றறிந்து மோக்ஷமடையக் கடவார்கள். மோக்ஷமடைவார்கள்.

இ. பிற்குறிப்பு

சேஷாத்திரி சிவனார் அருளிச்செய்த நாநாசீவ வாதக் கட்டளை மூலமும் உரையும் சம்பூரணம்.

# 1201, திருக்குறள்

## 1, நூலகக் குறிப்புகள்

அ, 915
ஆ, ந/14

## 2, உள்ளீடு: நூல் விவரம்

அ, திருவள்ளுவர்
ஆ, திருக்குறள்
இ, பதினெண்கீழ்க்கணக்கு
ஈ, செய்யுள் 1333

## 3, தோற்றக் கூறுகள்

அ. 67 ஏடு; 134 பக்கம்.
ஆ. நீளம் 24 செ. மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. மிகச் சிதைந்த நிலை.
முதல் 10 ஏடுகளின் இடது புறம் பூச்சி அரித்துள்ளது.
எ. முழுமை

## 4, சிறப்புச்செய்திகள்

அ, தொடக்கம்

(முதல் 3 குறட் பாக்கள் சிதைந்துள்ளன)

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில. (4)

இருள்சேர் இருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு, (5)

ஆ. முடிவு

ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா. (1332)

ஊடுதல் காமத்துக் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின். (1333)

## 1202. அகத்தியர் தேவாரத் திரட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 916

ஆ. ண/37

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருஞானசம்பந்தர் முதலியோர்

ஆ. அகத்தியர் தேவாரத் திரட்டு

இ. சைவத் திருமுறை

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 20 ஏடு; 40 பக்கம்.

ஆ. நீளம் 33 செ.மீ.; அகலம் 5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 14 வரி.

உ. தெளிவான அழகிய கையெழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

நேரிசை வெண்பா

குருவருளும் வெண்ணீ றெழுத்தைந்துங் கோயில்
அரனுருவு மென்றலைமே லாக்குந் — திருவடியுஞ்
சிட்டான வர்ச்சனையுந் தொண்டுஞ் சிவாலயர்க் கென்று
இட்டார் அகத்தியனா ரெட்டு.

பதிகக் கருத்துரை; தோடுடை, கூற்றா, பித்தா மூன்றும் பீடுடைத் தேசிகன் பேரருளாகும்.

நிலை மண்டில ஆசிரியப்பா

நீற்றுப் பதிகம் நிகழ்த்துங் காலை
மாற்றுப் பரையின் வரலா றாகும்
துஞ்சல் காதல் சொற்றுணை மற்றிவை
அஞ்செழுத் துண்மை யருளிய தாகும்.

### ஆ. முடிவு

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூரன் அடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே. (11)

### இ. பிற்குறிப்பு

அகத்தியர் திரட்டென்று பெயர் விளங்கிய தேவாரத் திரட்டு முற்றிற்று.

இந்த அகத்திய திரட்டு மாத்திரம் சுந்தரேசுவரன் கையெழுத்து.

## 1203. திருவாசகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 917
ஆ. ண/38

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்
ஆ. திருவாசகம்
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 29 ஏடு; 58 பக்கம்.
ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 17 வரி.
உ. சிறிய அழகிய கையெழுத்து
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காப்பு

தொல்லை யிரும்பிறவி சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே — எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவாச மென்னுந் தேன்.

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
வாகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க

ஆ. முடிவு

செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமல மறுவித்து முதலாய முதல்வன்தான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே. (9)

திருவாசகம் முற்றுப்பெற்றது.

ஆகப் பதிகம் 47க்குத் திருவிருத்தம் 654

## 1204. திருவிசைப்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 918—1

ஆ. ண/39

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. சேந்தனார்

ஆ. திருவிசைப்பா

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு; 24 பக்கம்.

ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 17 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
உணர்வுசூழ் கடந்ததொ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் திறண்மணிக் குன்றே
சித்தத்துட் தித்திக்குந் தேனே
அளிவள ருள்ளத் தானந்தக் கனியே
அம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே. (1)

ஆ. முடிவு

ஏயுமா றெழிற்சே தியர்கோன் தில்லை
நாய னாரை நயந்துரை செய்தன
தூய வாறுரைப் பார்துறக் கத்திடை
யாய வின்பம் எய்தியிருப் பார்களே. (10)

திருவிசைப்பா முற்றிற்று.

## 1205. திருப்பல்லாண்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 918—2

ஆ. ண/39

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருமாளிகைத் தேவர் முதலியோர்

ஆ. திருப்பல்லாண்டு

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள் 13

3. தோற்றக் கூறுகள்

அ. 1 ஏடு; 2 பக்கம்.

ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 17 வரி.

எ. சுமாரன எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மன்னுலக தில்லை வளர்கநம் பத்தர்கள் வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து புவனியெல்லாம்
விளங்க
அன்னநடை மடவாளு மைகோ னடியோமுக் கருள்பு ரிந்து
பின்னைப் பிணியறுக்க நெறிதந்த பித்தர்க்குப் பல்லாண்டு
கூறுதுமே. (1)

ஆ. முடிவு

எந்தையெந் தாய்சுற்ற மற்றுமெல்லாம்
எனக்கமு தாமெம் பிராமெனன்று
சிந்தை செய்யுஞ் சிவன்சீ
ரடியாரடி நாயச் செம்புரை
அந்தமில் ஆனந்தச் செந்தேனைப்புகுந்
தாண்டு கொண்டாருயிர்மேற்
பந்தம் பிரியப் பிரிந்தவனே
யென்றுபல் லாயிரங் கூறுதுமே. (13)

பல்லாண்டு முற்றும்.

ஆகத் திருவிசைப்பாப் பல்லாண்டு. பதிகம் ·29க்குச்
திருச்செய்யுள் 311.

## 1206. பெரியபுராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 919

ஆ. ண/40

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. சேக்கிழார்
ஆ. பெரியபுராணம்.
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள் 4284

3. தோற்றக் கூறுகள்

அ. 166 ஏடு; 332 பக்கம்.
ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 4·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 17 வரி.
உ. அழகிய தெளிவான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம். (1)

ஆ. முடிவு

என்று மின்பம் பெருகு மியல்பினால்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம். (53)

திருவெள்ளானைச் சருக்கம் முற்றும்.
ஆகத்திரு விருத்தம் 4284.
திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணம் முற்றுப் பெற்றது.

## 1207. கந்தபுராணம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 920

ஆ. ந/90

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. கச்சியப்ப சிவாச்சாரியர்

ஆ. கந்தபுராணம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 10, 345

### 3. தோற்றக் கூறுகள்

அ. 364 ஏடு; 728 பக்கம்.

ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 19 வரி.

உ. சிறிய, அழகிய, தெளிவான கையெழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கடவுள் வாழ்த்து

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்,

உச்சியின் மகுட மின்ன ஒளிதரு நுதலினோடை
வச்சிர மருப்பி னொற்றை மணிகொள் கிம்புரி வயங்க
மெய்ச்செவி கவரிதூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியுள் விகட சக்கரக் கணபதிக் கன்பு செய்வாம். (1)

ஆ. முடிவு

பாராகி யேனைப் பொருளா யுயிர்ப்பன்மை யாகிப்
பேரா வுயிர்கட் குயிராய்ப் பிறவற்று மாகி
நேராகித் தோன்ற லிலதாகி நின்றான் கழற்கே
யாராத காதலோடு போற்றி யடைது மன்றே. (267)

வள்ளியம்மை திருமணப் படலம் முற்றிற்று.
ஆகத் திருவருத்தம் 2617. தக்ஷ காண்டம் முற்றிற்று.
ஆகக்காண்டம் 6க்குத் திருவிருத்தம் 10, 345
கந்தபுராணம் முற்றுப் பெற்றது.

இ. பிற்குறிப்பு

கலி 4986 க்குக் கொல்லம் 1060 ஆம் ஆண்டு தாரண வருஷம் மாசி மாதம், 16ஆம் தேதி, புதவாரம், சுக்ல ஏகாதசி, புனர்வசு நட்சத்திரம் கூடிய சுபதினத்தில், பகல் 20 நாழிகைக்கு மிதுன லக்னத்தில் சிதம்பரம் கூத்தாடும் பிள்ளையார் கோவில் சன்னதி வீதியில் சாவடி முத்தைய பிள்ளையவர்கள் கிரகத்திலிருந்து அந்தப் பிள்ளையவர்களுடைய புத்திரரான குழந்தை வேலாயுதம் பிள்ளையின் புண்ணிய குமாரராகிய சபாபதிப் பிள்ளையவர்களின் தனையனான ஊழியன் சுப்பராய பிள்ளையினால் எழுதி சம்பூரணஞ் செய்யலாயிற்று.

## 5. பிற செய்திகள்

முதல் 3 ஏடுகளில் 'கந்தபுராண வரலாறு' உரை நடையில் எழுதப்பட்டுள்ளது.

## 6. ........................

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1208. உபதேச காண்டம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 921
ஆ. ந/91

2. உள்ளீடு: நூல் விபரம்

அ. கோனேரியப்ப நாவலர்
ஆ. உபதேச காண்டம் (மாயை வரலாறு முடிய)
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 231

3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு; 20 பக்கம்.
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 16 வரி.
உ. சிறிய, அழகியகையெழுத்து.
ஊ. நல்ல நிலை
எ. குறை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உள்ளமோ ரந்தணர் கேட்டுழியேம்
உழையொருங் குணர்ந்தொருங் காகப்
பள்ள வார்மடைப் புள்ளெனத்
தொகுத்தனை யாமதன் பயன்துய்த்தேம்
வெள்ளெ யிற்றுவெஞ் சூரனை
முதலியோர் விளித்தபின் னவராவி
கொள்ளை வேற்படை யொடுக்கிய
தன்மையைக் கூறுதியெ மக்கென்றார். (1)

ஆ. முடிவு

எனவிவ ணிகழ்ந்த காதைப் பரிசெலா மெடுத்துக் காட்டி
நனைமலர்ப் படப்பை சூழ்ந்த நைமிசா ரணியத் தோங்கும்
புனைசடை மவுலி யோர்க்குப் புகன்றனன் சூதன் கேளா
வனையவர் மகிழ்ச்சி கூர வணிமுடி துளக்கி னாரால். (12)

மாயை வரலாறு முற்றிற்று.

ஆக உபதேச காண்டத் திருவிருத்தம் 231.

## 1209. தேவாரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 922

ஆ. ண/41

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருநாவுக்கரசர்

ஆ. தேவாரம்

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 107 ஏடு; 214 பக்கம்.

ஆ. நீளம் 34 செ. மீ.; அகலம் 5·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்துக்கு 21 வரி

உ. சிறிய, அழகிய கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கூற்றா யினவாறு விலக்ககிலீர்
    கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்றா யடிக்கே யிரவும் பகலும்
    பிரியாது வணங்குவ னெப்பொழுதுந்
தோற்றாதென் வயிற்றினகம் படியே
    குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில
    வீரட் டானத்துறையம் மானே.

ஆ. முடிவு

ஒருவனையும் அல்லாதுணரா துள்ளம்
    உணர்ச்சித் தடுமாற்றத் துள்ளே நின்ற
இருவரையும் மூவரையும் என்மேல் ஏவி
    இல்லாத தரவறுத் தாய்க் கில்லேன் ஏலக்
கருவரை சூழ்கானல் இலங்கை வேந்தன்
    கடுந்தேர்மீ தோடாமைக் காலாற் செற்ற
பொருவரையாய் உன்னடிக்கே போது கின்றேன்
    பூம்புக லூர்மே வியபுண் ணியனே. (10)

பதிகம் 99.

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த மூன்றாந் திருமுறை முற்றுப் பெற்றது.

## 1210. மெய்ஞ்ஞான சாரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 923

ஆ. ட/183

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஞானசம்பந்தர்

ஆ. மெய்ஞ்ஞான சாரம்: மூலமும் உரையும்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 86 ஏடு; 172 பக்கம்.

ஆ. நீளம் 21 செ மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காப்பு

பூமலிந்த சிற்றம்பலப் பொருளென் நின்ற
ஓமெனும் பதச்சச்சி தானந்தனை யுன்னி
வாமதே சிகக்கருணை யானந்தனை வணங்கித்
தோமறச் சொலப்படுந்தொன் மெய்ஞ்ஞான சாரமதே.

ஆ. முடிவு

ஞான சம்பந்த னெனுங் குகன்தானே சீகாழியென்னுந் திருப்பதியில் திருவவதாரம் பண்ணிய திருஞான சம்பந்தப் பிள்ளையாரென்னும் முருகக் கடவுளே நற்கருணானந்த நாம ஞான சம்பந்த தேசிகனென்ன நாணிலத்துருக்கொடு போந்து, நன்மை யமைந்த கருணையானந்த னென்னுந் திருப்பெயரை உடைய மெய்ஞ்ஞான சம்பந்தப்பட்ட வாசாரியனென்று சொல்லும்படிஇவ்வுலகத்தின்கண் திருவுருக்கொண்டெழுந்தருளி திருஞான சம்பந்த னென்னும் பெயரெனக்கு நல்கி, தகுதி யில்லாத வெனக்குந் தந்தருளி என்நா விருந்திந்நூன் ஞான சம்பந்த முறப் புனைவித்தோன்எனது நாவின் கண்ணெழுந்தருளி

பிருந்திந்த நூலை மெய்ஞ்ஞான சம்பந்தப்படும்படி அலங்கரித் தருளிச் செய்த ஞானாசாரியரது, நல்லருள் வாழி நீடூழி.மங்கல மாகிய திருவருள் நீடூழி காலம் வாழக் கடவ தென்றவாறு. இதனுனென்நாவிருந்து இந்நூன் ஞானசம்பந்த முறப் புனை வித்தோ னென வேதாச் செயலன்றிக் கூறிய தென்பதாம். இச் செய்யுளாலிட்ட தெய்வமே குருவாய் வந்து நூல் செய்யும்படி அருளிய தென வவ்வருளை வாழ்த்திய வாறுணர்க. (33)

மெய்ஞ்ஞான சாரம் முற்றுப் பெற்றது.

## 1211. பிரம கீதை

1. நூலகக் குறிப்புகள்

அ. 924
ஆ. ட/184

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தத்துவராயர்
ஆ. பிரமகீதை
இ. தத்துவம்
ஈ. செய்யுள் 547

3. தோற்றக் கூறுகள்

அ. 89 ஏடு; 178 பக்கம்.
ஆ. நீளம் 26 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பாயிரம்

அத்தி முகவனை மத்தன் மதலையை
நித்தம் நினைபவர் முத்தி பெறுவரே. (1)

ஆனை முகவனை மேனை வினைகெடத்
தானை நினைபவ ரூனை யொழிவரே. (2)

ஆறு முகவனை நாறு மலர்கொடு
கூறு மடியவர் பேறு பெறுவரே (3)

ஆ. முடிவு

இனியனா யெல்லாந் தன்பால் இறைவனின் னருளாற் பெற்ற
முனிவனை முனிவ ரெல்லாம் முடியுற வணங்கி யேத்தி
நனிமிக நானென் கின்ற பதப்பொரு ளாடி வேறார்
அனியமில் பிரம மாக அறிந்ததி சயித்தி ருந்தார். (37)

பனிரெண்டாவது முன்சொல்லிய உபநிடதங்களின் அர்த்தத்தைத் தொகுத்துரைக்கும் அத்தியாயம் முற்றும். ஆக அத்தியாயம் பனிரெண்டுக்குத் திருவிருத்தம் 547.

பிரம கீதை முற்றும்.

## 1212. ஞானானந்த தீபம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 925

ஆ. ட/185

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அருணாசல சுவாமி

ஆ. ஞானானந்த தீபம்

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 36

3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு; 30 பக்கம்

ஆ. நீளம் 30 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி

உ. தெளிவான கையெழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவுறுங் கனக மன்றிற் திருநட மிடுந்தே வீன்ற
கருநிற முகிறோய் மேலைக் கனசிக ரிக்கண் வாழும்
அருளுறு கற்பகத்தின் அடியினை யகத்துள் வைப்பாம்
மருளுறுஞ் சன்ன நோயாய் மருவிய பகைமாய் தற்கே. (1)

ஆ. முடிவு

அருள்வெள்ளந் ததும்பியுமை யொடுநடஞ்செய் யரசே
அருணகிரி யெனுநாடிந் தெழுமென் குரவன்
சுருதிகளின் சித்தாந்த மாமேது சொரூபஞ்
சூழ்காரிய மதவதி பலமிவையை யெடுத்துப்
பரிவினொடு பனுவலாய்ச் செய்ததுவு மன்றிப்
பாவாகவென் னுளிருந்த ருளுமதிச யத்தை
உரைசெய்வோர் விதத்தினு மொவ்வாத வன்தாளினைப்
போதோய் வரவேநீ டூழிவாழி சகம் வாழி. (31)

ஞானானந்த தீபம் முற்றிற்று.

பாயிரம் உட்பட ஆகத் திருவிருத்தம் 36.

## 1213. சவரியார் குழம்பு

1. நூலகக் குறிப்புகள்

அ 926

ஆ. ல/240

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .........

ஆ. சவரியார் குழம்பு

இ. மருத்துவம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 11 ஏடு; 22 பக்கம்.

ஆ. நீளம் 24 செ.மீ.; அகலம் 2 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சரவே சுரனார்ச் சகலமும் படைத்தோன்
அருமறைப் பொருளால் யாவரும் பிழைக்க
குறுமுனி சீஷன் குழம்புகூ ரணத்தைத்
திருவரு ளென்று செய்திடும் போர்க்கு
இருவினை நானூற் றெண்பது தீர
சிறுவர்க் குதவிய செய்தன ரன்றே.

சு. வி. 19

கற்பித்த கடுக்காய் கடுகுயிந் துப்பு
நற்பெருங் காயம் நல்லம னோசிலை
மெய்ப்புள்ள சூதம் மேவியவெங் காரம்
திப்பிலி சீரகம் சிறந்தரி தாரமும்,

ஆ. முடிவு

செய்யான் கடியும் சிறுபாம்பு தினவும்
அய்யா காடியில் கழஞ்சரை யிடலாம்
அட்டைக் கடிக்கும் அரணைக் கடிக்கும்
கட்டிய சுண்டான பாலினி லிடலாம்
நரிநாய் பேநாய் நல்லபூ னைக்கும்
பரியானை குதிரை பாம்பு விஷக்கடித்ததில்
கரியான் கருப்புக் கட்டியில் கழஞ்சரை
முறியாத விஷக்கடி முந்நூற் றெண்பதும்
அரியதே கத்தில் ஐயாயிரம் போகும்.
சரியான சவரியார் குழம்புகூ ரணமே.
பிரகாசந் திருவடி நினைக்க திவ்விய
பிரகாசந் தானே வருமே,

## 1214. அகத்தியர் இந்திர சாலம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 927

ஆ லை/241

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் இந்திர சாலம்; 2ஆம் காண்டம்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 200

3. தோற்றக் கூறுகள்

அ. 20 ஏடு; 40 பக்கம்.

ஆ நீளம் 40 செ. மீ.; அகலம் 6 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 15 வரி

உ. தெளிவான கையெழுத்து,

ஊ, சுமாரான நிலை,

எ, முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சித்திக்குந் தேவ ரமுதுண்ட வாரிசக வசிய
முத்திக்கு மூல பதம்போற்றி முன்னுரை..வளி
சத்திக்குச் சால மிருநூறு பாடலுந்தானு ரைக்க
அத்திக் கரியுரி தொண்டோன் அரன்பதம் ஆதிவ லைத்தே, (1)

ஆ. முடிவு

பாராதே சிவகோடி மைசெய்தி டாதே
பரமவிதி சிவகாமி பாதத் தாணை
கூறாதே யாவருக்கும் பாத கத்தைக்
கொல்லாதே சீவசெந்து நீயென் றெண்ணு
சேராதே யூன்கொழுப்புயீடு வாடை
செய்யாதே செத்தபின் கருவை நாளும்
மோராதே ரண்டாங் காண்டத்தை விட்டு
எறியாதே இருநூறு மிந்தா முற்றே.
அய்யாசாமி நாராயணசாமி எழுதிமுகிந்தது. முற்றும்.

## 1215. சூரிய பூசாவிதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 928

ஆ. ற/57

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . .

ஆ. சூரிய பூசாவிதி

இ. பல்வகை நூல்கள்

ஈ. உரைநடை,
அச்சில் ஏறத்தாழ 10 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.

ஆ. நீளம் 24 செ. மீ.; அகலம் 2 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. கிறுக்கலான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சகளீகரணம். ஓம் அரக்காஸ்தராய் படு என்று இடக் கையினால் வலக்கையினுள் காட்டவும். பூரத்தையும் வலக்கையினால் இடக்கரத்தினுள் காட்டவும். பூரத்தையும் துடைத்து ஓம் சிவ சூரிய வெளிச்சிகு என்று கைகளைக் கூட்டிக் குவித்து, தன்னைச் சிவ சூரியனாகப் பாவித்துக் கொள்க.

ஆ. முடிவு

இடக்கையினாலே ஒரு பாத்திரத்தில் புட்பம் எடுத்து வைத்துக் கொண்டு, ஓம் சிவ சூரியாய நம என்று பத்து தரம் செபித்து, அதற்குத் திக்குபந்தனமும் அவகுண்டனமும் செய்து அதை வலக்கையில் ஏற்றுக் கொண்டு, அர்க்கிய ஜலம் கூட்டி, ஓம் சிவ சூர்யாய சுவாகா என்று உற்பவ முத்திரையினாலே சேடத்தைச் சூரியனுடைய வலக்கையிலே நிவேதித்துக் கும்பிட்டுக் கொள்க,

## 1216. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 929

ஆ. ல/242

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. பெருஞ்சேரி சுவாமிகள் மருத்துவ முறை

இ. மருத்துவம்

ஈ. உரைநடை.
அச்சில் ஏறத்தாழ 75 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 57 ஏடு; 114 பக்கம்

ஆ. நீளம் 12 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. கிறுக்கலான கையெழுத்து.

ஊ. இடையிடையே சில ஏடுகள் இல்லை.
ஓரளவு சிதைவுற்ற ஓலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பஞ்சரசக் குளிகை

ரசம் 10 வராகன்
ரச கற்பூரம் 10 வராகன்
ரச செந்தூரம் 10 வராகன்
வீரம் 10 வராகன்
சாதிலிங்கம் 80 வராகன்
சரக்கு அஞ்சுக்குக் கூடிய வராகன் 120,

கல்வத்தில் போட்டுக் கற்பூரவல்லிச்சாறு, வெற்றிலைச் சாறு விட்டு நாலு சாம மரைத்து உளுந்து பிரமாணம் குளிகை செய்து வெற்றிலையைப் பரப்பி அதன் பேரில் குளிகையைப் பரப்பி நிழலுலர்த்தி, கோழி முட்டையை மேலே பொத்தி அதிலிருக்கிற கருவை ஊற்றிப் போட்டு, முட்டைத் தோடைக் காய வைத்து, அதில் மேற்படி குளிகையை முக்காலளவு போட்டு, முட்டைத்தோடு மூடி, உளுந்து பசையால் மூடி, ஒரு சட்டியில் நாலு விரல் பிரமாணம் மணல் விட்டு அதன் பேரில் மேற்படி முட்டையை வைத்து மேலே மணல் விட்டு முட்டை தெரியும் படியாக வைத்து அடுப்பில் வைத்து தீபம் போலே எரிக்கவும். அதற்குப் பதம் எண்ணெய் மணலில் போட்டால் பொரியும். அந்தப் பதத்தில் இறக்கி ஆறவைத்து எடுத்து சீசாவில் வைத்துக் கொண்டு, வியாதியறிந்து, அனுபானமறிந்து, வயது, இளமை, முதுமை அறிந்து (கொடுக்கவும்)

ஆ. முடிவு

அயகாந்த செந்தூரம்:— அயம், காந்தம் சுத்தி செய்து இரண்டும் சமனாய்க் கூட்டி, சாதிலிங்கம் அதுக்குச் சமனாய்க் கூட்டி, வெண்காரம் அதுக்கு $\frac{1}{4}$ விகிதம்; ரசம் $\frac{1}{4}$ விகிதம். இந்த ஐந்துக்கும் சமஅளவு கெந்தி கூட்டி, கெந்தி சுத்தி செய்து கூட்டி, கல்வத்தில் போட்டு, பழச் சாற்றால் நாலு சாமம் ஆட்டி, பூ நீறு கழஞ்சி 2, பொற்றலைக் கையாந்தகரை சாறுவிட்டரைத்து, நாலு சாமம் அரைத்து வில்லை தட்டி ஓட்டில் வைத்து ஓடு மூடி 30 எரு புடம் போடவும். அருணன் போல செந்தூரம் ஆகும். ஒரு பண எடை அனுபானத்தில் சாப்பிடவும். பித்த ரோகங்கள் எல்லாந் தீரும்.

## 1217. கொங்கணர் ஞான அட்டாங்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 930

ஆ. ட/186

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. கொங்கணர்

ஆ. கொங்கணர் ஞான அட்டாங்கம்: விரித்துரை

இ. தத்துவம்

ஈ. செய்யுள் 105

## 3. தோற்றக் கூறுகள்

அ. 26 ஏடு; 52 பக்கம்.

ஆ. நீளம் 18 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அட்டவெளி ஒளிசிறந்த மூல நாயன்
அடிபணிந்து போகர்பாதம் அன்பாய்ப் போற்றி
வெட்டவெளி யாகவே ஞானந் தானும்
விரித்துரைக்க நாதாந்த வித்தாங் காயங்
கட்டவழி அறியாமல் விம்பந் தோன்றக்
கருப்பிரித்து பார்த்துவெகு காலங்கரித்து
திட்டமுடன் அட்டாங்கந் தன்னைச் செப்பச்
செகதியு நந்தியுங் நதந்தியங் காப்பே.

ஆ. முடிவு

செப்பமிலே துடுக்கவர்கள் செய்தா லுந்தான்
சேர்ந்துமக்காள் பொறுப்பதுவு மெத்த நன்று
ஒப்பயிலே மூலவர்க்கத் தோடே யாட
ஒருவருக்கு முடியாது வசத்தி மூலங்

குப்பையிலே கிடந்தாலுந் தங்கம் மக்காள்
குன்றாது வரன்மெத்த விகம மாகும்
உப்பையல்லோ வாதத்துக் காதி யென்றும்
உத்தமனே மனம்போற்ற தாச்சே. (105)

## 1218. திருவாசகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 931

ஆ. ண/42

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்

ஆ. திருவாசகம்

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 175 ஏடு; 350 பக்கம்.

ஆ. நீளம் 16 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு 8 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சிதைவுற்ற நிலை, முதல் 4 ஏடுகள் இல்லை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் 917 காண்க.

## 1219. நாநாசீவ வாதக் கட்டளை

1. நூலகக் குறிப்புகள்

அ. 932

ஆ. ட/187

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. சேஷாத்திரி சிவனார்

ஆ. நாநாசீவ வாதக் கட்டளை: மூலமும் உரையும்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 300 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 129 ஏடு; 258 பக்கம்.

ஆ. நீளம் 25·5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி

உ. சுமாரான எழுத்து.

ஊ. மிகச் சிதிலமான நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் 914 காண்க.

## 1220. திருத்தொண்டத் தொகை

1. நூலகக் குறிப்புகள்

அ. 933-1

ஆ. ண/43

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. சுந்தரமூர்த்தி நாயனார்
ஆ. திருத்தொண்டத்தொகை
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள் 11

3. தோற்றக் கூறுகள்

அ. 2 ஏடு; 4 பக்கம்.
ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதைவுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென் . . . . மடியேன்
. . . . அடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொரு ளுக்கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறல்மிண் . . . .
முல்லையந்தா ரமர்நீதிக் . . . .
கடியனா ரூரிலம் மானுக் காளே. (1)

ஆ. முடிவு

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் . . . .
மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
அன்னவனா மரனடியே யடைந்திட்ட சடைய
னிசைஞானி காதலன் திருநா வலுரர்க்
கொன்னவனா மாரூரன் அடிமை கேட்டு
காப்பாராரூரி லம்மானுக் காண்பார் வாரே.

**திருத்தொண்டத் தொகை முற்றும்.**

## 1221. திருத்தொண்டர் திருவந்தாதி

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 933–2
ஆ. ண/43

### 2. உள்ளீடு; நூல் விவரம்

அ. நம்பியாண்டார்நம்பி
ஆ. திருத்தொண்டர் திருவந்தாதி
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள் 89

### 3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு; 15 பக்கம்.
ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சிதைவுற்ற நிலை.
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

செப்பத் தகுபுகழ் தில்லைப் பதியிற் செழுமறையோர்
ஒப்பப் புவனங்கண் மூன்றிலு மும்பரி னூரெரித்த
வப்பற் கமுதத் திருநடற் கந்திப்பி யையணிந்து
துப்பற் குரிமைத் தொழில்புரி வோர்தமைச் சொல்லுதுமே. (1)

ஆ. முடிவு

ஓடிடும் பஞ்சேந் திரியம் ஒடுங்கி யென்னூழ் வினைகள்
வாடிடும் வண்ணநின் றெத்தவஞ் செய்தனன் வானி னுள்ளோர்
சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையி னுள்ள
சேடாதஞ் செல்வப் புகழினந் தாதி யைச்செப் பிடிலே. (89)

நம்பியாண்டார் அந்தாதி எழுதி நிறைந்தது.

## 1222. சேக்கிழார் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 933–3

ஆ. ண/43

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்

ஆ. சேக்கிழார் புராணம்

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள் 105

3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு; 29 பக்கம்.

ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சிதைவுற்ற நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீராருஞ் சதுமறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியும் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெல்லா மீடேற
ஓராரு மணிமன்று ளுற்றதிரு வடிபோற்றி. (1)

ஆ. முடிவு

அண்டர் வாணர்பொன் னம்பலத் திறைவர்
அடியெடுத்து உலகெ லாமெனத்
தொண்ட ரான வறுபத்து மூவருட
கதையுஞ் சுருதி யொழியத்தாய்ப்

பண்டு பாடியுரை செய்த குன்றை
முனிபாலி சூழ்திரு நாடன்மேற்
தண்டமிழ்ப் புரிமுந் நூலிலங்கு
கொற்றங்குடிப் புனிதர் செய்ததே.
சேக்கிழார் புராணம் முற்றும்.

## 1223, பெரியபுராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 933–4

ஆ. ௱/43

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. சேக்கிழார்

ஆ. பெரியபுராணம்

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 376 ஏடு; 752 பக்கம்.

ஆ. நீளம் 39 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி,

உ. சுமாரான எழுத்து

ஊ. சிதைவுற்ற நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 919 காண்க,

இ. பிற்குறிப்பு

விசய வருஷம் ஆடி மாதம் 24 ஆம் தேதி சுக்கிர வார நாள்..நட்சத்திரத்தில் எழுதி....மாரிமுத்து கையெழுத்து.

5. பிற செய்திகள்

இறுதியிலுள்ள இரண்டு ஏடுகளில் 'திருத்தொண்டர் புராண அட்டவணை' எழுதப்பட்டுள்ளது.

## 1224, பெரியபுராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 934
ஆ. ண/44

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. சேக்கிழார்
ஆ. பெரியபுராணம்
இ. சைவத்திருமுறை
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 202 ஏடு; 404 பக்கம்.
ஆ. நீளம் 29 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. இடையிடையே ஏடுகள் காணவில்லை- சிதைவுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்; 919 காண்க.

ஆ. முடிவு

மாறு கடந்து மண்காக்கும் வளவர் பொன்னிநதி நாட்டு
நாறு விரைப்பூஞ் சோலைகளி னனைவாய் திறந்து பொழி
செழுந்தேன்
ஆறு பெருகி வெள்ளமிடு மள்ளவய லினமள்ளருமுஞ்
.. .. ..

(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1225. வாசுதேவ மனனம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 935

ஆ. ட/188

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ...........

ஆ. வாசுதேவ மனனம்

இ. தத்துவம்

ஈ. உரைநடை

அச்சில் ஏறத்தாழ 600 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 279 ஏடு; 558 பக்கம்.

ஆ. நீளம் செ. மீ.; அகலம் செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி

உ. சுமாரான கையெழுத்து

ஊ. நல்ல நிலை,

ஏ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 900 காண்க,

இ. பிற்குறிப்பு.

சைவம், சுந்தரம்மாளுக்கு, அகண்டித வீரசைவ மல்லிகார்ச்சுன சுவாமியினது கையெழுத்து. முடிந்தது. முற்றும்,

## 1226. கைவல்ய நவநீதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 926

ஆ. ட/189

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தாண்டவராய சுவாமி

ஆ. கைவல்ய நவநீதம்: மூலமும் உரையும்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 500 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 252 ஏடு; 504 பக்கம்.

ஆ. நீளம் 25 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி,

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை,

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்; 872 காண்க.

## 1227. பஞ்சதசப் பிரகரணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 937

ஆ. ட/190

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. பஞ்சதசப்பிரகரணம்

இ. தத்துவம்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 115 ஏடு; 230 பக்கம்.

ஆ. நீளம் 26 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9,10 வரி.

உ. தெளிவான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்; 898 காண்க.

ஆ. முடிவு

சமாதியிலே ஆனந்தமெப்படி இருக்கும்; சமாதியில்லாத வேளையிலே எப்படி இருப்பன். இப்படி யோகத்திலே மனது மூண்டவனுக்கு அடையாளமேது. இந்திரியங்கள் பலம் பண்ணிப் பிரபஞ்சத்திலே இழுத்தாற் செய்காரிய மேதிவனுக்கு. விஷயா னந்தம் எப்படித் தோற்றும். இந்த அஞ்சு சங்கைக்கு சமாதியிலே நிர்மல அந்தக்கரணத்துக்குக்கொரு சுகிசனை தெரியுமே யல்லா மல் வாக்காலே சொல்லப் போகாது. சமாதியிலே நிச்சயித்த படிக்கு மிக்க வேளையிலும் நம்பிக்கையா . . . . . .

(இதற்குமேல் ஏடுகள் இல்லை).

இ. பிற்குறிப்பு

அநேகவித லட்சணா வித்தாரத்துடனே கூடியிருக்காநின்ற மகா மாயா மோகத்தை எந்நேரமும் எடுத்து விழுங்குகின்றதே வேலையாயிருக்கின்ற சங்கராசாரியர் குருமூர்த்திகளினது பாதார விந்தப் பொருட்டு நமஸ்காரம்.

வித்தியாரண்ணிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியது.

## 1228. சதுரகராதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 938

ஆ. ச/32

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. வீரமாமுனிவர்

ஆ. சதுரகராதி

இ. இலக்கணம்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 115 ஏடு; 230 பக்கம்.

ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
பக்கத்துக்கு ஐந்து பத்தி.

ஈ. ஒரு பக்கத்திற்கு 16 வரி

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. முதல் 7 ஏடுகளும், இடையிடையே சில ஏடுகளும் காணப்படவில்லை, சிதைவுற்ற நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அதிரி — ஒலி
அதிர்ச்சி — ஆரபாரம்
அதிர்த்தல் — அதட்டல், சொல்லுதல்
அதிர்ப்பு — நடுக்கம்
அதிதர் — வானோர்
அதுக்குதல் — அடித்தல்.

ஆ. முடிவு

அரண் — 4 : மலை, காடு, மதில், கடல்.
அரசர் — 3 : சேரன், சோழன், பாண்டியன்.
அளவு — 4 : எண், கோல், நாழி, நீட்டல்,
அறம் — 2 : இல்லறம், துறவறம்.

அறம் –32 : ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க்குஊண். அறுசமையத்தோர்க்கு உண்டி, மடம், தடம், சோலை, தண்ணீர்ப்பந்தல், நடைத்தின்பண்டம், வதுவை, மகப் பெறுவித்தல், மகப்பால், மகச்சோறு, சிறை சோறு....

(இதற்குமேல் ஏடுகள் இல்லை.)

## 1229. கைவல்ய நவநீதம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 939
ஆ. ட/191

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தாண்டவராய சுவாமி
ஆ. கைவல்ய நவநீதம்: பூர்வ படலம்
இ. தத்துவம்
ஈ. செய்யுளும் உரைநடையும், அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 99 ஏடு; 198 பக்கம்.
ஆ. நீளம் 27 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 9, 10 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. நல்ல நிலை. முதல் ஏடு இல்லை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

..இகலோக ஸ்திரி, பரலோகரம்பாதி ஸ்திரி, பாதாள லோக நாக கன்னிகா ஸ்திரி முதலிய மடவாரிடத்தும் ஆசை பொருந்தினர். நிட்காம புண்ணியஞ் செய்யாத படியினாலும் ஈஸ்வர கிருபை வாராத படியினாலும், மித்தையாபுத்தியில்லாத படியினாலும், உளவு, தொளவு, வரைவு, வாணிபம், வித்தை, சிறப்பாகிய அறுவகைத் தொழிலுஞ்செய்து இகத்திற் பொன்னில மாதரையும், யாத, தான, உபாசனை, யோகாதி செய்து, பரத்திலும், பாதாளத்திலுமுள்ள பொன்னில மாதரையடையும் படி இச்சை செய்யும் ஞானிகளும் பொருந்தார நிட்காம புண்ணியஞ் செய்து, ஈஸ்வர கிருபையினால் தத்துக்கியானம் வந்து....

ஆ. முடிவு

இந்நிலந் தனிற்கை வல்யநவ நீத மெனப்பே ரிட்டு
நன்னிய மருவு நாராயணன் சொன்ன ஞான நூலைப்
புண்ணிய ராய்ந்து பார்ப்போர் பரமார்த்த சொருப ராகி
அன்னிய அனந்தம் பொய்யாய் ஆனந்த மெய்யார் வாழ்வார்

கைவல்லிய நவநீதத்தில் பூர்வ படலம் தத்துவவிளக்கம் மூலமும் உரையும் முற்றிற்று.

## 1230. இலக்கண விளக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 940

ஆ. ச/33

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. வைத்தியநாத தேசிகர்

ஆ. இலக்கண விளக்கம்: சொல்

இ. இலக்கணம்

ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 111 ஏடு; 222 பக்கம்.

ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 10,11 வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. பல ஏடுகள் முறிந்த நிலை. மிகு சிதைவு.

எ. குறை

4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

உமையவளொடு கலந்து உலகுபுரந்தருளும்
மையவன்......தறைகுவன் சொல்லே.
என்பது......காரமேற் பாயிரத்துள்ளே......
முதன் மூன்றையும் மேன்மேன் நிறுத்த முறையானே
எழுத்து ...... சொல்லுணர்த்துகின்றாராகலாற்.. ..
மென்னும் பெயர்த்து.

ஆ. முடிவு

(பிற்பகுதியிலுள்ள பல ஏடுகள் முறிந்துள்ளன. எனவே நூலின் முடிவினைத் தெளிவாக எழுத இயலவில்லை).

## 1231. கம்பராமாயணம்

1. நூலக்க் குறிப்புகள்

அ. 941

ஆ. த/92

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. கம்பர்
ஆ. கம்பராமாயணம்: பால காண்டம்
இ. காப்பியம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 147 ஏடு; 294 பக்கம்.
ஆ. நீளம் 30 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 11,12 வரி.
உ. சுமாரான கையெழுத்து.
ஊ. மிகமிகச் சிதைவுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

(மிகவும் சிதைவுற்றுள்ளதால் படித்தறியும் நிலையில் இல்லை.)

## 1232. அவிரோத உந்தியார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 942
ஆ. டி/192

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. சாந்தலிங்க சுவாமிகள் — பேரூர்.
ஆ. அவிரோத உந்தியார்; மூலமும் உரையும்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 63 ஏடு; 126 பக்கம்.

ஆ. நீளம் 19 செ, மீ; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. பல ஏடுகள் சிதைந்துள்ளன.

எ. குறை

5. பிற செய்திகள்

அ. தொடக்கம்

எல்லா முடையான் குருவாகி
ஈங்கெம தல்லலறுத் தாளென்று உந்தீபற
அவன்தாள் தொழுவோ மென்று உந்தீபற.

சொல்லுவார் சொல்லும் வண்ணங் காரணத்தையு முடைய வொரு பூரணன் குருவடிவமாகி இவ்விடத்திற்தோன்றி ஒன்றுக்கும் பற்றறாத வென்னுடைய பிறவித் துன்பத்தை வேர் அறுத்தருளின கருணை மூர்த்தியினது திருவடிகளைத் தொழா நின்றே னென்றவாறு. உந்தியென்றது குழாங்கூடிய மகளிரது ஓர் விளையாட லெனக்கொள்க.

இது கடவுள் வணக்கங் கூறியது. (1)

ஆ. முடிவு

தின்மையால் வத்தவே நீக்குகின்றா ரென்னில் வத்து ஆனந்த சொரூப சருவ திறத்தினாதலால் அவன்தனக்கொரு பயனும் வேண்டான். அவன் ஆன்மாக்களாலடையும் பயன் யாது. அங்ஙனம் பயனைக் குறித்தன்று வத்து ஒப்பற்ற பொருளுடையோ னாதலினான் ஆன்மாக்களிடத்து வைத்த கருணையே யெனில் அங்ஙனமாயினுடனே பந்தம் நீக்க வேண்டும். நீக்குதல் கூடாதென்னில் . . . . . . . . . .

(இதற்கு மேல் ஏடுகள் இல்லை)

## 1233. சௌந்தரியலகரி

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 943

ஆ. த/27

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. கவிராச பண்டிதர்

ஆ. சௌந்தரியலகரி: மூலமும் உரையும்

இ. பிறதோத்திரங்கள்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 50 ஏடு; 100 பக்கம்.

ஆ. நீளம் 30.5 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பாயிரம்

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பொழிந்தமறை நூலியற்று முகபடா
மணிந்துமுது ஞான தானம்
பொழிந்துதன திணைமணியென் றிருசுடரும்
புனைகளிற்றைப் போற்றல் செய்வாம்

வழிந்துபெரும் புனல்பரந்து வடவரையிற்
றுலகேழு மேழு மொக்க
வழிந்திடினு மழியாத வபிராமி
பாடல்வள மளிக்க வென்றே.

ஆ. முடிவு

இகல்போர்க் குழையை முட்டும்
இமைமயி ரொழுங்குற் றூவ
நிகரரு நித்தர் யோகம்
நீக்கிவெம் போக நல்குஞ்
சிகரவெற் பரசன் தொல்லைத்
திருமர பென்னுந் தெய்வ
மகுடமா மணிநின் கண்கள்
வயமதன் வாழிதானே.

(இ-ள்) சிகரத்தோடு கூடிய வெற்பரசனுடைய பழைய திருமர பென்று சொல்லப்படும் தெய்வ மகுடத்தில் அழுத்திய மாணிக் கம் போன்றவளே பகையைப் பொரும்படிக்கும் காதளவு வாங்கி னது போலக் குழையை முட்டி இருக்கின்ற..........

(இதற்கு மேல் ஏடுகள் இல்லை)

இ. பிற்குறிப்பு

இப்புஸ்தகத்திலுள்ள கிரந்தங்களின் பெயர் அட்டவணை
சவுந்தரியலகரி தமிழ் மூலமும் உரையும் 1.
திருச் செந்திலந்தாதி நிரோட்டம் 2.
நாற்பத்தி முக்கோண விதி. தமிழும் கிரந்தமும் 3.

(இவை முழுதும் இல்லை)

## 1234. வேதாந்த சூளாமணி

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 944

ஆ. டி/193

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. சிவப்பிரகாசர் — துறைமங்கலம்

ஆ. வேதாந்த சூளாமணி: மூலமும் உரையும்

இ. தத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்,
அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 98 ஏடு; 196 பக்கம்.

ஆ. நீளம் 18 செ.மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. சில ஏடுகள் சிதைந்துள்ளன. சுமாரான நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சிறப்புப் பாயிரம்

வேதமொரு நான்கு மார்க்கமும் நன்னியாய்
மீமாஞ்சையொடு மிருதிபுரா ணமுமீ ரேழா
ஓதலுறும் வித்தைகளா மவற்றுண்மீ மாஞ்சை
உயர்ந்ததாயை நானகத்தி யாயமா யருத்த
பேதமுற விருகூறு மவற்றுண் முதற்கூறே
பிறங்குமருட் சயிமினி சூத் திரரூப மாகிய
போதுமீ ராறுஅத்தி யாயங்களாய்க் கருமப்
பொருளுணர்த்திப் பூருவமீ மாஞ்சையெனப் படுமால்.

ஆ. முடிவு

வேதாகம சாத்திரங்களினாற் சொல்லா நின்ற பொருளைக் கற்றறியக் கரதலத்து நெல்லிக்கனி போலத்தோற்றி ஞான மயமாகிய பேரானந்தத்தில் அமிழ்த்தப்பட்ட குற்றம் நீங்கிய இந்த வேதாந்த சூளாமணியை மோட்சத்துக்குரித்தாகிய

சாதனசதுட்டையம் வந்தவர்கள் எவர்களாயினும் எப்போதுந் தடையில்லாதப் பிறவிப் பிணியைக் கெடுக்க வேண்டிப் பத்தி வைராக்கிய ஞானத்துடனே யருளையுடைய வாசாரியனைத் தேடித்திகைத்திதுருகா நின்றவஞ்பனைக்கண்டாற்கண்டவுடனே அவனுக்குக் கொடுத்திடுக என்றவாறு. (4)

ஆகத் திருவிருத்தம்185. வேதாந்த சூளாமணி முற்றும்.

இ. பிற்குறிப்பு

நந்தன வருஷம் தை மாதம் 15 ஆம் தேதி வேதாந்த சூளாமணி எழுதி முகிந்தது. முற்றும்.

5. .................

6. .................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1235. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 945

ஆ. ல/243

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ...........

ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் (474 முதல் 989 வரை)

3. தோற்றக் கூறுகள்

அ. 136 ஏடு; 272 பக்கம்.

ஆ. நீளம் 24 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. மிகச் சிதைவுற்ற நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆணப்பா முக்காலும் விஷநீர் வீழும்
காணாமல் விழுந்துதொடும் சன்னி எல்லாம்
பூணப்பா யென்னையிதா கியம்பக் கேளு
புகழவே வேப்பந்தோல் சாறுழக்கு வாங்கித்
தோணப்பா பிரமிச்சாறு துளசிச் சாறு
சுகமான திராய்ச்சாறும் வகைவகைக் குழக்கு
ஊணப்பா இவைவேரும் பலமொன்றாய்க் காலாய்
உற்றதற்கு முசுறுமுட்டை பலமுக் காலே. (474)

ஆ. முடிவு

இயம்புகிறேன் வாய்விளங்கம் மலைவேம்புப் பிசினும்
என்மகனே விளாம்பிசினுங் கருவேலன் பிசினும்
இயம்பக்கேள் வகைக்குநற் சீரகம்வெண் காரம்
ஏலமொடு கத்தூரி மஞ்சள் சுக்கு
இயம்புகிறேன் மரமஞ்ச ளிவைவகைக்குத் தானே
என்மக்கா ளொருபலந்தா னிறுத்துக் கொண்டு
இயம்புகிறேன் ஆவரையும் விதைதா னப்பா
என்னாத நாற்பதுபலத்...... (489)

# 1236. மச்சமுனி பெருநூல்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 946

ஆ. ல/244

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. மச்சமுனி
ஆ. மச்சமுனி பெருநூல் 800
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 802

## 3. தோற்றக் கூறுகள்

அ. 163 ஏடு; 326 பக்கம்.
ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. பல ஏடுகள் சிதைவு. சுமாரான நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியந்தம் வேத வித்தா ரத்தை நாதன்
ஆதி குருவென்ற பொருள்பிடினாக் கீசர்
சோதி பரா வெளி யான குருபரன் தானே சூட்ச கார
பீடந் துரியாதீதம்
ஓது பிரணவர் பாச ரீங்கார பரப்பிரம மூல கணேசன்
காப்பாமே. (1)

(பாடலில் சீர் ஒழுங்கு இல்லை)

ஆ. முடிவு

வித்தை கற்றோன் பாதத்தா ராணை
வெளிவிடா வேதாந்த மனோத்தா யாணை
சித்தருக்கா யெண் ணூறு பெருநூ லப்பா
சிவஞானந் தங்குகின்ற பெரியோர்க் காகும்
மத்தொருத்த ரிந்நூலைப் பதனம் பண்ணி
வைத்தாலும் அவர்களுக்கு முத்தி வாய்க்கும்
பத்தருக்குப் பாடிவைத்த சத்தி மட்டான்
பதிவாகும் எண்ணூறு தானும் முற்றே.

## 1237. சாலத்திரட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 947
ஆ. ல/245

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. . . . . . . . . . .
ஆ. சாலத்திரட்டு, மூன்றாங்காண்டப் பட்லம்.
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் (601 முதல் 779 வரை) 179

3. தோற்றக் கூறுகள்

அ. 37 ஏடு; 74 பக்கம்.
ஆ. நீளம் 41 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. சிதைவுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மானொருகை மழுவொருகை தரித்த நாதன்
வாதமது வழியுரைத்தா ராதி யந்தம்
நானொருகை யிந்திர சால வித்தை
நவிலுகிறேன் நந்திகுரு நாதர் காண
தானொருகை கருக்குருவா மூலி வேர்கள்
தப்பாமல் வழலையொடு தந்திரங்கள்
வானொருகை பூவொருகை வைத்தநந்தி
மாமுகத்தே னமுனங்கான வழுத்துறேனே. (601)

ஆ. முடிவு

சொன்னதொரு மாந்திரீகஞ் சுருக்காஞ் சூட்சம்
    சூட்சத்தில் மாரணத்தைச் சொல்லக் கேளு
பொன்னான காரீயத் தகடு வாங்கி
    புகழ்பெரிய மாரணசக் கரத்தைக் கீறி
கொன்றேநீ போடுதற்கு விபரங் கேளு
    .. .. .. ..

இதற்குமேல் ஏட்டில் இடம் இருந்தும் எழுதப்பெறவில்லை,

## 1238, மகாபாரத அம்மானை

1, நூலகக் குறிப்புகள்

அ. 948
ஆ. ர/22

2, உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........
ஆ. மகாபாரத அம்மானை
இ. நாட்டுப்பாடல்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 192 ஏடு; 384 பக்கம்.
ஆ. நீளம் 45 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது. மூன்று பத்தி.
ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.
உ. சுமாரான கையெழுத்து
ஊ. இடையிடையே ஏடுகள் இல்லை.
பல ஏடுகள் சிதைந்துள்ளன. 30,44,212 ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தளைக்குந் தண்மலர்க் காவிற் குயில்தன்னை
அளைக்கு மென்முலை யாளுமை யாள்பெறு
புளைகை வாரணப் பொற்பதம் போற்றினால்
மளைக்குள் ளாத திருவாழ்வு தருவளே. (1)

ஆ. முடிவு

மகிழ்ந்தோர் சிரமசைத்தோர் வழங்கை யார்க்கும்
தோதின்றிப் புடவைதன்னில் மதுவை யுண்டுப்
பொறிப்பதுபோல் பிறிதுரையைப் புகழ்கின் றோரும்
ஆதியருட் பவுசுடரிப் புவியை யாண்டு
அருட்கருணை அம்பலன்தாள் அடைவர் தாமே,

## 1239. சோதிட நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ, 949

ஆ. வ/46

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. சோதிடச் செய்திகள்

இ. சோதிடம்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 27 ஏடு; 54 பக்கம்.

ஆ. நீளம் 29 செ. மீ.; அகலம் 2 செ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது,

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

யோனியில்—ஆண் குதிரை, பக்ஷி—ராசாளி, வருஷசகம—எட்டி மரம், தெய்வ கணம், ராசி—மேஷம், வாரம்—செவ்வாய், சித்திரை—மாதம், சூனியம்—கிழக்கு, வடக்கு—வாசல் விடுவது—காலுக்கு பொருத்தம் 7. இதுக்கு திசை அசுபபக்கி. இனி திசைப் பலன் அறியும்படி வயது 120. காலிலே 15.

ஆ. முடிவு

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| புதன் | — 17 | சூரியன் | — 6 | ராகு | — 18 | ஆக |
| கேது | — 7 | சந்திரன் | — 10 | ராசா | — 16 | வயது |
| சுக்கிரன் | — 20 | செவ்வாய் | — 7 | சனி | — 19 | 120 |

## 1240. சீதா கல்யாணப் பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 950

ஆ. ற/58

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .............

ஆ. சீதா கல்யாணப் பாடல்கள்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள்

3, தோற்றக் கூறுகள்

அ, 4 ஏடு; 8 பக்கம்.

ஆ, நீளம் 28 செ மீ.; அகலம் 3 செ,மீ,

இ, இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது,

ஈ, ஒரு பக்கத்திற்கு 4 வரி

உ, சுமாரான எழுத்து;

ஊ, நல்ல நிலை,

எ குறை.

4, சிறப்புச் செய்திகள்

அ, தொடக்கம்

சக்கரபதி யாகிய ராகவன் இவ்வாறு
சமைந்தநல்ல மணவாளக் கோலம் கொண்டான்
அக்கணமே தம்பியரும் கொண்டார்
அரசர்களும் தசரதனும் மந்திரி மாரும்
திக்கிலுள்ள முனிவரும் வேதியரும் கூடித்
திரைகடல்போல் மிகவோங்கி மிதிலை தன்னில்
முக்கியமுள்ள பலசடங்கின் விதிகள் எல்லாம்
முறைசெய்தார் கலியாணத் துரைசெய் தாரே.

ஆ. முடிவு

கோதண்ட கையனுக்கும் குலவுகுண சீலனுக்கும்
சத்திய விலாசனுக்கும் தேவரனு கூலனுக்கும்
அதிசத்ர பாலனுக்கும் சீராமபகி ரண்டநாதனுக்கும்
வேதனுக்கும் மங்களம்.
பரதனாம் அன்பனுக்கும் மும்பனுக்கும் மங்களம்
சகல உலாசனுக்கும் தருமநக்கா சனுக்கும்
அகில விலாசனுக்கும் அயோத்திய வாசனுக்கும்
சீராம சந்திரனுக்கும் நல்லதிவிமுக சந்திரனுக்கும்
செயமங்களம்,

## 1241. காத்தவராயர் கழுவேற்றப் பாட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 951

ஆ. ர/23

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. காத்தவராயர் கழுவேற்றப் பாட்டு

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 97 ஏடு; 194 பக்கம்.

ஆ. நீளம் 25 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. தெளிவான எழுத்து

ஊ. மிகச் சிதைவு

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சுந்தரிகா மாட்சி காட்சி இருந்தருளும்
வடிவமதாய்த் துகளில் லாத
மந்தரஞ்சேர் புயனான் யேகாம்ப
ரீசரிடம் மருவி வாழ்க.
வந்தவனி துதிக்குமெது மலைதன்னி
லிருந்தருளும் வடிவந் தன்னை
சிந்தைதனில் நினைத்தவர்கள் நினைத்தவரம்
பெறுவரென்றும் சிறந்து தானே,

ஆ. முடிவு

மருளாளிக ளெல்லாம் — மனமகிழ்ந்து வாழ்ந்....
எதுமலையி லுள்ளவர்கள் — எந்நாளுந்தான் வா....
அடிமைக் குடிகளெல்லாம் — ஆல்போல் தழைத்....
இந்தக் கழுவத .. .. .. செப்ப நிட்....
விந்தையுள்ள வீரமலை ஆசாரி தான் வாழ்க....
.. .. .. .. ..

(இதற்குமேல் ஏடுகள் இல்லை).

இ. முற்குறிப்பு

குரோதி வருஷம் மாசி மாதம் 21 ஆம் தேதி எதுமலை காமாட்சியம்மன் கருப்பண்ணசுவாமி கோயில் காத்தவராயர் கழுவேற்றப் பாட்டு எழுதி சம்பூரணம்.

## 1242. அலேசியார் நாடகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 952

ஆ. ற/59

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .............

ஆ. அலேசியார் நாடகம்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 48 ஏடு; 96 பக்கம்.

ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 4 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8 வரி.

எ. சுமாரான எழுத்து.

ஊ. இடையிடையே பல ஏடுகள் இல்லை;சிதைவுற்ற நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியீ றில்லாய் போற்றி
அளவினி லடங்காய் போற்றி
சோதிசேர் பரம ஞான
சுந்தரா போற்றி போற்றி
பாதிமா மதியைப் பாதம்
படைத்தவள் பாலா போற்றி
நீதிசே ரருள் மெய்ஞ் ஞான
நிமலனே போற்றி போற்றி.

ஆ. முடிவு

அகமதனில் வைத்தே நன்றாய் மந்திரி....
தகமையொடு படைத்த யேகன் நமக்காகத்....
தரணிதனில் மனுரூபமாய் சகமதனில் பாடுபட்ட
சேதிதனையு மறிந்து அகம......யாகுலத்
தாயாகமதை யறிந்ததில்லை யே......
அறிவனென்று புகன்ற வரசே........

(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1243. ஆத்திசூடிப் புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 953

ஆ. ந/93

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. ஆத்தி சூடிப் புராணம்; மூலமும் உரையும்

இ. காப்பியம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 500 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 242 ஏடு; 484 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7, 8 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. பொதுவாக நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நந்திமலை வாழ்பெரிய நாயகியா ராதிசித்தி
எந்தைபிரான் மாலை இயம்புதற்குச்—சுந்தரமார்
முப்புரிநூல் தொப்பைவயிர் மோதகக்கை யானைமுகக்
கற்பகத்தின் பொற்பதமே காப்பு.

ஆ. முடிவு

செய்யதிரு வானந்த வருஷமா தங்கன்னி
தேதியிரு பதுவெள்ளிநாள்
தேவிமக நவமியிலுத் திராடநட் சத்திரஞ்
சுகநாம யோகம்
துய்யபவ கரணமுங் கூடியசு பதினமதில்
தொல்புவிக் கரசனா னவர்கள்
சுப்பய்ய ரவர்கள்மநு நீதிரகு நாதய்யர்
அரசாளும் செங்கோன்மையில்
வையம்பு ரக்கவரு பண்டுகுல மணிபெற்ற
மன்னவன் துரைலிங்கவேள்
மற்றுமுள் ளோர்களும் கூடிசந் நிதிமுன்பு
வந்தரங் கேற்றி வைத்தார்

தையல்பெரி யம்மையுந் தான்வரங் கேட்டபடி
தருகுமித் தலமகிமையால்
சகலகுண சம்பன்ன மகராச போசனெனத்
தாரணியில் வாழிதானே. (118)

(இதன் பிறகு, 'ஆதிசத்தீசர்' எனத்தொடங்கும் 119ஆம் பாடல் உள்ளது).

இ. பிற்குறிப்பு

பிரமாதீச வருஷம் மார்கழி மாதம் 4ஆம் தேதி நல்லூர் வில்லவன் செட்டி குமாரன் ராமன் ஆத்திசூடிப் புராணம். சபாபதி வாத்தியார் பிழைதிருத்தி எழுதி முகிந்தது முற்றும்.

## 1244. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 954

ஆ. ல/246

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ........

ஆ. பெயர் தெரியாத ஒரு மருத்துவ நூல்

இ. மருத்துவம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 59 ஏடு; 118 பக்கம்.

ஆ. நீளம் 32 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 12 வரி

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை. இடையிடையே பாடல்கள் இல்லை.,

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உஷ்ணத்துக்கு

அருத்தி போலிருக்குந் துத்தி
பண்பினாற் பிடுங்கி வேரை
உரித்ததன் தோலை வாங்கி
ஒன்றிய பசுவின் பாலிற்
கரைத்துநெய் சீனி யோடே
கருதியே கொடுப்பீ ராகில்
எரிப்பது விட்டு நீங்கும்
இதமுடன் அணங்கே கேளே. (10)

ஆ. முடிவு

பவுத்திரத்துக்கு மாத்திரை

பெருங்காயம், நாவி, வெள்ளைப் பாசாணம், இரதம். நெறிவிஷம், அரிதாரம், அரைத்தரைத்த மருந்து ஏழும் கூட்டி, பொடி செய்து, மணத்தக்காளிக் சாறு விட்டு, அமுக்கிறா வேரும் ஆனை வணங்கி வேரும் அந்தச் சரக்குடனே மருந்து....

(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1245. அகத்தியர் வகூரி விவரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 955

ஆ. ல/247

## 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. அகத்தியர் வசூரி விவரம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுள் 82

## 3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 13 வரி.
உ. சிறிய கிறுக்கலான கையெழுத்து.
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

காரணமாய் நிறைந்துநின்ற சோதி பாதம்
போற்றிசெய்து உமைபதத்தைப் புகழ்ந்தங் கேத்தி
காரணமாய் நின்றவாணி பாதம் போற்றி
கருணைபெற்ற அகத்தியமுனி கமலம் போற்றி
ஆரணமாம் வல்லோர்கள் பதத்தைப் போற்றி
அழகாக வசூரிவ ருங்குண மவுனதம்
வாரணமாம் வரலாறும் வகுத்துச் சொல்வேன்
வகைபெறவே கணபதிதாள் மகிழ்ந்தங் கேத்தே. (1)

ஆ. முடிவு

தானென்ற வசூரியதன் குணமும் சொன்னேன்
தருவான அஞ்சனமும் அவிழ்தஞ் சொன்னேன்
தேனென்ற சாத்தியம சாத்தியஞ் சொன்னேன்
.. .. .. ..
வானென்ற மருமுள்வின் விபரஞ் சொன்னேன்
வகையாகக் கசாயமது மகிழ்ந்து சொன்னேன்
கானென்ற சித்தருக்கு முலகத்தோர்க்குங்
கருத்தாகச் சொல்லிவிட்டேன் வசூரி முற்றே. (82)

## 1246. இராமதேவர் வைத்திய சூத்திரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 956

ஆ. ல/248

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. இராமதேவர்

ஆ. இராமதேவர் வைத்திய சூத்திரம் 80

இ. மருத்துவம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு; 16 பக்கம்.

ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 12 வரி.

உ. சிறிய, கிறுக்கலான எழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதியிலே அமைத்தவிதி எழுத்தைக் காண
அருளான நந்திபதம் அன்பாய்க் கொண்டு
சோதியென நின்றிலங்கும் நாத ரூபி
சுருதியுள்ள வாலைமனோன் மணியைப் போற்றி
நீதியுடன் சஞ்சாரஞ் சமாதி செய்து
நின்றனடா ஆதியந்தம் நிலைக்க வேதான்
வாதியென வந்தோர்க்குக் குருவா மிந்நூல்
வசனித்தேன் எண்பதுமே லொன்று மாச்சே. (1)

ஆ. முடிவு

காசமொடு விசபாகங் கண்ட மாலை
கபாலத்தி விடிசூலை முதற் கபாலப் புற்று
பேசவொண்ணா நெஞ்சடைப்பு மூச்சை வாய்வு
பின்மூலம் முன்மூலம் பித்த ரோகம்
பூசலது செய்யுகின்ற .. ..
.. .. .. ..

(இதற்குமேல் ஏட்டில் இடம் இருந்தும் எழுதப்பெறவில்லை)

## 1247. மருந்து செய்முறை

1. நூலகக் குறிப்புகள்

அ. 957

ஆ. ல/249

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. மருந்து செய்முறை

இ. மருத்துவம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு; 24 பக்கம்.

ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்துக்கு 12 வரி

உ. சிறிய, கிறுக்கலான எழுத்து.

ஊ. நல்ல நிலை,

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சிவபர நித்திய அசண்டித நிர்மல
சின்மய பரப்பிரம சோதியே
தவவடிவாய்த் தவராச பண்டிதர்
குலந்தனில் அவதரித்தரு ளாதியே.

ஆ. முடிவு

ஆழி தூள தாகிமேலும் அண்டம்வேறு ளையதாய்
ஊழி காலமானபோது யோகிசாவ துண்டுமோ
பாழிலே எழுந்த வன்னி பாரில் வந்து றைத்ததால்
வாழி வாழி நாத முண்ட மாலுயாவர் வாழியே. (31)

முற்றும்.

## 1248. மருத்துவ நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 958
ஆ. ல/250

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .
ஆ. நோய்க்குரிய மருந்துகள்
இ. மருத்துவம்
ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 59 ஏடு; 118 பக்கம்
ஆ. நீளம் 32 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 12 வரி.

உ. சிறிய கிறுக்கலான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கிரந்தி புண்ணுக்குப் புகை

சாதிலிங்கம் 1 வராகன், துரிசி 2 வராகன், சாதிக்காய் 1 வராகன், சீனக்காரம் 1 வராகன், அரிதாரம் 1 வராகன், இதுவெல்லாம் ஏகமாயரைத்து, சீலையிற்பாதி யுள்ளிரு திரித்துத் திரியைக் கொளுத்தி, சரீரத்தில் துப்பட்டி போட்டு மூடிக் கொண்டு புகைபிடிக்கவும், ஏழு நாள் புகை பிடித்து அப்பால் எட்டா நாள் முதற்கொண்டு தண்ணீரில் ரெண்டு நாழிகை நேரம் இருக்கவும். எப்படிக்கொத்த புண்ணும் தீரும்,

ஆ. முடிவு

மேகராசாங்க ரசாயனம்

சங்கவேர்ப்பட்டை, விழிக்கிழங்கு, சீந்திக்கொடி, சிவனார் வேம்பு, வெள்ளருகுவேர், கொடிவேலிவேர், அமுக்கிரா வேர், பரங்கிப்பட்டை, சேங்கொட்டை, நெல்லிக்காய், கந்தகம். சேங்கொட்டையைச் சாணிப் பாலில் அவித்துப் போட்டுச் சூர ணித்துக் கொள்ளவும். கந்தகம் இருப்புக் கரண்டியில் பசுவின் நெய் விட்டுருக்கி பசுவின் பாலில் நாலுதரஞ் சாய்த்துச் சூர ணித்துக் கொண்டு, மற்ற மருந்தெல்லாம் சூரணித்து வடி கொண்டு இடை பாகம் சேர்த்து, கந்தகம் சேங்கொட்டையும் சூரணித்து எடை பாகம் சேர்த்து, பசுவின் நெய்யில் பிசரி செல்லுமளவு விட்டுப் பிசரி, அந்தி சந்தி வெருகடிப் பிரமாணம் கொள்ளவும். புளி, புகையிலை, கைப்புப் பதார்த்தம் தள்ள வும். தீரும் வியாதி—கால் கையில் விழுகிற மேக ஊரல், மேலில் விழுகிற தடிப்பு, சுணக்குகள், மேகநீர்ப் பாய்ச்சல், சிரங்கு முதல் தீரும். அரைமண்டலம், ஒரு மண்டலம் இப்படி வியாதி அறிந்து கொடுக்கவும்.

## 1249. மருத்துவ நூல்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 959

ஆ. ல/251

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .........

ஆ. நோய்க்குரிய மருந்துகள்

இ. மருத்துவம்

ஈ. உரைநடை
அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 85 ஏடு; 170 பக்கம்.

ஆ. நீளம் 32 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 12 வரி.

உ. சிறிய கிறுக்கலான எழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பாண்டுவுக்கு

கையாந்தகரை, அரப்பொடி, காந்தம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய் இவை நல்லெண்ணெய், விளக்கெண்ணெய் பசுவின் நெய்கூட்டி எரித்து, உள்ளங்கையில் வார்த்துக்குடிக்கவும், வயிறு கழியும். பத்தியம் பாலும் சோறும்.

ஆ. முடிவு

வீரசெந்தூரம் ;

அப்பைக் கிழங்கரைத்துக் குகை பண்ணி, குகைக்குள்ளே சவ்வீரக் கட்டி வைத்து மேல் கருகை மூடிப் பொருந்தச் செய்து, சாணாழக்குழி கிள்ளி, அதில் மணல் போட்டு, அதன் மேல் குகை வைத்து, அதன்மேலும் எட்டுவிரற்கடை மணலிட்டு தரை மட்டம் பரப்பி, அதன் மேல் முழ உயரம் எரு அடுக்கி, புடம் போட்டு, ஆற விட்டெடுக்கச் செந்தூரம் ஆம். மேற்படிச் செந்தூரத்தைப் பசு வெண்ணெயில் ஒரு வேளைக்கு இரண்டு பணவெடை வைத்துக் குழப்பிக் கொடுக்கவும். மூன்று நாள் கொடுத்து, ஆறு நாள் பத்தியம் காக்கவும். ஏழாம் நாள் தலைக்குத் தண்ணீர் விட்டுப் பத்தியம் முறிக்கவும். தீரும் வியாதி பாண்டு, மகோதரம், கவுசி, நீராமை, பெரு வியாதி, சூலை, விச பாகம், காமாலை, சோகை, கிரந்தி, குட்டம், மேகம் இருபத்தொன்றும் தீரும். இச்சா பத்தியும் நாற்பது நாள் காக்கவும்.

## 1250. திருக்கோவையார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 960

ஆ. ண/45

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. மாணிக்கவாசகர்

ஆ. திருக்கோவையார்

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள் 400

3. தோற்றக் கூறுகள்

அ. 21 ஏடு; 42 பக்கம்

ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 16, 17 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவளர் தாமரை சீர்வளர்
காவிகளீ சர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்
காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலையோர்வல் லியினொல்கி
யனநடை வாய்ந்து
உருவளர் காமன்றன் வென்றிக்
கொடிபோன் றொளிர்கின்றதே.

ஆ. முடிவு

காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் றக்கோர்தஞ் சங்க நிதிவிதிசேர்
ஊரணி யுற்றவர்க் கூரனமற் றியாவர்க்கு மூதியமே.(400)

திருக்கோவையார் முற்றும்

5. ........................

6. மாற்று சுவடிகள் காணுமிடம்

பல நூலகங்களிலும் உள்ளன.

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1251. திருப்பல்லாண்டு

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 961

ஆ. ன/3

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பெரியாழ்வார்

ஆ. திருப்பல்லாண்டு: வியாக்கியானம்

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 14 ஏடு; 28 பக்கம்.

ஆ. நீளம் 40 செ.மீ.; அகலம் 7 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்குப் பலவித வரி.

உ. தெளிவாக உள்ளது

ஊ. சில ஏடுகள் சிதைவுற்றுள்ளன; 14 ஆம் ஏடு முறிந்துள்ளது.

எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பதிம் விஸ்வஸ்யா தேஸ்வர மென்றும். தசீஸ்வராணாம் பரம மஹேஸ்வரம் என்றும் ஸவ்ஸ்வாசி யாகவும் ஸவ்நியந்தா வாகவும் ஸர்வேஸ்வர ஸ்வரூபத்தை நிர்ணயிக்க சேதனஸ்வ ரூபத்தை அஸ்யாஸ்மி என்றும் பரவானஸ்மி என்றும் தாஸோ ஹம் வாசுதேவஸ்ய என்றும் நிருபித்து....

ஆ. முடிவு

இப்படி சுழியாறு படாநிற்கச் செய்தொருகால் வாங்கவோ.... மூட்டுமென்கை பவித்திரனைப் பரமேட்டியைச் சார்ங்கம் என்னும் வில்லாண்டான் தன்னை வில்லிபுத்தூர் விஷ்ணுசித்தன் பல்லா....நவின்றுரைப்பார் நமோ நாராய ணாயவென்று பரமாத்மனுக்குப் படிந்திருந்து பல்லாண்டு பல்லாண்டேபெற்று.......(12)......

5. ......................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1252. திருமொழி

1. நூலகக் குறிப்புகள்

அ. 962
ஆ. ன/4

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பெரியாழ்வார்
ஆ. பெரியாழ்வார் திருமொழி; 2ஆம் பத்து-வியாக்கியானம்
இ. திவ்யப்பிரபந்தம்
ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 44 ஏடு; 88 பக்கம்.
ஆ. நீளம் 47 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9, 10 வரி.

உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது.

ஊ. 9ஆம் ஏடு காணப்படவில்லை
பல ஏடுகள் சிதிலம். பழுதற்ற நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கீழ் இரண்டு திருமொழியாலும் அச்சோ என்றும் புல்குவான் என்றும்.. ... கணயாகவோடி வந்து மேல் விழுந்து முன்னும் பின்னும் அணைக்கும் ரஸத்தைச் சதா அநுபவிக்க ஆசைப்பட்டு அவனைக் குறித்துப் பிரார்த்தித்து அவன் அப்படிச் செய்ய யசோதைப் பிராட்டி அநுபவித்தாற்போலே அந்த ஸேஷி தங்களினுடைய ரசத்தை அனுபவிக்க ஆசைப்பட்டுத் தாமும் அப்படிப் பிரார்த்தித்து, தத்காலம் போலே அநுபவித்து இனியர் ஆனார்.

ஆ. முடிவு

அங்கு வந்து முறைப்பட்ட—அவள் க்ருஹத்திலே வந்து தங்கள் ஈடுபாடு தோற்ற முறைப்பட்ட அவர்கள் சொல்லை; மங்கை நல்லாரானவர்கள் தாம் அம் கமலக்கண்ணன் தன்னைப் பற்றி அங்கு வந்து யசோதைக்கு முறைப்பட்ட சொல்லை என்று அந்வயம்...........பட்டன் சொல்லிவை அவர்கள் முறைப்பட்ட சொல்லை ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் அருளிச் செய்த சொல்லான இவையிவையிற்றை; இங்கு வல்லவர்க்கு – இங்கு வல்லவ... ..அத்திலே ஸாபிப்ராயமாக வல்லவர்களுக்கு; ஏதம் ஒன்றில்லையே—பொல்லாங்கு என்னப் பட்டவை ஒன்றும் இல்லாதபடி போம். (2)

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1253. முதலாயிரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 963

ஆ. ன/5

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பெரியாழ்வார் முதலியோர்

ஆ. முதலாயிரம்

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுள் 946

3. தோற்றக் கூறுகள்

அ. 55 ஏடு; 110 பக்கம்.

ஆ. நீளம் 43 செ.மீ.; அகலம் 4.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 12 வரி.

உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது

ஊ. பல ஏடுகள் சிதிலம்; 12ஆம் ஏடு காணப்படவில்லை. 33 என்னும் ஏட்டெண் தவறுதலாக இருமுறை எழுதப்பட்டுள்ளது.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் |
யதீந்த்ர ப்ரணவம் வந்தே ரம்யகாமாதரம் முனிம் ||

லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாத யாமுந மத்யமாம் |
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ||

ஆ. முடிவு

அன்பன் தன்னை அடைந்தவர் கட்கெல்லாம்
அன்பன் தென்குரு கூர்நகர் நம்பிக்கு
அன்ப னாய்மது ரகவி சொன்னசொல்
நம்பு வார்பதி வைகுந்தம் காண்மினே. (11)

5. .................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1254. திருப்பாவை - உரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 964

ஆ. ன/6

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஆண்டாள்

ஆ. திருப்பாவை : ஸ்வாபதேசஉரை

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. உரைநடை.
அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்.

ஆ. நீளம் 41 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் 8 வரி.

உ. எழுத்து நிலை தெளிவாக உள்ளது.

ஊ. பல ஏடுகள் சிதைவு பழுதுற்ற சுவடி

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருப்பாவை முதலிட்டஞ்சு பாட்டாலும் ப்ரபந்ந நிஷ்டாக்ரமங்களையும் ப்ரபத்தி சாதகமாக திருநாம வைபவத்தையும் பேசுகிறது. மேல் பத்துப்பாட்டாலும் ப்ரபக்தவ்யனுடைய திருநாம சங்கீர்த்தனமே ப்ரபந்நனுக்குக் காலக்ஷேபமாகையாலே அந்த சங்கீர்த்தனத்துக்கு அதிகாரியானவர்களை எழுப்பிக் கூட்டிக் கொள்ளும்படி சொல்லுகிறது.

ஆ. முடிவு

செல்வத் திருமாலால் என்றும் பட்டர்பிரான் கோதை சொன்ன என்கையாலும் . . . . . . என்னுமிடஞ் சொல்லிற்று. இப்படி குரு பரம்பரா . . கமாகத் துய்க்கிற பீடக் கட்டாபறே திருப் . . . . . . (இதற்குமேல் ஏடுகள் இல்லை).

5. பிற செய்திகள்

உரையாசிரியரின் பெயர் அழகியமணவாள ஜீயர்.

6. ......... ............

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது.

## 1255. பெரிய திருமொழி

1. நூலகக் குறிப்புகள்

அ. 965

ஆ. ன/7

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருமங்கையாழ்வார்

ஆ. பெரியதிருமொழி

இ. திவ்வியப்பிரயந்தம்

ஈ. செய்யுள் 1134

## 3. தோற்றக் கூறுகள்

அ. 164 ஏடு; 328 பக்கம்.

ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 2'5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7,8 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. மிகச்சிதைவுற்ற நிலை,
1–4, 10, 15, 16, 44 ஆகிய ஏடுகள் காணப்பட
படவில்லை. 34. 35, 39, 40, 58, 59, 75, 138
ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

. . . . போமின் ஈங்கி ரேன்மின்
இருமி இளைத்தீர்உள்ளம்
கூசி யிட்டீர் என்று பேசும்
குவளையங் கண்ணியர்பால்
நாச மான பாசம் விட்டு
நன்னெறி நோக்கலுறில்
வாசம் மல்கு தண்து ழாயான்
வதரி வணங்குதுமே. (8)

ஆ. முடிவு

மின் பார் திருவடிவில் இந்திரன் ஒண்மிதி அலம் வற்பு நீர
வங்கம் பொன் பட்டு நெஞ்சு கல்லு முளை கல்லுயர்ந்த
கன்னு பொங்கு கார் முத்தார தேராளும் மை நெய்வளம்

உள்ளூர் இருகை மின் தேமருவு செங்காலம் தென்னிலங்கை அன்றாயர் மின்னுமா வய்யம்.

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1256. பெரிய திருமொழி

1. நூலகக் குறிப்புகள்

அ. 966

ஆ. ன/8

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. திருமங்கையாழ்வார்

ஆ. பெரியதிருமொழி

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுள் 1134

3. தோற்றக் கூறுகள்

அ. 120 ஏடு; 240 பக்கம்.

ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. தெளிவாக உள்ளது.

ஊ. 50ஏட்டிற்கு மேல் பலஏடுகள் சிதைவு, 104 – 107,117 ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன, சுமாரான நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வாழி பரகாலன் வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன் – வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்.

ஆ. முடிவு

தொடர் எண்: 965 காண்க.

## 1257 திருக்குறுந்தாண்டகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 967
ஆ. ன/9

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருமங்கையாழ்வார்
ஆ. திருக்குறுந்தாண்டகம்: வியாக்யானம்.
இ. திவ்வியப்பிரபந்தம்
ஈ. செய்யுளும் உரைநடையும், அச்சில் ஏறத்தாழ 15 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.
ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 4 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.
உ. தெளிவாக உள்ளது

ஊ. சுமாரான நிலை. ஆங்காங்குத் தொளைகள்.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நிதியினை இத்யாதி—கிழிச் சீரையோடே அனத்தைக் காட்டிக் கொடுப்பாரைப் போலே தன் ஸ்வரூப ரூப குண விபூதி களை திருமந்த்ர . . . . காட்டிக் கொடுக்கக் கண்டு தம்முடைய . . பெற்ற பேற்றின் குணத்தையும் ஆசங்கித்துத் தலைச்சீக்கிறார் பெரிய திருமொழியிலே.

ஆ. முடிவு

தமிழ் மாலை நால் ஐந்து இருபதும் அநந்யப்ரயோஜன ராய்க் கற்க வல்லவர்கள் தெளிவிசும்பு ஆன பரமபதத்தை ஆளப் பெறுவர். (20)

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1258. திருவாய்மொழி

1. நூலகக் குறிப்புகள்

அ. 968
ஆ. ன/10

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நம்மாழ்வார்

ஆ. திருவாய்மொழி

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுள் 1102

3. தோற்றக் கூறுகள்

அ. 92 ஏடு; 184 பக்கம்.

ஆ. நீளம் 41 செ மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. மிகக்கிறுக்கலான கையெழுத்து.

ஊ. மிகவும் சிதைவுற்ற நிலை, 8, 10, 12, 13. 33, 65, 98 ஆகிய ஏடுகள் இல்லை. 55, 72, 79, 94 ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன. 93ஆம் ஏட்டில் ஒன்றுமே எழுதப்படவில்லை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 990 காண்க.

ஆ. முடிவு

வந்தவர் எதிர்கொள்ள மாமணி மண்டபத்து
அந்தம்இல் பேரின்பத்து அடியரோடு இருந்தமை
கொந்தலர் பொழில்குரு கூர்ச்சட கோபன்சொல்
சந்தங்கள் ஆயிரத்து இவைவல்லார் முனிவரே. (11)

(இதற்குமேல் ஏடுகள் இல்லை).

## 1259. திருவாய்மொழி

1. நூலகக் குறிப்புகள்

அ. 969

ஆ. ன/11

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நம்மாழ்வார்
ஆ. திருவாய்மொழி
இ. திவ்வியப்பிரபந்தம்
ஈ. செய்யுள் 1102 பாடல்கள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 86 ஏடு; 172 பக்கம். (ஏட்டெண் 229 முதல் 329 முடிய)
ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 3.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.
உ. தெளிவாக உள்ளது
ஊ. மிகச்சிதைவுற்றநிலை
231, 240, 245, 246, 283, முதல் 286, 291, 296, 306, 316, 317, 319, 325, ஆக 15 ஏடுகள் இல்லை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வினையேன் வினைதீர் மருந்தானாய்
விண்ணோர் தலைவா கேசவா
மனைசேர் ஆயர் குலமுதலே
.. .. ..
.. ... மராமரங்கள்
ஏழும் எய்தாய் சீரீதரா
இனையாய் இனைய பெரியனாய்
என்று நைவன் அடியேனே. (6)

(இது முதல் பத்தின் 5 ஆம் பதிகம்)

ஆ. முடிவு

என்நெஞ்சத் துள்இருந்து இங்கு இருந்தமிழ் நூல் இவை
மொழிந்து
வன்நெஞ்சத்து இரணியனை மார்விடந்த வாட்டாற்றான்

மன்அஞ்சப் பாரதத்துப் பாண்டவர்க்காய்ப் படைதொட்டான்
நன்னெஞ்சே நம்பெருமான் நமக்கருள்தான் செய்வானே. (4)

(இது 10ஆம் பத்து 6ஆம் பதிகம். இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1260. திருவாய்மொழி

1. நூலகக் குறிப்புகள்

அ. 970

ஆ. ஞ/18

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நம்மாழ்வார்

ஆ. திருவாய் மொழி: ? ஆம் பத்து வியாக்கியானம்

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 180 ஏடு; 360 பக்கம்.

ஆ. நீளம் 42 செ. மீ; அகலம் 3.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி

உ. எழுத்து நிலை தெளிவாகஉள்ளது.

ஊ. பலஏடுகள்சிதைவு; 107ஆம் ஏடு முறிந்துள்ளது.
சுமாரான நிலை.

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அமர்ந்து புகுந்தேனே என்று தம்மால் அன அளவும் புகாநின்றார். அனந்தரத்தில் அவனைப் புகிர நிற்கக் கண்டு இவர் இனிக் கைவிடப் பார்த்தான் ஆகாதே என விழுந்து கிடந்து கூப்பிடுகிறார்.

ஆ. முடிவு

கைங்கர்யம் பண்ணும்போது எடுத்துக் கைநீட்டுகை யிறே சரமஸ்லோகம் ரக்ஷித்துக்கொண்டவளவு போலே இருக்கு மளவுகளிலே என்றபடி. வைகலும் பூசித்து . . . . கடல் தீண்ட லாகாது என்றாப்போலே அதுக்கொரு நியதியில்லை என்கை. வைகல் காலம்—ஒழிவில்காலம் எல்லாம் உடனாய்மன்னி என்று தத்விஷயத்தில் இவர் ப்ரார்த்தித்தத்தை இது கற்றதீய விஷயத்திலே நித்யசூரிகள் அடிமை செய்வர்கள்.

## 1261. திருவாய்மொழி

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 971

ஆ. ள/13

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நம்மாழ்வார்

ஆ. திருவாய்மொழி: ஜீயர் அரும்பதம்

இ. திவ்யப்பிரந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்
அச்சில் ஏறத்தாழ 75 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 76 ஏடு; 152 பக்கம்.

ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8,9 வரி.

உ. தெளிவாக உள்ளது

ஊ. சில ஏடுகள் சிதைவு; சுமாரான நிலை,

ஏ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கீழ் அஞ்சு திருவாய்மொழியிலும் ப்ரதிபாதிக்கப்பட்ட குணங்களை அநுபாஷியா நின்று கொண்டு இத்திருவாய்மொழியிலே ப்ரதிபாத்யம் ஸ்வாராயதையென்னுமத்தை ஸங்காபரிஹார ரூபேண அருளார்.

(இது முதல் திருவாய்மொழியின் ஆறாம் பத்தின் தொடக்கம்,)

ஆ. முடிவு

உயர்வற உயர்நலம் இத்யாதி . . மாந கைங்கர்ய ப்ரதிஸம் . . . .
விசேஷணாநாம் கைங்கர்ய விஷ்யா . . . . . . பஜநீய . . . .

(இதற்குமேல் எழுதப்படவே இல்லை. இது முதல் திருவாய்மொழியின் 10 ஆம் பத்து இறுதிப் பகுதி )

## 1262. திருவாய்மொழி

1. நூலகக் குறிப்புகள்

அ. 972
ஆ. ன/14

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நம்மாழ்வார்
ஆ. திருவாய்மொழி: ஜீயர்அரும்பதம்
இ. திவ்வியப்பிரபந்தம்
ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 125 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 129 ஏடு; 258 பக்கம்.
ஆ. நீளம் 42 செ.மீ.; அகலம் 3'5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி

உ. சற்றுக் சிறுக்கலான கையெழுத்து

ஊ. சுமாரான நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ தொடக்கம்

நாளேலறியேன் எனக்குஉள்ளன என்றார் மரணமானா லென்னறுதியிட்டுக் கொடுத்தான் ஈஸ்வரன். அவன் செய்கிறோ மென்று தலை துளக்கினால் அதுபெற்று தாய்மேல் நடக்கலாம் படியாயிருக்குமிறே காரியம். ஆகையாலே போக்கிலே ஒருப் பட்டுப் போமிடத்தில் முகம் பழகின தேகத்தையும்விட்டு நெடு நாள் வாளனை பண்ணின,

இது 10 ஆம் திருவாய்மொழியின் முதல்பத்தின் தொடக்கம்.

ஆ. முடிவு

ஸர்வேஸ்வரன் அருள்நின்று அது அடியாகப்பிறந்த ...... .. திகளிறே இவருது. அறிந்தார் பிறந்தார் உயர்ந்தே—இத்தை அறிந்தவர்கள் ஸம்ஸாரத்திலே பிறந்து வைத்தே நித்ய சூரி களோடொப்பர். பிறந்தே உயர்ந்தார்—ஸர்வேஸ்வரனுடைய அவதாரத்தோர்பாதி இவர்களுடைய பிறப்பும். ஆழ்வார் திரு வடிகளே சரணம்.

(இது 10ஆம் திருவாய்மொழியின் சற்றுப்பதிகத்தின் முடிவு)

## 1263. இயற்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 973

ஆ. ன/15

சு. வி. 23

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. பொய்கையாழ்வார் முதலியோர்

ஆ. இயற்பா

இ. திவ்வியப் பிரபந்தம்

ஈ. செய்யுள் 740

3. தோற்றக் கூறுகள்

அ. 93 ஏடு; 186 பக்கம்.

ஆ. நீளம் 45 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. தெளிவாக உள்ளது

ஊ. சுமாரான நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு — வையத்து
அடியவர்கள் வாழ அருந்தமிழ்நூற் றந்தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து.

(மூன்றாம் அடி நான்காம் அடிகளுக்கிடையே வெண்டளை தட்டுகிறது.)

ஆ. முடிவு

அங்கயல் பாய்வயல் தென்அரங் கன்அணி ஆகம்மன்னும்
பங்கய மாமலர்ப் பாவையைப் போற்றுதும் பத்தியெல்லாம்
தங்கிய தென்னத் தழைத்துநெஞ் சேநம் தலைமிசையே
பொங்கிய கீர்த்தி இராமா நுசன்அடிப் பூமன்னவே. (108)

## 1264. இயற்பா

1. நூலகக் குறிப்புகள்

அ 974

ஆ ன/16

2 உள்ளீடு: நூல் விவரம்

அ பொய்கையாழ்வார் முதலியோர்

ஆ. இயற்பா

இ. திவ்வியப் பிரபந்தம்

ஈ. செய்யுள் 740

3. தோற்றக் கூறுகள்

அ. 86 ஏடு; 172 பக்கம்.

ஆ. நீளம் 36 செ.மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8 வரி.

உ. தெளிவாக உள்ளது.

ஊ. மிகச் சிதிலமான நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்; 973 காண்க.

ஆ முடிவு

கருத்தில் புகுந்துஉள்ளில் கள்ளம் கழற்றிக் கருதரிய
வருத்தத்தி னால்மிக வஞ்சித்து நீஇந்த மண்ணகத்தே
திருத்தித் திருமகள் கேள்வனுக்கு ஆக்கிய பின்நெஞ்சில்
பொருத்தப் படாதுஎம் இராமா னுசாமற்றோர்
பொய்ப்பொருளே. (78)

(இது இராமநுச நூற்றந்தாதிச் செய்யுள். மூன்றாம் அடியில் ஓர் எழுத்து குறைகிறது. இதற்குமேல் ஏடுகள் காணப் படவில்லை.)

## 1265. இராமாநுச நூற்றந்தாதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 975
ஆ. ன/17

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருவரங்கத்து அமுதனார்
ஆ. இராமாநுச நூற்றந்தாதி
இ. திவ்வியப்பிரபந்தம்
ஈ. செய்யுள் 108

3. தோற்றக் கூறுகள்

அ. 14 ஏடு; 28 பக்கம்.
ஆ. நீளம் 40 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. தெளிவாக உள்ளது
ஊ. பல ஏடுகள் சிதைவு. பழுதுற்ற சுவடி.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

முன்னை வினைஅகல மூங்கில் குடிஅமுதன்
பொன்னங் கழற்கமலப் போதுஇரண்டும் — என்னுடைய

சென்னிக்கு அணியாகச் சேர்த்தினேன் தென்புலத்தார்க்கு
என்னுக்கு அடவுடையேன் யான்.

ஆ. முடிவு

தொடர் எண்: 973 காண்க.

## 1266. இராமாநுச நூற்றந்தாதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 976

ஆ. ன/81

2 உள்ளீடு: நூல் விவரம்

அ. திருவரங்கத்து அமுதனார்

ஆ. இராமநுச நூற்றந்தாதி—வியாக்கியானம்

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 75 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 58 ஏடு; 116 பக்கம்.

ஆ. நீளம் 34 செ.மீ.; அகலம் 4·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு பலவித வரி.

உ. சற்றுக் கிறுக்கலான கையெழுத்து

ஊ. பல ஏடுகளில் தொளைகள். பல ஏடுகள்
முறிந்துள்ளன. பழுதுற்ற நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஸகல ஸாஸ்த்ர ஸங்க்ரஹமான திருமந்த்ரத்தினுடைய தாத்பர்யமாய் பகவதா . . . . . . . பரம காருணீகராம் நம்மாழ் வாருடைய . . . . . . . . ஸ்ரீமதுர கவிகளுடைய உக்தாநுஷ்டானங் களாலே ப்ரகடிதமாய் ஆழ்வார் தம் . . . . அருள்செய்யப்பட்ட தாய் அவர்தம் திருவடிகளை . . . . . .

ஆ. முடிவு

தத் அதிகாராநுகுணமாக அபேக்ஷித்த ஸம்பத் விசேஷங் களை ஸ்வகடாக்ஷ விஸேஷங்களாலே உண்டாக்கி அருளும்பெரிய பிராட்டியார் என்றும் ப்ராப்யம் தான் ஆசார்ய சரணார விந்தங் களை . . . . . . நித்யமென்கிறபடியே யா வ . . . . மற்றிருக்கை என்றும் இதுக்கு அதிகாரிகளும் இந்த ப்ராப்யத்தில் . . . . உடைய வர்கள் என்றும் சொல்லிற்றாயிற்று.

இ. பிற்குறிப்பு

ஜய வைகாசி 14 ஞாயிற்றுக்கிழமை த்ருதியை மூலம் கூடிய சுபதினத்தில் திருவரங்கம் திருப்பதியில் ஸ்வாமி பெரிய வாச்சான் பிள்ளை கிருபையினாலே இராமாநுஜ நூற்றந்தாதி உரை மூந்தி ராமஸ்வாமி ராமாநுஜ தாசனால் ஏறியருளித் தலைக் கட்டிற்று.

# 1267. திருமந்திரார்த்தம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 977

ஆ. டீ/194

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பிள்ளை லோகாசாரியர்

ஆ. திருமந்திரார்த்தம் : அரும்பதம்

இ. தத்துவம்

ஈ. உரைநடை; அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 108 ஏடு; 216 பக்கம்.

ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சிதைவுற்ற நிலை. 67, 68 ஆகிய ஏடுகள் முறிவு. 56, 57, 80 ஆகிய ஏடுகள் இல்லை.

எ. குறை

4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

ஹரி....லோகாந்....வரவரவுமுநி....இத்யாதியிற் சொல்லுகிறபடியே......நியோகத்தாலே ஸகல ஜகத் உஜ்ஜீவனார்த்தமாக திருவவதரித்தருளின திருவநந்தாழ்வானுடைய வவதார விஸேஷமான அழகிய மணவாள மாமுனிகள் தம் பரம க்ருபையாலே பிள்ளை லோகாசார்யர் ஸம்சார சேதனர்க்கு தத்வ ஞானம் பிறந்து அவர்கள் உஜ்ஜீவிக்கைக்கு உடலாக அருளிச் செய்த முமுக்ஷுப்படி என்கிற......

ஆ. முடிவு

த்வயத்துக்கு ஸங்க்ரஹேண ப்ரதி பதமர்த்தம் அருளிச் செய்யா நின்று கொண்டு இப்பிரகரணார்த்தத்தை நிகமித்தருளுகிறார். ஆகவி....சொன்னவெல்லா....மென்றபடி. ஆக இரண்டாம் ப்ரகரணம் அருளிச் செய்தாராய்த்து.

## 1268. முமுட்சுப்படி

1. நூலகக் குறிப்புகள்

அ. 978

ஆ. டி/195

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பிள்ளைலோகா சாரியார்

ஆ. முமுட்சுப்படி : அரும்பதம்

இ. தத்துவம்

ஈ. உரைநடை;அச்சில் ஏறத்தாழ 60 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு; 86 பக்கம்.

ஆ. நீளம் 33 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி.

உ. மிகக் கிறுக்கலான கையெழுத்து

ஊ. பல ஏடுகள் மிகச் சிதிலம். 31, 32 ஆம் ஏடுகள் காணப் படவில்லை. மிகவும் பழுதுற்ற நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

த்வய விவரணமான இரண்டாம் ப்ரகரணத்துக்கு வ்யாக்யானம் அருளிச்செய்த வநந்தரம் சரமஸ்லோகத்துக்கு வ்யாக்யானம் அருளிச் செய்வதாக உபக்ரமிக்கிறார்.

ஆ. முடிவு

வாக்யாம்சத்தில் சிலது கிடையாமையாகிற...... மில்லாமையாலே விரோதி நிக்ரத்தியையும்......மில்லாமை யாகிற........காட்டுகிறது. திருமந்த்ரத்துக்கு அரும்பதம் ஸம்பூரணம்.

## 1269. நான்மணிக்கடிகை

1. நூலகக் குறிப்புகள்

அ. 979

ஆ. ந/15

## 2. உள்ளீடு; நூல் விவரம்

அ. விளம்பிநாகனார்

ஆ. நான்மணிக்கடிகை: மூலமும் உரையும்

இ. பதினெண்கீழ்க்கணக்கு

ஈ. செய்யுள் 101
அச்சில் ஏறத்தாழ 60 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு; 32 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மதிமன்னு மாயவன் வாள்முகம் ஒக்கும்
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கர மொக்கும்
முதுநீர்ப் பழனத்துத் தாம்ரைத் தாளின்
எதிர்மலர் மற்றவன் கண்ஒக்கும் பூவைப்
புதுமல ரொக்கும் நிறம்.

ஆ. முடிவு

குளஞ் சிறிதாயின் நீர் ஊறும், பேர் மனையிற் புகுதும், வருவாய் சிறிதாயின் மனையாடன் கொழுநனை மதியாது மேற்கொள்ளும், முன்னாட் செய்த தவஞ் சிறிதாயிற் தீவினை வந்து மேற்கொள்ளும், ஒரு வலிசிறிதாயிற் பகை வந்து அடர்க்கும் என்றவாறு. (101)

விளம்பிநாகனார் செய்த நான்மணிக்கடிகை முற்றும்.

5. ...... . ......

6 ...............

## 7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது

## 1270. திரிகடுகம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 980

ஆ. ஙு/16

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நல்லாதனார்

ஆ. திரிகடுகம்; மூலமும் உரையும்

இ. பதினெண் கீழ்க்கணக்கு

ஈ. செய்யுளும், உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 60 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு; 32 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கண்ணகன் ஞால மளந்ததூஉங் காமருசீர்த்
தண்ணறும் பூங்குருந்தஞ் சாய்த்ததூஉம் — நண்ணிய
மாயச்சகட முதைத்ததூஉ மிம்மூன்றும்
பூவைப்பூ வண்ண னடி,

ஆ. முடிவு

இரப்பவர்க்குக் கரப்பவர் முகம்போல ஒளிமழுங்கிப் பகற்பொழுது தோன்றும்; அதுவன்றி இரப்பவர்கட்கு நாடோறும் அறிவு தேயுமாறு போலவும் பரபக்கத்திற் தேயும்; அதுவன்றி

இரப்பவர்க்கு மனமுவந்து கொடுக்கும் வள்ளியோரைப் போலவும் ஒளி விளங்கும். இம்மூன்று குணமும் மொழியாதே திங்கட்க்கடவுட் குள்ள தென்றவாறு. (102)

செல்வச் சிறுதுழாய்ச் செம்மல் செருவடுதோள்
நல்லாத னென்னும் பெயரானே — பல்லார்
பரிவொடு நோய்நீங்கப் பன்னியா ராய்ந்து
திரிகடுகஞ் செய்த மகன். (103)

திரிகடுகம் முற்றும்.

5. .............
6. .............
7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது

## 1271. ஆசாரக் கோவை

1. நூலகக் குறிப்புகள்

அ. 981
ஆ. ங/17

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. முள்ளியார்
ஆ. ஆசாரக்கோவை: மூலமும் உரையும்
இ. பதினெண் கீழ்க்கணக்கு
ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 40 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.
ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆரெயின் மூன்று மழித்தா னடியேத்தி
யாரிடத்துத் தானறிந்த மாத்திரை — யாசார
மாரு மறிதவற்கு மாக மற்றவற்றை
யாசாரக் கோவையெனத் தொகுத்தான் தீராத்
திருவாயிலாய் திறலவண் கைத்தூர்ப்
பெருவாயின் முள்ளியென்பான்.

ஆ. முடிவு

அறியாத தேசத்தா னாதுலன் மூத்தான்
இளையா னுயிரிழந்தா னஞ்சினா னுண்பான்
அரசாதித் திருத்தொழில் வைத்தான் மணாளனென
ஒன்பதின்மர் கண்டீ ருரைக்குங்கால் மெய்யான
ஆசாரம் வீடு பெற்றார். (101)
ஆசாரக்கோவை எழுதி முற்றிற்று.
முள்ளியார் பாடிய நூலென் றறிக.

5. ............

6. ..............

7. வெளியிட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது

## 1272. இன்னாநாற்பது

1. நூலகக் குறிப்புகள்

அ. 982

ஆ. ங/18

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. கபிலர்

ஆ. இன்னாநாற்பது; மூலமும் உரையும்

இ. பதினெண் கீழ்க்கணக்கு;

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்,

## 3. தோற்றக் கூறுகள்

அ. ஏடு; 11 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8, 9 வரி

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை,

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னா
பொற்பனை வெள்ளையை யுள்ளா தொழிவின்னா
சக்கரத் தானை மறப்பின்னா தாங்கின்னா
சத்தியான் றாடொழா தார்க்கு.

(எது.) முக்கண்ணினையுடைய பகவனடி தொழாதார்க் கின்னாவாம் பொற்பனைக் கொடியையுடைய வெள்ளியோனை நினையாது ஒழுகுதலின்னாவாம். சக்கரப் படையையுடை யானை மறப்புக்கள் இன்னாவாம். அவைபோல வின்னாவாம் வேற்படையையுடைய முருகன் தாள் தொழாதார்க்கு என்றவாறு. (1)

ஆ. முடிவு

ஐம்பொறிகளை அடக்கி யொருவன் சொல்லும் வலி இன்னா. துணிந்து தொடங்கி ஒன்றைச் செய்ய மாட்டாதான் தன்னை மதித்தல் இன்னா. ஒருவன் அடைக்கலம் வைத்த

பொருளைக் கொடாதொழிதல் இன்னா. இவைபோல இன்னா கற்பித்த கற்பனை கொள்ளாதார்க்குச் சொல்லுஞ் சொல் என்றவாறு. (41)

கபிலராற் செய்யப்பட்ட இன்னா நாற்பது முற்றும்.

5. ..........

6. ..........

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது

## 1273. இனியவை நாற்பது

1. நூலகக் குறிப்புகள்

அ. 983
ஆ. ரு/19

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பூதஞ்சேந்தனார்
ஆ. இனியவை நாற்பது : மூலமும் உரையும்.
இ. பதினெண்கீழ்க்கணக்கு
ஈ. செய்யுளும் உரை நடையும்;
அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.
ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. நல்ல நிலை.
ஏ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கண்மூன் றுடையான்தாள் சேர்தல் கடிதினிதே
தொன்மாண் டுழாய்மாலை யானைத் தொழலினிதே
முந்துறப் பேணி முகநான் குடையானைச்
சென்றமர்ந் தேத்த லினிது.

ஆ. முடிவு

தானிருக்கும் இறை யிருப்பதன்றிப் பத்து மடங்கிருத்தும் அந்த ஊரின் கண் இருந்து வாழ்தல் இனிது. விளைவிற்குக் காரணமாகிய காரணங்களைச் சிதைத்துண்ணாத விழுப்பமிக இனிது. பலபல நாளும் நன்மையை யுடைய நூல்களைப் பழுது படாமே கற்றலின் மிக இனியதில்லை என்றவாறு. (41)

மதுரைத் தமிழாசிரியனார் மகனார் பூதஞ்சேந்தனார் செய்த இனியவை நாற்பது முற்றும்.

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1274. கார் நாற்பது

1. நூலகக் குறிப்புகள்

அ. 984

ஆ. ங/20

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. கண்ணங் கூத்தனார்

ஆ. கார்நாற்பது : மூலமும் உரையும்

இ. பதினெண்கீழ்க்கணக்கு

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 13 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பொருகடல் வண்ணன் புனைமார்பிற் றார்போற்
திருவில் விலங்கூன்றித் தீப்பெயல் தாழ
வருது மெனமொழிந்தார் வாரார்கொல் வானங்
கருவிருந் தாலி யுகும்.

ஆ. முடிவு

பருவங் காட்டித் தலைமகளைத் தோழி வற்புறுத்தியது: அவர் செய்த குறிகள் வந்தன அவர் வருகிலரென்று நொந்த ஒருத்தியாகிய நினக்கு நோய் தீர்க்கும் மருந்தாகிய ஈந்தின் கனியின் நிறம் போலக் கருநிறத்தைக் கொண்ட தெழில்வான மெல்லிய பேதாய் நின்னுடைய நுதலின் ஒளி பெற்று ஈந்து மென்றவாறு. ஈந்தென்பதனை இந்தென்று குறுக்கியது. (40)

மதுரைக் கண்ணங் கூத்தனார் செய்த கார்நாற்பது முடிந்தது முற்றும்.

5. ..................

6. ..................

8. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

# 1275. களவழிநாற்பது

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 985
ஆ. ஙு/21

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பொய்கையார்
ஆ. களவழிநாற்பது: மூலமும் உரையும்
இ. பதினெண்கீழ்க் கணக்கு
ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 25 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.
ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி
உ. சுமாரான எழுத்து
ஊ. நல்ல நிலை
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நாண்ஞாயிற் றுற்ற செருவிற்கு வீழ்ந்தவர்
வாண்மாய் குருதி களிறுழக்கத் தாண்மாய்ந்து
முன்பக லெல்லாங் குழம்பாக்கிப் பின்பகல்
துப்புத் துகளிற் கெழூஉம் புனனாடன்
தப்பியா ரட்ட களத்து.

சு. வி. 24

ஆ. முடிவு

வேன் மார்பின் கணமுந்த வீரரானேறுண்டு காற ளர்ந்து வீழ்ந்து செவிகளைச் சாய்த்து மாநிலங்கூறு மறைகேட் பன போன்றன. பாடாரிடிமுரசிற் பாய் புனனீர் நாடன் கூடாரையட்ட களத்தின்கணென்றவாறு. (41)

சோழன் செங்கணானும் சேரமான் கணைக்காலிரும் பொறையுந் திருப்போர்ப் புறத்துப் பொருதுடைந்துழிச் சேரமான் கணைக்காலிரும் பொறையைப் பற்றிக்கொண்டு சோழன் செங்கணான் சிறை வைத்துழிப் பொய்கையார் களம்பாடி வீடுகொண்ட களவழி நாற்பது முடிந்து முற்றும்.

5. ......................

6. ......................

7. வெளியீட்டுச் செய்திகள்

அச்சிடப்பட்டுள்ளது

## 1276. வாக்குண்டாம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 986

ஆ. ள/12

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஒளவையார்

ஆ. வாக்குண்டாம்

இ. நீதிநூல்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு; 32 பக்கம்.

ஆ. நீளம் 47 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்துக்கு 4,5 வரி.

உ. பெரிய கையெழுத்து

ஊ. ஓரளவு சிதைவு

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டா மேனி நொடுங்காது — பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையுன் பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு.

ஆ. முடிவு

முப்பாதாம் ஆண்டளவில் மூன்றற் றொருபொருளைத்
தப்பாமற் தன்கைப் படானாகில் — செப்புங்
கலையளவே யாகுமாங் காரிழையார் தங்கள்
முலையளவே யாகுமாம் மூப்பு.

முற்றிற்று.

இ. முற்குறிப்பு

சௌமிய வருஷம் ஆனி மாதம் 24 ஆம் தேதி.

5. ..................

6. ..................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது

## 1277. கல்லாடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 987

ஆ. ய/53

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. கல்லாடனார்

ஆ. கல்லாடம்

இ. சிற்றிலக்கியம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 52 ஏடு; 104 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திங்கண்முடி பொறுந்த பொன்மலை யருவி
கருமணி கொழித்த தோற்றம் போல
விருகவிழ் கவிழ்த்த மதநதியு வட்டின்
வண்டினம் புரளும் வயங்குபுகர் முகத்த
செங்கதிர்த் திரளெழு கருங்கடல் போல
.. .. .. ..
.. .. .. ..
மென்மனத் தெழுந்த புன்மொழித் தொடையு
மருள்மொழி கடைக்கண் டாக்கித்
தெருளுற வையமு டிப்பவின் றெனவே. (1)

ஆ. முடிவு

வனப்புடை யனிச்சம் புகைமூட் டியதென
.. .. .. ..
கறையடி சென்னி தூக்கி நின்றன
தாட்டும் நடுமரை யதன்மெய் குரம்பையின்

மற்ற தன்றோலி லுற்றிடு வீருங்
கண்படுத் திரவி கீறுமு
னெண்பட ரும்பதிக் கேகுவ கடனே. (102)

## 1278. பெரிய திருமொழி

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 988

ஆ. ஊ19

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. திருமங்கையாழ்வார்

ஆ. பெரியதிருமொழி

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 113 ஏடு; 225 பக்கம்.

ஆ. நீளம் 40 செ.மீ.; அகலம் 4 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9,10 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. பொதுவாக நல்ல நிலை

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி யிளையவர் தம்மோ
டவர்தரும் கலவியே கருதி

ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதந் தெரிந்து
நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம். (1)

ஆ. முடிவு

மின்னுமா மழைதவழும் மேக வண்ணா
விண்ணவர்தம் பெருமானே அருளாய் என்று
அன்னமாய் முனிவரோ டமர ரேத்த
அருமறையை வெளிப்படுத்த அம்மான் றன்னை
மன்னுமா மணிமாட மங்கை வேந்தன்
மானவேல் பரகாலன் கலியன் சொன்ன
பன்னியநூல் தமிழ்மாலை வல்லார் தொல்லைப்
பழவினையை முதலரிய வல்லார் தாமே.

மின் பார் திருவடிவில், இந்திரற்கும் ஒண்மிதி அலம், வற்பு நீரகம் வங்கம், பொன் பட்டு நெஞ்சு, கல் முளை கல்லு யர்ந்த, கன்று பொங்கு கார், முற்று தேராளும்மை, நைவளம் உள்ளூரும் இருகை, மின் தேமருவு செங்கால, தென்னிலங்கை அன்றாயர் மின்னுமா வையம்.

5. ......................

6. ......................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது.

## 1279. திருப்பாவை

1. நூலகக் குறிப்புகள்

அ. 989

ஆ. ன/20

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஆண்டாள்

ஆ. திருப்பாவை

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுள் 32

## 3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம்.

ஆ. நீளம் 47 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4,5,6 வரி.

உ. பெரிய கையெழுத்து

ஊ. சிதைவுற்ற நிலை

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

('அன்ன வயற் புதுவை', 'சூடிக் கொடுத்த சுடர்க் கொடியே' எனத் தொடங்கும் இரண்டு தனியன்களைத் தொடர்ந்து முதற் பாசுரம் தொடங்குகிறது.)

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்
கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாரா யணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய். (1)

ஆ. முடிவு

வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனை
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட வாற்றை அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன

சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள்பெற் றின்றுபுவ ரெம்பாவாய். (30)

5. .....................

6. .....................

7. வெளியீட்டுச் செய்திகள்
அச்சிடப்பட்டுள்ளது

## 1280. திருவாய்மொழி

1. நூலகக் குறிப்புகள்

அ. 990
ஆ. ன/21

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நம்மாழ்வார்
ஆ. திருவாய்மொழி
இ. திவ்வியப்பிரபந்தம்
ஈ. செய்யுள் (7ஆம் பத்து 4 முடிய)
(2082 முதல் 2787 வரை)

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்
ஆ. நீளம் 47 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒருபக்கத்திற்கு 7, 8 வரி.
உ. பெரிய கைஎழுத்து.
ஊ. சிதைவுற்றநிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

உயர்வற உயர்நலம் உடையவன் எவன்அவன்
மயர்வற மதிநலம் அருளினன் எவன்அவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி எவன்அவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே. (1)

ஆ. முடிவு

குன்ற மெடுத்த பிரானடி யாரொடும்
ஒன்றிநின் றசட கோப னுரைசெயல்
நன்றி புனைந்தஓ ராயிரத் துள்ளிவை
வென்றி தரும்பத்தும் மேவிக்கற் பார்க்கே. (11)

## 1281. திருவாய்மொழி நூற்றந்தாதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 991

ஆ. ன/23

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. மணவாள மாமுனிகள்

ஆ. திருவாய்மொழி நூற்றந்தாதி

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுள் 100

3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு; 24 பக்கம்.

ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு 6 வரி

உ. சுமாரான எழுத்து

ஊ. சிதைவுற்ற நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

('அல்லும் பகலும்', 'மன்னு புகழ் சேர்' எனத் தொடங்கும் இரண்டு தனியன்களையெடுத்து முதற் பாசுரம் தொடங்குகிறது.)

உயர்வே பரன்படியை உள்ளதெல்லாம் தான்கண்டு
உயர்வேதம் நேர்கொண் டுரைத்து — மயர்வேதும்
வாராமல் மானிடரை வாழ்விக்கும் மாறன்சொல்
வேராக வேவிளையும் நாடு. (1)

ஆ. முடிவு

முனிமாறன் முன்புஉரைசெய் முற்றின்பம் நீங்கித்
தனியாகி நின்று தளர்ந்து — நனியாம்
பரமபத்தி யால்நைந்து பங்கயத்தாள் கோனை
ஒருமையுற்றுச் சேர்ந்தான் உயர்ந்து. (100)

## 1282. திருமங்கையாழ்வார் தாலாட்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 991-2

ஆ. ய/22

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. . . . . . . . . . . . .

ஆ. திருமங்கையாழ்வார் தாலாட்டு

இ. சிற்றிலக்கியம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 10 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம்
ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது
ஈ. ஒருபக்கத்திற்கு 6 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. சிதைவுற்ற நிலை.
எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

*மாமோக மாகத் திருமங்கை யாழ்வாரைத் தாலாட்டத்*
*தாமோ தரனே சதிராக முன்னடைவாய்.*

*கருத்து : பிரமாதியாகக் கரியமாலைப் போற்றித் திருப் பதத்தைத் தாவெனவே சென்று வளந்தா தாரித்து அருள் பெறு சீராலிமங்கை ஆழ்வாரைச் சொன்னார். (1)*

ஆ. முடிவு

*கரும மல்ல. கப்பலிலிருந்தொருகவடொன்று குறித்தார். ஒப்பினாரார். அவன் கையில் சீட்டொன்று பறித்தார்; தப்பரை சொல்லி மறித்தார். பார்க்கெல்லாம் தமக்குப் பாதியாயிப் பிரித்தார். தப்பரை சொல்லிப் பாக்கை தமக்குப் பிரித்ததுஞ் செப்படி வித்தக் கள்ளத் திருமங்கையாழ்வார், கருமமல்ல. உளவதாக வந்து உத்தமனை யெடுத்தார் வளம தாயுழுத சேற்றினில் மடுத்தார் களவு கண்டபடியெடுத்தார். கைவிரல் தனைக் கொடுத்தார். களவு கண்டவர்க்கப்போ கைவிரல் கொடுப்பது மளவுட்ப்போமே. சூது ஆலி நாடர் மீதில்....*

# 1283. நம்மாழ்வார் தாலாட்டு

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 991-3
ஆ. ஊ/22

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .
ஆ. நம்மாழ்வார் தாலாட்டு
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 24 ஏடு; 48 பக்கம்.
ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி
உ. சுமாரான எழுத்து
ஊ. சிதைவுற்ற நிலை
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மீதூருங் கொண்டல்தவழ் மென்சோலை சூழ்குருகை
தாதூர வகுத்த தடம்புயனைத் தாராட்ட
வாதூரி பரசமய வாதியரை வென்றமுக்கோல்
பூதுரெதிராசன் பொன்னடிகள் காப்பாமே
புள்ளுக் கரசனிரு பொன்னடிகள் காப்பாமே. (1)

ஆ. முடிவு

அன்னத்த பூம்பொடு நீருடு நிழல்கண்டதுவுமொருபே
டன்னவே அஞ்சிறைய சேவலொடுருஞ் செழுந்தகட்
டம்புய ரசனைக் கடவுளும் கன்னற் கொழுஞ்சாப
வேளுக்கை மாறான் கங்காதரக் கடவுளுங் கண்ணாயிரக்
கடவுள் முதலான தேவருங் கடலுலகு மில்லாதநாள்
பொன்னைப் புணர்ந்தெழுமையைப் படைத்தானை
பொலிந்து
நின்றருளு மாலை புண்டரீகக்கரத்தாழி சங்குள்ள
தொடர்புட
கொடியுயர்த்த கோவையு.. .. .. ..

(இதற்குப் பின்னாலுள்ள சில ஏடுகளில் சில பாடல்கள் இரந்த எழுத்துக்களுடன் கலந்துள்ளன.)

## 1284. ஞானசாரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 992
ஆ. ட/196

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ........
ஆ. ஞானசாரம் (வைணவம்
இ. தத்துவம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.
ஆ. நீளம் 40·5 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.
உ. பெரிய கையெழுத்து.
ஊ. சிதைவுற்ற நிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சுருளார் கருங்குழற் றோகையர்வேல் விழியிற்றுவளும்
மருளா வினைகெடும் மார்க்கம்பெற்றேன் மறைநான்குஞ் சொன்ன
பொருள்ஞான சாரத்தை புந்தியிற்....பொங்கொளி
சொருளாம் மாமுனிவன் பொற்கழ லடைந்த பின்னே.

ஆ. முடிவு

நாமார் திருமுன்பே நம்குறைகள் சொல்லுகைக்கு
நாமோ நமக்குரியோம் நன்னெஞ்சே — பூமேவு
வண்டமருஞ் சோலை மதிளரங்கர் செய்யுமற்றைத்
தண்டிருப்ப தன்றோ கடன்.

## 1285. திருவாய்மொழி

1. நூலகக் குறிப்புகள்

அ. 993

ஆ. ள/23

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நம்மாழ்வார்

ஆ. திருவாய்மொழி

இ. திவ்வியப் பிரபந்தம்

ஈ. செய்யுள் 981

3. தோற்றக் கூறுகள்

அ. 108 ஏடு; 216 பக்கம்.

ஆ. நீளம் 43 செ. மீ.; அகலம் 4 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7, 8 வரி.

உ. பெரிய கையெழுத்து

ஊ. சுமாரான நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 990 காண்க.

ஆ. முடிவு

பாடுசா ராவினை பற்றற வேண்டுவீர்
மாடம் நீடுகுரு கூர்ச்சட கோபன்சொல்
பாட லானதமிழ் ஆயிரத்து ளிப்பத்தும்
பாடியாடிப் பணிமின் அவன் தாள்களே, (11)

## 1286. கலியன் அருள்பாடு

1. நூலகக் குறிப்புகள்

அ. 994

ஆ. ற/60

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ...........

ஆ. கலியன் அருள்பாடு

இ. பல்வகை நூல்கள்

ஈ. உரைநடை; அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 12 ஏடு; 24 பக்கம்

ஆ. நீளம் 35 செ மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி

உ. கையெழுத்து தெளிவாக உள்ளது.

ஊ. சுவடி வலப்புறத்தில் முறிந்துள்ளது.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஸ்ரீமத் க்ருஷ்ண ஸமா—ய நமோ யா க ந ஸ¬நவே |
யத் கடாக்ஷண லக்ஷ்யாண . . . . . . . . . . . . ||

ஸ்ரீய:பதி . . . . . . குணா நிகேதனனான ஸர்வேஸ்வரன் சகல ஆத்மாக்களோடு தனக்குண்டான ஸம்பந்தமொத்திருக்க . .

ஆ. முடிவு

என்னு . . . . ருமானார் அருளிச் செய்தபடியே இதர மத நிரஸந ப்ர—கமாக உபய வேதாந்தங்களையும் . . . . . . நம்

செய்து கொண்டு ஆழ்வார்கள் அருளிச் செயலான திவ்யப்ர பந்தங்களையும் ப்ரவசனம் பண்ணிக் கொண்டு தத்தத் அதிகார அநுகுணமாக......,தோபதேசங்களையும் செய்து கொண்டு எம்பெருமானார் தர்ஸனத்தை....க்கொண்டு வாழ்ந்தார்கள் என்று ஜீயர் அருளிச் செய்யக் கேட்டிருக்கையா யிருக்குமென்று பிள்ளை யருளிச் செய்வர்,

5. பிற செய்திகள்

இச்சுவடியில் உள்ள வடமொழிப் பகுதிகள் யாவும் கிரந்த லிபியில் உள்ளன.

இந்நூலை அடுத்து இரண்டு ஏடுகளில் வைணவத் தனியன்களை இயற்றிய ஆசிரியர்களின் பெயர்ப்பட்டியல் இடம் பெற்றுள்ளது,

## 1287, இயற்பா

1, நூலகக் குறிப்புகள்

அ. 995

ஆ, ன/24

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பேயாழ்வார்

ஆ இயற்பா : மூன்றாம் திருவந்தாதி : வியாக்கியானம்.

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 36 ஏடு; 72 பக்கம்.

ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 4 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. சுமாராக உள்ளது.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வந்த வ்யாமோஹம் ப்ரேரிக்க கிருஷ்ணனாய் வந்து அவதரித்து ஆஸ்ரிதர்க்கு பவ்யநாயிருக்கும் நிலையிலே நித்ய ஸூரிகளுக்கும் அவ்வருகான பெருமையை உடையனாய்..... ஸூசகமான திருத்துழாய் மாலையாலே அலங்க்ருதனாய் விளா வாய்நின்ற அசுரனைக் கன்றாய் நின்ற அசுரனாலே எறிந்து விழ விட்டு உயிர் இரண்டையும் முடித்துப் போகட்டாப் போலே என் விரோதியைப் போக்கினவனே....

ஆ. முடிவு

மேகங்கள் நிறைந்திருந்துள்ள ஆகாசத்திலே பொருந்தின மின் போலே கருத்த நிறத்துக்குப் பகைத்தொடையாக ப்ரகாஸியா நிற்பாளாய்....ஸஹ்ருதயமாகக் குளிர நோக்குகிற உதாரமான தாமரையைப் போலே இருக்கிற வொழுகு நீண்டு திருக்கண்களை யுடையளாய் தேன் நிறைந்திருந்துள்ள பூவின் மேலே எழுந்தருளியிருக்கிற பெரிய பிராட்டியார் தன்னை யொழிய வேறு புகல் அன்னியே இருக்கிற நமக்கு ஆபத்துள்ள போதோடு இல்லாத போதோடு வாசியற ஸர்வ காலத்திலும் அபாஸ்ரயம்.

5. பிற செய்திகள்

இச்சுவடியில் வடமொழிப் பகுதிகள் யாவும் கிரந்த லிபியில் உள்ளன.

## 1288. திருமாலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 996

ஆ. ஞ/25

சு. வி. 25

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. தொண்டரடிப் பொடியாழ்வார்

ஆ. திருமாலை ; வியாக்யானம்,

இ. திவ்வியப் பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 60 பக்கம் வரும்,

3. தோற்றக் கூறுகள்

அ. 90 ஏடு; 180 பக்கம்.

ஆ. நீளம் 42 செ.மீ.; அகலம் 4 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. கையெழுத்து தெளிவாக உள்ளது.

ஊ. 88 முதல் மூன்று ஏடுகள் முறிந்துள்ள
பல ஏடுகள் மிகச் சிதைந்துள்ளன,

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நித்யசூரிகளோடொத்த ப்ராப்தி தமக்குண்டாயிருக்க அத்தை அறியாதே அநாதி காலம் தேஹமே ஆத்மாவென்றும் சப்தாதி விஷயங்களையே போக்யமென்று விரும்பி ஸம்ஸாரத்திலே கைகழிந்த ஆழ்வாரைப் பெரியபெருமாள் தம்முடைய ஸ்வரூபகுண விபூதிகளுக்கு வாசகமான . . . .

ஆ. முடிவு

இவர்களைஜந்ம ப்ர . . . . . மானபேற்றை ஒரு . . . . . படி சொன்னார். (44) இப்ரபந்தங்கற் . . . .

5. பிற செய்திகள்

இச்சுவடியில் வடமொழிப் பகுதிகள் யாவும் கிரந்த லிபியில் உள்ளன,

# 1289. திருவாய்மொழி

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 997.

ஆ. ன/26

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நம்மாழ்வார்

ஆ. திருவாய்மொழி

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 111 ஏடு; 222 பக்கம்.

ஆ. நீளம் 46 செ. மீ.; அகலம் 3 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 11, 12 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. பல ஏடுகள் முறிந்துள்ளன, மிகப்பழுதுற்ற நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஸ்ரீய:பதியாய் அவாப்த சமஸ்த காமனாய் ஸமஸ்த கல்யாண குண . . கனான ஸர்வேஸ்வரன் மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்தென்கிறபடியே . . . . . . தோள்மாறி நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்த இவரை அடியை அடைந்துள்ளந்தேறி ஈறிலின்ப . . . வுள்ளம் யான் முழுகினனென்னுமுதலிலே தம் திருவாயாலே . . .

ஆ. முடிவு

அங்கு இருக்கிறவனுடை நிழநீட்டாலே அவன்படியா யிருக்கிற வானமென்று........என்னுதல். இமய..த்யாதி இவள் மோகித்துக்கிடக்கத் திருத்தாயார் தனியே இருந்து கூப்பிட்ட வெளி......வரிகள் நடுவே......ருந்து அநுபவிக்கப் படுவர்கள். (11)

5. பிற செய்திகள்

இச்சுவடியில் வடமொழிப் பகுதிகள்யாவும் கிரந்தலிபியில் உள்ளன.

## 1290. இயற்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 998

ஆ. ன/27

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. பொய்கையாழ்வார்

ஆ. இயற்பா; முதல்திருவந்தாதி; வியாக்கியானம்

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு; 86 பக்கம்.

ஆ. நீளம் 40 செ.மீ.; அகலம் 4 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.

உ. கையெழுத்து தெளிவாக உள்ளது.

ஊ. சுமாரான நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஸ்ரீய:பதியாய் அவாப்த சமஸ்த காமனாய் ஸமஸ்த கல்யாண குணா...கனான ஸர்வேஸ்வரன் நித்ய விபூதியிலே நித்யாஸ..னரான நித்யசூரி....கைங்கர்யம்கொண்டு நித்யானந்தியாயிருக்கச் செய்தேயும் அவர்களைப்போலே கைங்கர்ய நித்ய நிரதராய் வாழுகைக்கிட்டுப்பிறந்து வையத்து அதுக்கு அசலாய் அவித்யா பரவசராய் பரிக்கிரமிக்கிற ஸம்ஸாரி சேதனரை......

ஆ. முடிவு

இப்படி அவனே உபாயம் என்ற ..ஸித்தால் லோகத்தை அளந்து கொண்ட ஒரு திருவடிகளும் ஸகடம் முறிந்துவிழும்படி அத்தைத்தள்ளிப்போகட்டதாய் அழகியபூப்போலே அதிசுகுமாரமான சிவந்த ஒரு திருவடிகளுமான இரண்டு திருவடிகளையும் ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கலாம்.

5. பிற செய்திகள்

இச்சுவடியில் வடமொழிப்பகுதிகள் யாவும் கிரந்தலிபியில் உள்ளன.

## 1291. இயற்பா

1. நூலகக் குறிப்புகள்

அ. 999

ஆ. ன/5

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பூதத்தாழ்வார்

ஆ. இயற்பா: இரண்டாம் திருவந்தாதி: வியாக்கியானம்

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு; 86 பக்கம்.

ஆ. நீளம் 40 செ.மீ.; அகலம் 4. செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9 வரி.

உ. தெளிவான கையெழுத்து

ஊ. சுவடியின் நிலைமை சுமாராக உள்ளது.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கீழில் திருவந்தாதியிலே உபய விபூதி நாதனாய் ஸ்ர்வ ஸ்மாத் பரனாயிருக்கிற ஸர்வேஸ்வனுடைய ஸ்வரூபரூப குணவி-திகளைத் தன்னி....கடாக்ஷ விசேஷ லப்யமாய் பரகதி தஸா பன்னமான ஞான விசேஷத்தாலே ஸாக்ஷாத்கரித்தநுபவித்து அநுபவஜந்தப்ரீதி....

ஆ. முடிவு

க்ருஷ்ணனாய் வந்து அவதரித்து அசுராவிஷமான விளாவின் காயை அசுரமயமான கன்றாலே விழ விட்டவனே உன் பக்கல் நானுடையேனான ப்ரேமம் அநாத நாதனான என்னளவிலே அடங்கி நிற்பதொன்றன்று: அது அழியாதபடி அத்தையகஞ்சுரிப்படுத்தித் தந்தருள வேணும். அதவா அஸ்ருத வ்யா....நாய் அந்த வ்யாமோஹத்துக்கு எல்லை இல்லாதபடி இருக்குமவனாய்.... (இதற்குமேல் இருக்க வேண்டிய. ஓரேடு காணப்படவில்லை)

## 5. பிற செய்திகள்

இச்சுவடியில் வடமொழிப் பகுதிகள் யாவும் கிரந்த லிபியில் உள்ளன.

## 1292. திருப்பாவை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 1000

ஆ. ன/29

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஆண்டாள்

ஆ. திருப்பாவை : வியாக்யானம்

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 64 ஏடு; 128 பக்கம்.

ஆ. நீளம் 40 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் 9 வரி.

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. சுமாராக உள்ளது

எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஸ்ரீ ஸைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் ।
யதீந்திரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ॥

தேஹாத்மாபிமானிகளுக்கும் ...... கைவந்த ரிஷிகளுக்கும்........ரிஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் அத்தனை வாசிபொரும். ஆழ்வார்களுக்கும் பெரியாழ்வாருக்கும் அத்தனை அத்தனை வாசிபொரும்....

ஆ. முடிவு

அவனை மேல் விழுந் தபேக்ஷிக்கை....மென்றும் இவ் விஷயத்தில் இழிவார்க்கு உறுதியுடையாராகவும்..ரென்றும்..

ஜநித ப்ரதிகாரிதமுமாய் . . . . கைங்கர்யமென்றும் தத்ஸாதனமு மவன் திருவடிகளே என்றதாய்த்து.

5. பிற செய்திகள்

இச்சுவடியில் வடமொழிப் பகுதிகள் யாவும் கிரந்த லிபியில் உள்ளன.

## 1293. திருப்பல்லாண்டு

1. நூலகக் குறிப்புகள்

அ. 1001
ஆ. ள/30

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பெரியாழ்வார்
ஆ. திருப்பல்லாண்டு: வியாக்கியானம்
இ. திவ்வியப்பிரபந்தம்
ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்

3. தோற்றக் கூறுகள்

அ. 31ஏடு; 62 பக்கம்.
ஆ. நீளம் 47 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 8, 9 வரி.
உ. தெளிவான கையெழுத்து
ஊ. சுவடி வலப்புறம் முறிந்துள்ளது. மிகப்பழுதுற்ற நிலை
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 961 காண்க.

ஆ. முடிவு

அங்குள்ளாரையிட்டுத் தன்னை நிரூபிக்கவேண்டும்படி அவர்களுக்கும் தன்னோடு உண்டான ப்ரத்யாசத்தி.... சார்ங்கமென்னும் வில்லென்றும் அதுக்கேயாய் அந்த ப்ரசித்த ...... யாளுமவனென்னு மாப்போலே அத்தையாளுமவனென்றாயிற்று இவனு ........

(இதற்குமேல் ஏடுகள் இல்லை).

5. பிற செய்திகள்

இச்சுவடியில் வடமொழிப்பகுதிகள் கிரந்தலிபியில் உள்ளன

## 1294. திருவாய்மொழி நூற்றந்தாதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1002
ஆ. ய/54

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. மணவாளமாமுனிகள்

ஆ. திருவாய்மொழி நூற்றந்தாதி: வியாக்யானம்.

இ. சிற்றிலக்கியம்

ஈ. செய்யுளும் உரைநடையும்,
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 124 ஏடு; 248 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 3.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8 வரி.

உ. கையெழுத்து தெளிவாக உள்ளது

ஊ. முதல் 21 ஏடுகள் காணப்படவில்லை.
சுவடியின் நிலை சுமாராக உள்ளது.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தன் பேராண்மைக்கு விட்டிலங்கு செஞ்சோதியென்றும், அம்மான் திரிவிக்கிரமனே எனக்கே அருள்கள் செய்ய எனக் கென்ன ஒரு விதி சூழ்ந்திதென்றும், மருவித் தொழும் மனமே தந்தாயென்றும் என்னைத் தீமனம் கெடுத்தாயென்றும் ஸ்ரீ உன்னை என்னுள் வைத்தனை என்றும் இருடீகேசனே என்றும் ஏற்பான் என்னை ஆக்கிக்கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம் என்று....

ஆ. முடிவு

திருவாணையிட்டுக் கூசஞ் செய்யாத செய்த பிழைப் பற்றுக் கொம்பற்ற கதிக்கேடு பொரவிட்ட பெரும் பழி புறம் போனால் வரும் இழவு உண்டிட்ட முற்றின்பு அன்பு வளர்ந்த வடியுரம் உயிருதவு முதலளவு துரக்கையகளாலே பெறாவானை யாக்கின் போவார்க் குளப்படிசயதரர்....வியமான பரம பக்தி யாலே பரிபக்வராய்....சேர்ந்தாரென்று....சாத்தியருளினா ராய்த்து. ஜீயர் திருவடிகளே சரணம்.

இ. பிற்குறிப்பு

ராக்ஷஸ வருஷம் வைகாசி மாதம் 7 ஆம் தேதி வெள்ளிக் கிழமையன்றைக்கு எழுதி முகிந்தது. திருவாய்மொழி நூற்றந் தாதி வ்யாக்யானம். இது கிரந்தம் 4003.

## 5. பிறசெய்திகள்

இச்சுவடியில் வடமொழிப் பகுதிகள் யாவும் கிரந்த லிபியில் எழுதப்பட்டுள்ளது.

# 1295. திருப்பாவை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 1003
ஆ. எ/31

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஆண்டாள்

ஆ. திருப்பாவை: பிரமாணத்திரட்டு

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 30 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 34 ஏடு; 68 பக்கம்.

ஆ. நீளம் 44 செ. மீ; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் 5, 6 வரி

உ. கிறுக்கலான கையெழுத்து

ஊ. பழுதுற்ற நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ப்ரவேஸே முண்டோபநிஷதித்யாதி . . . . ஆழ்வார்களு மித்யாதி ஸத்கன்ம நிரதாஸ்ஸ . . ஸா . . . . . . விவாஹ காலங் களிலுமித்யாதி—விவாஹ காலேந்திஸம்ப்ரயோகே பூரணா . .

ஆ. முடிவு

பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் என்கையாலே ஸ்வாமித்வமும் ஓங்கி உலகளந்த உத்தமன் என்கையாலே வறை . . ல்லார் தலையிலும் திருவடிகளை வைத்த ஸௌசீல்யமும் மாயனை என்று தொடங்கி தாமோதரன் அளவும் அடிக்கதமாம் படியான ஸௌலப்யமும் . . . . (இதற்குமேல் ஏடுகள் இல்லை).

5. பிற செய்திகள்

இச்சுவடியின் வடமொழிப் பகுதிகள் யாவும் கிரந்த லிபியில் எழுதப்பட்டுள்ளன.

# 1296. திருமொழி

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 1004

ஆ. ன/32

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. பெரியாழ்வார்

ஆ. பெரியாழ்வார் திருமொழி: முதல்பத்து: வியாக்கியானம்.

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்: அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு; 86 பக்கம்.

ஆ. நீளம் 47 செ.மீ.; அகலம் 3.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்குப் 7, 8 வரி.

உ. மிகக்கிறுக்கலான கையெழுத்து.

ஊ. 17, 18, 34 ஆக மூன்று ஏடுகள் காணப்படவில்லை. மிகப்பழுதுற்ற சுவடி.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஸ்ரீய:பதியாய் அவாப்தஸமஸ்த காமனாய் ஸமஸ்த கல்யாண குண . . ஸர்வரக்ஷகனாய் ஸர்வேஸ்வரன் தமக்கு வந்து ஸந்நிஹிதனான அளவிலே பிரணவத்திற் சொல்லுகிறபடியே அவனைத் தமக்கு ரக்ஷகனாகவும் தம்மை அவனுக்கு . . ராகவும் அநுஸந்தித்து . . . .

ஆ. முடிவு

விஷ்ணுசித்தன் இத்யாதி—பெரியாழ்வார் தத்காலம் போலே யநுபவித்து ப்ரீதராய் அது தன்னை எல்லோரும் அறியும்படி உபகரித்ததாய் ஸர்வாதிகாரமான ...விவை பத்துப் பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள்; வாய்த்த இத்யாதி —ஸர்வேஸ்வரனுக்கு மங்களாஸாஸனம் பண்ணுகை.... வாய்த்த விலக்ஷணரான......அத்தால் வந்த ஆனந்தத்தை உடையவரானவர்,

## 1297. முதலாயிரம்

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 1005

ஆ. ன/33

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. முதலாயிரம்: அரும்பதம்

ஆ. பெரியாழ்வார் முதலியோர்

இ. திவ்வியப்பிரந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 120 பக்கம் வரும்.

### 3. தோற்றக் கூறுகள்

அ. 139 ஏடு; 278 பக்கம்.

ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.

உ. பலவிதமான கையெழுத்துகள்; பெரும்பாலும்தெளிவு.

ஊ. சுமாரான நிலை.

ஏ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ப்ரவேஸே மேல் அவன் வைலக்ஷணமருளிச் செய்வாராய் ஆழ்வாருடைய அவதார ஹேதுவை . . மகாப்ரவேசத்துக்கு ... ஸ்ரீய:பதி இத்யாதி வாக்யங்களில் ஸ்ரீய:பதி என்று தொடங்கி இவர்களோபாதி ஸம்சாரிகளும் என்றும் மழுவுங் கட்டிக் கொண்டு, மேல் பதிம் விஸ்வஸ்ய என்று தொடங்கி உபந்யசிப்பது . . . .

ஆ. முடிவு

ஒரு குணத்தைவிட்டு உபசம்ஹரிப்பானெ . ! . . அவ்வொருதட்டு இத்யாதி—ஈஸ்வர பரமான இரண்டாம் . . த்தைப் பற்ற . . . . ஹரி ஓம்.

# 1298. நாச்சியார் திருமொழி

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 1006

ஆ. ன/34

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஆண்டாள்

ஆ. நாச்சியார் திருமொழி; வியாக்கியானப்

இ. திவ்வியப்பிரபந்தம்

ஈ. செய்யுளும் உரைநடையும்.
**அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.**

## 3. தோற்றக் கூறுகள்

அ. 99 ஏடு; 198 பக்கம்.

ஆ. நீளம் 44 செ.மீ ; அகலம் 4 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 9, 10 வரி

சார்யர் பிள்ளை.... நந்ய கதிகளுக்கு ஜீவிக்கும்படி வெளியிட்டருளினார்.

5. பிற செய்திகள்

இச்சுவடியில் வடமொழிப் பகுதிகள் யாவும் கிரந்த லிபியில் உள்ளன. ஈற்றில் திரு நக்ஷத்ர ஸஹித தனியன் இடம் பெற்றுள்ளது.

## 1407. குருபரம்பரா ப்ரபாவம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1095

ஆ. ற/67

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. குருபரம்பரா ப்ரபாவம்: பரந்தபடி

இ. பல்வகை நூல்கள்

ஈ. உரைநடை;
அச்சில் ஏறத்தாழ 170 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 191 ஏடு; 382 பக்கம்.

ஆ. நீளம் 43 செ.மீ.; அகலம் 4 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. பலவகையான கையெழுத்து.

ஊ. 129ஆம் ஏடு காணப்படவில்லை. பல ஏடுகளில் தொளைகள் விழுந்துள்ளன.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அருள்நிரம்பும் புட்குழி வாழ்வின் பழ......ள பாற்பரந்த
குருபரம் பராப்ர பாவம்எல் லாம்கூற வோநன்மனம்
தரவிரும் புங்கொரடைச் செங்கையில் நாயுனைற்
றாள்தொழவே
குருவிரும் புந்திரு மாலடி யார்பதம் சிந்திக்குமே

ஆ. முடிவு

அப்போதே யாவரும் வந்து அடிவணங்கி ப்ற....ு.
முதிதோ லோக: என்கிறபடியே எல்லாரும் அதி ஸந்துஷ்டரா
யிருக்கப் பெருமாளும்........ப்ரமுமோதஹ என்கிறபடியே
துளக்கத்தமுதமாய் எங்கும் பக்கன நோக்கறியாதே ஸர்வரையும்
கடாக்ஷித்தருளிக் கொண்டு அன்போடு தென்திசை நோக்கிப்
பள்ளி கொண்டு எழுந்தருளியிருந்தார்.

5. பிற செய்திகள்

இச்சுவடியில் வடமொழிப் பகுதிகள்யாவும் கிரந்தலிபியில்
உள்ளன.

## 1403. பெரிய திருமுடியடைவு

1. நூலகக் குறிப்புகள்

அ. 1096

ஆ. ற/68

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. பெரிய திருமுடியடைவு

இ. பல்வகை நூல்கள்

ஈ. உரைநடை

அச்சில் ஏறத்தாழ 6 பக்கம் வரும்.

## 3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 18 பக்கம்.

ஆ. நீளம் 43 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 10 வரி,

உ. தெளிவான கையெழுத்து.

ஊ. ஏடுகளில் ஆங்காங்குத் தொளைகள் காணப்படுகின்றன

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அனந்த கோடி ப்ரஹ்மாண்ட நாயகனாய், ...... ஸமானாதிக ரஹிதனாய், வேதவேதாந்த, வேத்யனாய், அவாப்த ஸமஸ்த காமனாய், அனந்த கல்யாண குணங்களை உடையனாய் இருக்கிற ஸ்ரீமந் நாராயணன் உகந்து எழுந்தருளியிருக்கிற .... பரத்வம், வ்யூஹம், விபவும் அந்தர்யாமித்வும், அர்ச்சாரம் என்று ஐந்து.

ஆ. முடிவு

நம்பெருமாள் கோயிலிலே நூற்றிருபது திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார். இவருக்கு தீ...... திவஸம் துன்மதி வர்ஷம் மாசி மாஸம் சுக்ல பக்ஷத்தில் தஸமி. இவருக்குத் தனியன்:

யோ நித்யமச்யுத பதாம்புஜ யுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே ।
அஸ்மத் குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ ஸரணம் ப்ரபத்யே ॥

## 5. பிறசெய்திகள்

இச்சுவடியில் வடமொழிப் பகுதிகள் யாவும் கிரந்த லிபியில் உள்ளன.

## 1404. சாதகாலங்காரம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1097

ஆ. வ/51

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. சாதகாலங்காரம்

இ. சோதிடம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 200 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 137 ஏடு; 274 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 3·5 செ.மீ

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி.

உ. பலவிதமான கையெழுத்து.

ஊ. 9, 11, 29, 43–45, 49, 54, 116, 117, 119, 121-125,129–131,135 ஆகிய ஏடுகள் காணப்படவில்லை. 33 என்ற ஏட்டெண் இருமுறை எழுதப்பட்டுள்ளது. உள்ள சுவடி நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நீருலவு புவியினிற் செனனகா லையினில்
நின்றநவக் கிரகத்தால் நிகழ்ந்தபலன் புகலும்
ஏருலவு வடமொழியைத் தென்தமிழ்ச்சா தகநூல்
எனத்தமியேன் உரைசெய்ய எழில்வேத முனிவன்

பாருலகில் குருகுலப்பா ரதக்கதையை வழுத்தப்
பயிலும்வட திசைக்கிரியில் பரிந்தகுவடு அதனால்
சீருலவ வரைந்தருளும் தெய்வவா ரணத்தின்
செழுங்கமலத் தாளிணையைச் சிரத்தினிலே வைப்பாம். (1)

ஆ. முடிவு

கண்ணார் எட்டில் அதிபதியும் காணும் ஒருவன் அங்கிசத்தில்
நண்ணி இருக்க அவ்வீட்டோன் நயந்தே எட்டில் இருந்ததினால்
எண்ணும் சுமங்கலி மரணம்எனல் இனிதாம் கன்னி தேள்இடபம்
ஒன்றில் சிங்கம் இதில்மதியும் உற்றால் புத்ர வதியாளே. (42)

ஸ்த்ரீ சாதக பலன் முற்றிற்று,

## 1405. சோதிட நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1098

ஆ. வ/52

2. உள்ளீடு; நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .

ஆ. பல சோதிடச் செய்திகள்

இ. சோதிடம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 35 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 46 ஏடு; 92 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 3·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு ப் பலவித வரி.

உ. பலவிதமான கையெழுத்துக்கள், தெளிவானவை,

ஊ. நன்றாக உள்ளது.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆதாயம் 120 பலன் அறிய:-

1. யோகம் 2. போகம் 3. சம்பிரிதி 4. வீரியம் 5. சத்துரு நாசம் 6. தானியம் 7. தர்மம் 8. சுகம் 9. சித்தம் 10. அர்த்த லாபம் 11. புத்திர லாபம் 12. ஞானம்.

ஆதாய பலன் முற்றும்.

ஆ. முடிவு

திர லக்னத்துக்கு ஒன்பதாமிடத்தானுடைய திசை பத்தி பத்தாது; சரலக்னத்துக்கு பதினோராமிடத்தானுடைய திசைபுத்தி பத்தாது: உபய லக்னத்துக்கு ஐந்தாமிடத்தானுடைய திசை புத்தி பத்தாது.

## 5. பிற செய்திகள்

இச்சுவடியில் பலவிதமான சோதிடச் செய்திகள் ஓர் ஒழுங்கு முறையின்றி இங்குமங்குமாக எழுதப்பட்டுள்ளன.

# 1406. பாகவத அம்மானை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 1099

ஆ. ர/24

## 2. உள்ளீடு; நூல் விவரம்

அ. ..............

ஆ. பாகவத அம்மானை

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 33 ஏடு; 66 பக்கம்.

ஆ. நீளம் 45 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.

உ. சற்றே கிறுக்கலான எழுத்து

ஊ. மிகவும் சிதைவுற்ற நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பூத்த மெய்யில் செகம்பூத்தோன் பைந்துளபத்
தார்பூத்த மார்பனிரு தாமரைப் பாதம் தொழுவோன்
நிலமளந்தோன் மார்பிடத்தில் நீங்காமல் வாழுகின்ற
மலர்மடந்தை பாதமலரை முடிமேற் புனைவேன்.

ஆ. முடிவு

தன்னுருவை மாற்றித் தனித்தார் பசுங்குழந்தை
என்னைஉரு வாகியபின் எங்கோனைத் தேவகியர்
கைத்தலத்தி லேந்திக் கனிவாகிக் கொஞ்சிமுத்தம்
வைத்துருகிப் பெற்ற வருத்தமுந் தீர்ந்தா
மைந்தன் வந்தோன் வசுதேவர்க் குரைப்பா
நந்தகோனுக் கேற்ற நட்புடைய நாயகியா.

இ. பிற்குறிப்பு

சுபகிருது வருஷம் கார்த்திகை மாதம் எழுதத் தொடங்கினது.

## 1407. சித்தாந்த சிகாமணி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1100

ஆ. ட/214

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அம்பலவாண தேசிகர்

ஆ. சித்தாந்த சிகாமணி

இ. தத்துவம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 25 ஏடு; 50 பக்கம்.

ஆ. நீளம் 23 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7, 8 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சுமாரான நிலை, முதல் 7 ஏடுகளும், 21 முதல் 99 வரையும், 112க்கு மேலுள்ள ஏடுகளும் காணப்படவில்லை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அருந்துயர்க் கிடம தாயஞ் ஞானகற் பிதமே யாகிப்
பொருந்திநின் றுள்ள சீவத் துவமுடன் போகு மாசான்
திருந்தகுண மொழியான் ஞான சத்தியுந் திகழு மென்பர்
பரந்துள கலைகள் முற்றும் பழுதறக் கற்ற மேலோர்.(13)

ஆ. முடிவு

மித்தையாகு மிவ்வுலக முன்னுண்மை போல விளங்கு
சத்ததா கியபர சிவம்வெளிப் படிற்தனது......
யத்துநின்ற மெய்ச்சொரூப மேயெங்கணும் விளங்குஞ்
சித்தமா மயலொழிந்து முன்னூல் பலதெரிந்தோய். (6)

சராசரலயத்தல் முற்றும்.

அண்ட நூறு கோடிகள் படைப்புட னிலையழிவு
கொண்டதோ ரிடமா கியவதனையே குறித்து
கண்டதோர் விமரி சந்தனைக் கசடற........

(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1408. ஆரூட நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1101

ஆ. வ/53

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ......

ஆ. ஆரூட நூல்

இ. சோதிடம்

ஈ. உரைநடை;
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 64 ஏடு; 128 பக்கம்.

ஆ. நீளம் 14 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 5 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. சுமாரான நிலை

எ. முழுமை

4 சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

இந்த நிமித்தம் நன்று. வேளாண்மை விளையும். கேட்ட காரியம் கேளிர். ஆறுமுக சுவாமி திருவிளக்கதினாலே நீர் கேட்ட காரியமெல்லாம் பலிக்கும். விசாரித்த காரியமெல்லாம் நினைத்தபடியே செயமாகும். உனக்குத் தெய்வ சகாயமுண்டு. உனக்கு நீ போக்குவர மடல் பார்த்திருக்கிறது செயமாகும். நன்மை செயமாகும். உத்தமம்.

ஆ. முடிவு

இந்த நிமித்தம் நல்லது, பரமேசுபரன் திருவுளத்தினாலே நினைத்த காரியமெல்லாம் கைகூடும். தெய்வசகாயம் உண்டு. மனுஷ சகாய முண்டாயிருக்கும். நல்லது. உத்தமம்.

## 1409. சோதிட நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1102

ஆ. வ/54

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ...............

ஆ. சோதிடச் செய்திகள்

இ. சோதிடம்

ஈ. உரைநடை;
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 43 ஏடு; 86 பக்கம்.

ஆ. நீளம் 14 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவிதவரி.

உ. வெவ்வேறு கையெழுத்து.

ஊ. பொதுவாக நல்லநிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

| 12–12 | | 12–13 | | 12–93 | | |
|---|---|---|---|---|---|---|
| அ | – 148 | அ | – 116 | அ | – 118 | |
| ஆதா– | 12 | ஆ | – 12 | ஆதா– | 12 | |
| சிவ | – 3 | சி | – 4 | சிவ– | 1 | வயது 97 |
| ந | – 15 | ந | – 6 | ந | – 24 | |
| கெற் – | 4 | கெ | – 6 | கெ | – 7 | |

ஆ. முடிவு

(இறுதியிலுள்ள சில ஏடுகளில் செய்திகள் கிரந்த எழுத்தில் எழுதப்பட்டுள்ளன.)

5. பிற செய்திகள்

சோதிடம், மாந்திரிகம் போன்ற செய்திகளுடன் அவ்வப் போது தொகுத்து எழுதி வைக்கப் பெற்ற சுவடியாக உள்ளது.

## 1410. திருப்பதிகக் கோவை

1. நூலகக் குறிப்புகள்

அ. 1103

ஆ. ன/80

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. உமாபதி சிவாசாரியர்

ஆ. திருப்பதிகக்கோவை

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 40 ஏடு; 80 பக்கம்.

ஆ. நீளம் 15•5 செ. மீ.; அகலம் 5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் பலவித வரி

உ. சிறிய கையெழுத்து.

ஊ. மிகவும் சிதைவுற்ற நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பன்னுசிவ தலமொருநூற் றைம்பதிற்று மூன்று
பதிகம்ஒன்று நாற்பத்தொன் பதிற்பதிக மிரண்டாம்
முன்னுமிரு பதிற்றெட்டு நகர்ப்பதிக மூன்றாம்
ஒருபதிற்றோர் தலம்பதிற்றோர் தலம்பதிகம்
ஒருநான்கென் றுணர்க
மன்னுமிரு நான்குதலம் ஓரைந்தே பதிகம்
மற்றுமைந்து தலங்களுக்கு வரும்பதிக மாறாம்
பின்னுமைந்து வளநகர்க்குப் பெரும்பதிகம் ஏழாம்
பேர்த்துமொரு நான்குதலம் பெரும்பதிக மெட்டே.(1)

ஆ. முடிவு

சுந்தரர், ஊர்த்தொகை, பண் பழம்பஞ்சுரம். காட்டூர் கடலே கடம்பூர் மலையே (10) ஆக, சுந்தரர் அருளிச்செய்த பொதுப் பதிகம் நாலுக்கு 41. ஆக மூவர் பொதுப் பதிகம் 48க்கு

(இதற்குமேல் எழுதப்பெறவில்லை.)

## 1411. மகாபாரத அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 1104

ஆ. ர/25

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .

ஆ. மகாபாரத அம்மானை

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 353 ஏடு; 706 பக்கம்.

ஆ. நீளம் 43 செ. மீ.; அகலம் 4 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8,9 வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. பொதுவாக நல்ல நிலை. முதல் 7 ஏடுகள் இல்லை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தேனாள் துகில்தனையுஞ் சீராகத் தானெடுத்து
மானாள் துகில்தனையே வாப்புதுங் கொண்டேக
கோனான சுக்கிரனாற் கோலமுள்ள பெண்ணாரும்
வானான தேவருட மாகுருவு பெண்ணாரும்.

ஆ. முடிவு

மேலியர்தம் மந்திரிகள் வேந்தர் பலர்கோடி
காவலர்கள் கோடி கரிபரிகள் தான்கோடி
மேவலர்கள் கோடி மிறுவன் னியர்கோடி
எண்ணவொண்ணாச் சேனை யியல்வேந்தர் தான்கோடி.

(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1412. திருக்கோவையார்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1105

ஆ. ண/46

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. மாணிக்கவாசகர்

ஆ. திருக்கோவையார்

இ. சைவத்திருமுறை

ஈ. செய்யுள் 400
அச்சில் ஏறத்தாழ 250 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 54 ஏடு; 108 பக்கம்.

ஆ. நீளம் 12.5 செ. மீ.; அகலம் 4.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 16 வரி.

உ. சிறிய, அழகிய, தெளிவான கையெழுத்து

ஊ. சுமாரான நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு
தொடர் எண்: 960 காண்க.

இ. பிற்குறிப்பு

வெகுதானிய வருஷம் ஐப்பசி மாதம் 1 ஆம் தேதி, துதிகை, குருவாரமும் அசுவதி நட்சத்திரமும் அமிர்தயோகமுங் கூடின சுபதினத்தில் தேவாரம், திருவாசகம், திருச்சிற்றம்பலக் கோவையார் எழுதி நிறைவேறினதை யாதொரு நாயன்மார்கள் வாசிக்குந்தோறும் அடியேன் மாசிலாமணிக்கு நல்ல புத்தி வரும் படி சித்திக்க வேண்டுவது.

# 1413. அகத்தியர் நாலுகாண்டம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1106

ஆ. ல/252

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அகத்தியர்

ஆ. அகத்தியர் நாலுகாண்டம்: 1200 இல்
வைத்தியகாண்டம் 300

இ. மருத்துவம்

ஈ. செய்யுள் 300

3. தோற்றக் கூறுகள்

அ. 61 ஏடு; 122 பக்கம்.

ஆ. நீளம் 30 செ.மீ.; அகலம் 4 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 8, 9, வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பூரணமே யேகநிரா மயமெஞ் ஞானம்
போதகமே பரப்பிரம வெளியே ஆதி
காரணமே சிற்றறிவா லழல வட்டங்
கணபதியே யுன்மனத்தின் கருவே சோதி
ஆரணமே ஆயிரத்தி னிருநூறு பாட்டும்
அகத்தியமா முனிக்குருவே அடியாய்த்தொட்ட
வாரணமே பிரணவமே யெந்தாய் வள்ளி
மயிற்தெங்கள் சரணங் காப்ப தாமே. (1)

ஆ. முடிவு

உண்டுபாரு உண்டுமருந்து உண்டுமூல முண்டு
நூலையுண்டு உதவி யுண்டு
கண்டுபாரு சிவமுண்டு பூசை யுண்டு
கருத்துண்டு வழியுண்டு விழியு முண்டு
திண்டுமுண்டு செய்யாதே கொலைசெய் யாதே
தீவினைகள் ஆகாதே சடம்போக் காதே
பண்டுசொன்ன குருமுறையை விட்டி டாதே
பண்டிதனே வைத்தியநூல் காண்டம் முற்றே. (300)

## 1414. தனிப்பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1107
ஆ. த/28

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ....................
ஆ. தனிப்பாடல்கள்
இ. பிறதோத்திரங்கள்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 49 ஏடு; 98 பக்கம்.
ஆ. நீளம் 20·5 செ. மீ; அகலம் 3·5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் 9 வரி
உ. சுமாரான எழுத்து
ஊ. நல்லநிலை.
ஏ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

### அ. தொடக்கம்

கிட்டிணா பூசை வாள வா
கிருபை யாள வா,
பத்மநாபா அட்டாட்சரப் பொருளே
கிட்டிணா அரியே ஓடி வாவா, (1)

### ஆ. முடிவு

வானோ ரொளிவாய் நின்றவனே
மன்றோ ரடியால் அளந்தவனே
ஏனோ யெனை யென் றறியாத
எளியா ரிடமே நீவருவாய்
பூணா டரவிற் பள்ளிகொள்ளும்
பொருளே யருளே மனதிரங்கித்
தேனே கனியே யென்மனதிற்
சிவமா யுதித்த திருமணியே. (25)

### இ. பிற்குறிப்பு

வெள்ளைக்கண்ணு முக்கந்தர் மகன் சம்மந்தமூர்த்தி முக்கந்தன் ஏடு. எடுத்தவர் படித்துவிட்டுக் கொடுத்து விடவும். அப்படி இல்லாவிட்டால் திருடினவனை விட்டுணு மூடனாகச் சபித்து விடுவார்.

## 5. பிற் செய்திகள்

இச்சுவடியில், அட்டாட்சர மாலை, பூச்சூட்டல், கடக சுத்தி மந்திரம், தூப மாலை, நாம மாலை, மங்களம், துளப மாலை, திருமந்திர குரு வரிசை, கடக மந்திரம். பாத மாலை, தேவதார அர்ச்சனை, பெரிய பெருமாள் பாடல், அபிடேக மாலை, சோபன மாலை, எச்சரிக்கை மாலை, அட்டாச்சர முக்கிதிற மந்திரம், எம்பெருமாள் சதகம், திருமாலை, ஆகிய தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

## 1415. மாந்திரீக நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1108

ஆ. ழ/29

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. .............

ஆ. மாந்திரீக நூல்

இ. மாந்திரீகம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 46 ஏடு; 92 பக்கம்.

ஆ. நீளம் 21 செ.மீ.; அகலம் 4 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 7, 8, 9 வரி.

உ. சுமாரான நிலை.

ஊ. நல்லநிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆலின்மேல் புல்லுருவி கார்த்திகைநாள் வாங்கி
அதுக்குப சாரபூசை பலியு மிட்டு
சீலவெள் ளசைசெய்து சிரசி லாக்கி
சிறப்பாக வித்திவரத் திரிதுடரு பாரு
பாலில்லாப் பாதிரியின் புல்லுருவின் புத்தேன்
பண்புடனே குளிகைசெய்து தலைமேல் கட்டே
வாலநுதல் மடவாரும் லோகத் தாரும்
கணதுகமுடி வைக்கும்வ சீரந்தான் பாரே. (1)

ஆ. முடிவு

உண்டை செய்து உலர்த்தி வைத்துக் கொண்டு இச் சுரங்களுக்கு மூன்று நாள் கொடுக்கத் தீரும். பரிகாரம் ஓம். பிளயாயாவென்று நூற்றுஎட்டு உரு சேவித்து, சிவம் பண்ணி விபூதி போடவும் தீரும்.

இ. முற்குறிப்பு

1869 ஆம் வருடம் மார்ச் மாதம் 10 ஆம் தேதி 1044 ஆம் வருடம் மாசி மாதம் 29 ஆம் தேதி, தரங்கை கயிலாசபுரத்தி லிருக்கும் சீனிவாச வைத்தியரவர்கள் மகன் நயினார் சுகிர்தலிகிதமாய் எழுதின சொந்தச் சுவடி. நீடூழிகாலம் வாழ்க.

இ. பிற்குறிப்பு

1869 ஆம் வருடம் மார்ச் மாதம் 22 ஆம் தேதி 1044 ஆம் வருடம் பங்குனி 11 ஆம் தேதி எழுதி முடித்த சுவடி. நீடூழி காலம் வாழ்க வேணும்.

## 1416. மாந்திரீக நூல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1109

ஆ. மூ/50

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . . . . .

ஆ. மாந்திரீக நூல்

இ. மாந்திரீகம்

ஈ. உரைநடை;
அச்சில் ஏறத்தாழ 50 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 33 ஏடு; 66 பக்கம்.

ஆ. நீளம் 19 செ.மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்குப் பலவிதவரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பிராது தள்ள மந்திரம், விசாரணை காலத்தில்
செபம் பண்ணி தாள் கிழிக்க.
ஓம் சரவண பவ.
ஓம் நசி மசி நங் வென்று குத்தவும்.

ஆ. முடிவு

ரத்தக் குடத்தைத் தலைமேல் வைத்து எங்கும் பலி கொண்டவளே அடி பெண்ணே ஆங்கார வைரவி அம்மா தாயே வடக்கு வாசச்செல்லி வடபத்திரகாளி வந்து முன்னிருக்கச் சுவாகா.

5. பிற செய்திகள்

இடையிடையே மந்திர எந்திரங்களும் படங்களும் எழுதப்பட்டுள்ளன.

## 1417. கொன்றை வேந்தன்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1110

ஆ. ள/13

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்
ஆ. கொன்றை வேந்தன்
இ. நீதி நூல்கள்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம்.
ஆ. நீளம் 40 செ.மீ.; அகலம் 2.5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 5 வரி
உ. சுமாரான எழுத்து
ஊ. சற்றே சிதைவுற்ற நிலை.
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
ஆலயந் தொழுவது சாலவும் நன்று
இல்லற மல்லது நல்லற மன்று
ஈயார் தேட்டைத் தீயார் கொள்வார்
உண்டி சுருங்குதல் பெண்டீர்க் கழகு
ஊருடன் பகைத்தால் வேருடன் கெடும்.
......... ......... ... - ... ........

ஆ. முடிவு

தையு மாசியும் வையகத் துறங்கு
தொழுதூண் சுவையி னுழுதூ ணினிது
தோழ னோடு ஏழமை பேசேல்
நல்லிணக்க மல்லது அல்லற் படுத்தும்.

(இதற்குமேல் ஏடுகளில் இடம் இருந்தும் எழுதப்பெறவில்லை)

## 1418. மதுராபுரி அம்பிகை மாலை

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 1111
ஆ. ய/55

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. குலசேகரபாண்டியன்
ஆ. மதுராபுரி அம்பிகைமாலை
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 30

### 3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு; 32 பக்கம்.
ஆ. நீளம் 35 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.
உ. பெரிய கையெழுத்து
ஊ. நல்லநிலை
எ. முழுமை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

திருவே விளைந்தசெந் தேனே வடியிட்டதெள்ள மிர்தே
உருவே மடப்பிள்ளை ஓதிமமே ஒற்றை யாட கப்புத்
தருவே நின்தாமரைத் தாளே சரணஞ் சரணங் கண்டாய்
அருவே அணங்கு அரசே மதுரா புரியம் பிகையே. (1)

ஆ. முடிவு

பிடித்தாரைக் கட்டி அணைத்தமு தூட்டிய பேயின்முலை
குடித்தாடு மாயன் குலசே கரன்வடகொன் றைச்சென்றான்
அடித்தான் படித்தசொல் அம்பிகை மாலைஅய் யாறுகவி
படித்தார்கள் கற்பகக் காவும்பொன் னாடும் படைப்பவரே.
(30

## 1419. தனிப்பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1112

ஆ. த/29

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..................

ஆ. தனிப்பாடல்கள்

இ. பிறதோத்திரங்கள்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அறப்பளீசுவரர் பேரில் விருத்தம்

தனக்குவெகு புத்தியுண் டாகிலும்வே றொருவர்
தன்புத்தி கேட்க வேணும்
தானதிக சூர னாகிலும் கூடத்
தளசேக ரங்கள் வேணும்
கணக்கென்ற வித்துவா னாகிலுந் தன்னிலுங்
கற்றோரை நத்த வேணும்
காசினியில் ஒருகுடையில் ஆண்டாலும் வாசலில்
கருத்துள்ள மந்திரி வேணும்

துணைக்கென்ற சங்கீதம் சாமர்த்திய னாகிலும்
சுதிகூட்ட னொருவன் வேணும்
சுடர்விளக்கா யிலும்நன் றாய்வி ளங்கவே
தூண்டுகோ லொன்று வேணும்
அனற்கண்ண னேபடிய சங்கரசு வண்ணனே
அய்யனே அருமை மதவேள்
அநுதினமு மனதில்நினை தருசதுர கிரியில்வாழ்
அறப்பளீ சுபர தேவனே. (1)

ஆ. முடிவு

வாழிப்பத்தியம்

இந்திரனும் அயிராணி இயல்வுபேர் வாழி
ஈஸ்பரனும் உமையவளும் இன்பமதாய் வாழி
சந்திரனுஞ் சூரியனுந் தயவுடனே வாழி
தரணிதனிற் திருமாது மாதுமிக வாழி
கந்தருடன் வள்ளிதேவ யானைமயில் வாழி
காசினியில் அயன்வாழி கலைமகளும் வாழி
இந்தமகா நோம்பென்று வந்துதமிழ்ப் படிக்க
இன்பமதாய்க் கற்றவர்கள் கேட்டவர்கள் வாழி.

## 5. பிற செய்திகள்

இச்சுவடியில், அறப்பளீசுவரர் பேரில் விருத்தம், சுப்பிரமணியர் பேரில், பள்ளிக்குடத்து விநாயகன் பேரில், விக்கினேஸ்வரன் பேரில், பழநியாண்டவர் பேரில் கட்டியம், சரசுபதி பேரில் பத்தியம், செல்வ விநாயகன் பேரில் பத்தியம், செல்லாண்டியம்மன் பேரில் பத்தியம், மாரியம்மன் பேரில் பத்தியம், ஏழுவூரம்மன் பேரில் பத்தியம், கருப்பண்ணசுவாமி பேரில் பத்தியம், பழனியாண்டவர் பேரில் பத்தியம், பெருமாள் பேரில், நாட்டுராயன் பேரில் பத்தியம், கரிய காளியம்மன் பேரில் பத்தியம், சிவன்மலையாண்டவர் பேரில் பத்தியம், சென்னிமலையாண்டவர் பேரில், கடலைப்பத்தியம், வாழிப் பத்தியம் போன்ற தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

## 1420. பாம்புப் பாடம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1113
ஆ. ல/253

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........
ஆ. பாம்புப்பாடம்
இ. மருத்துவம்
ஈ. செய்யுளும் உரைநடையும்.
அச்சில் ஏறத்தாழ 10 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 5 ஏடு; 10 பக்கம்.
ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது
ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.
உ. பெரிய எழுத்துக்கள்.
ஊ. ஓரங்களில் சிதைந்துள்ளது.
ஏ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

குருவிருக்கு மூலையில் கூட்டியகால் நீட்டென
அருகிருந்து ஆசாரஞ் செய்குவேன்
குருவிருக்குஞ் சிங்காச னமுஞ்செம்புக்
குடையும்எக் கோடி காலமும்
அறுமுகன் துணை அவருடைய தம்மாணைஏறு.
மயலாணையே மறுசாதம் ஆணை இறங்கு.

ஆ. முடிவு

பாம்பை நிறுத்த மந்திரம் :—

கல்லைக் கடராதே கருமலையைத் திண்டாதே
என்னைக் கடியாதே என்முகத்தைப் பாராதே
சொன்னதொரு சத்தியம் சிவ னாணை
நிற்கச் சிவாய.

5. பிறசெய்திகள்

முதலிலுள்ள ஒரு தனி ஏட்டில் விஷக்கடிக்கு மருந்துவகை எழுதப்பட்டுள்ளது.

## 1421. கல்வியொழுக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1114

ஆ. ள/14

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்

ஆ. கல்வியொழுக்கம்

இ. நீதி நூல்கள்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.

ஆ. நீளம் 40 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒருபக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து.

ஊ. நல்ல நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அஞ்சு வயதில் ஆரிய மோது
ஆரிய மோத அறிவுண் டாமே
இனியது கொடுத்து எழுத்தை யறி
ஈட்டிய பொருளே எழுத்தே யுடைமை
உடைமை யென்பது கல்வி யுடைமை
ஊமை யென்பவர் ஓதா தவரே
எழுதப் படுவது எழுத்தே யாகும்
ஏழை என்பவர் எழுத்தறி யாதார்
ஐய மேற்கிலும் அவ்வெழுத்தறி
ஒருபொழு தாகிலும் ஓதியறி
ஓதலுடமை வேத வித்தை
ஔவெழுத் தறிந்தவன் அவனே யரசன்.

ஆ. முடிவு

வழிபா டாவது மாறாக் கல்வி
வாட்ட முற்றவர் மாசறக் கற்றோர்
வித்தையில் லாதவர் வெறியோ ராவார்
வீசிய தெல்லாம் வித்தையின் பயனே
உத்தம ரென்பவர் கல்வி யுடையோர்
ஊக்க மென்பது உள்ளத்துக் கல்வி
வெண்டா மரையாள் தன்னை வணங்கு
வேத முதலாய் விரித்துணர்ந் தோதும்
வையக மெல்லாம் வழங்குவ தெழுத்தே
ஓத்துரைப் போலே ஓதி யுணர்ந்தோர்
ஓதியுணர்ந்தோர்க் கெல்லாம் வருமே.

ஔவையார் அருளிச் செய்த கல்வியொழுக்கம் படித்து முடிந்தது. முற்றும்.

# 1422. மதுராபுரி அம்பிகை மாலை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 1115

ஆ. ய/56

## 2. உள்ளீடு: நூல்விவரம்

அ. குலசேகர பாண்டியன்

ஆ. மதுராபுரி அம்பிகை மாலை

இ. சிற்றிலக்கியம்

ஈ. செய்யுள் 30

## 3. தோற்றக் கூறுகள்

அ. 16 ஏடு; 32 பக்கம்.

ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 2 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 1111 காண்க.

இ. முற்குறிப்பு

இவை முத்துச்சாமிக் கவுண்டன் குமாரன் செல்லப்பன் ஏடு.

இ. பிற்குறிப்பு

கோயமுத்தூர் சில்லாத் தாராபுரம் தாலுக்கா முளையாம் பூண்டிக் கஸ்பாவிலிருக்கும் முத்துச்சாமிக் கவுண்டன் மகன் பெரிய செல்லப்பன் அம்பிகை மாலை. ஜெய வருஷம் ஆனி மாதம் 16 ஆம் தேதி எழுதி முகிந்தது. இது எழுதினது நாகவ நாயக்கன்பட்டி நாகப்ப செட்டி மான் எழுதினது.

## 1423, தனிப் பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1116

ஆ. ற/70

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..................

ஆ. தனிப்பாடல்கள்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 10 ஏடு; 20 பக்கம்.

ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் 4 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கருதரிய சூராசங் காரகுல காரனே
காங்கயா வெகுப ரர்க்கு
கந்தாகிரு பாகார சுந்தர மயூரனே
கடம்பனே எச்ச ரிக்கை

பருதியெழு மயிலேறு பன்னிருகை யாளனே
பாதமே வெகுப ரர்க்கு
பன்னிருபு யாசலா கன்னிதெய்வ யானைக்குப்
பாகனே எச்ச ரிக்கை

அருணகிரி மார்பனே சண்முகக் கடவுளே
அறுமுகா வெகுப ரர்க்கு
ஆயனுட மருகனே அமரர்தொழு பாதனே
ஆண்டவா எச்ச ரிக்கை

ஆ. முடிவு

வாழிப் பத்தியம்
ஆதிமறை யோர்கள்மிக வேதியர்கள் வாழி
அகிலம்புரந் தழைத்தோங்கும் அரசர்களும் வாழி
நீதியுடன் பார்பதியிற் தேவர்களும் வாழி
நிலமையுடன் குடிவாழி துறவியர்கள் வாழி
தீதறவே மழைபொழியச் செல்வதுத ழைக்க
செயமாகக் கவுண்டர்களும் செழிக்க மிகவாழி
மாதுசர சோதியுட திருவருளாலே
மண்டலத்தி லெல்லோரும் வளர்ந்தோங்க வாழி.

5. பிற செய்திகள்

இச்சுவடியில், ரகுபதி நாயன் பேரில், செல்லாண்டியம்மன் பேரில், நாட்டுராயன் பேரில், விநாயகன் பேரில், சரஸ்வதியம்மன் பேரில், பச்சோடலிங்கர் பேரில், கரியகாளியம்மன் பேரில், முத்தயன் பேரில், சிவன்மலை ஆண்டவர் பேரில், பள்ளி ஆண்டவர் பேரில், அங்காளம்மன் பேரில், கடலைப் பத்தியம், வாழிப் பத்தியம் ஆகிய தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

## 1424. கொன்றை வேந்தன்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1117
ஆ. ள/15

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்
ஆ. கொன்றைவேந்தன்

இ. நீதிநூல்கள்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.

ஆ. நீளம் 37 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து.

ஊ. சிதைவுற்ற நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 1110 காண்க.

## 1425. ஆத்திசூடி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1118

ஆ. ள/16

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்

ஆ. ஆத்திசூடி

இ. நீதிநூல்

ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.

ஆ. நீளம் 41 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து,

ஊ. சுமாரான நிலை

எ. முழுமை

## 4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம்

அறம் செய விரும்பு,
ஆறுவது சினம்,
இயல்வது கரவேல்,
ஈவது விலக்கேல்,
உடையது விளம்பேல்,
ஊக்கமது கைவிடேல்,
எண்ணெழுத் திகழேல்,
ஏற்ப திகழ்ச்சி,
ஐயமிட்டுண்,
ஒப்புர வொழுகு,
ஓதுவ தொழியேல்,
ஔவியம் பேசேல்.

ஆ. முடிவு

வேண்டிவினை செய்யேல்,
வைகறைத் துயிலெழு,
ஒன்னாரைச் சேரேல்,
ஓரஞ் சொல்லேல்.

ஔவையார் அருளிச்செய்த நீதிச்சொல் முற்றும்.

# 1426. வீடணன் அறிவுரை

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 1119

ஆ. த/95

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . .
ஆ. வீடணன் அறிவுரை
இ. காப்பியம்
ஈ. செய்யுள் 50

3. தோற்றக் கூறுகள்

அ. 25 ஏடு; 50 பக்கம்
ஆ. நீளம் 38 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.
உ. பெரிய கையெழுத்து.
ஊ. நல்லநிலை.
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்: 843 காண்க.

ஆ. முடிவு

இசைதவ மறியா மாயன் இராமனை இலக்காய்ச் சொன்னான்
வசையன்றி வழக்குச் சொன்னாய் மானி டரிரு வர்க்கஞ்
தசைதரு தவங்கள் மூன்றுந் தருமறை யுரைகள் நான்கு
பசைதரு கதிரோன் கண்ட பனிக்குல மாகுங் கண்டாய். (50)

## 1427. இராசகோபால மாலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 1120
ஆ. ய/57

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ...............

ஆ. இராசகோபாலமாலை

இ. சிற்றிலக்கியம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு; 30 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 2•5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து.

ஊ. சுமாரான நிலை. சில ஏடுகள் முறிவு

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தண்டமா மலரின் தேனைத் தனித்தனி வனத்தில் வாழும்
வண்டது அறியு மல்லால் மண்டூக மறிந்தி டாது
கண்டது கடத்துந் துரம கசடர்க்கு நல்லார் பொல்லார்
உண்டது தெரியா தையா ராசகோ பால மாலை. (1)

ஆ. முடிவு

வாயினில் வந்த சொல்லை மதலைச்சொல் லாமென் றெண்ணி
மாயநின் பேரைத் தொட்டு மாலையென் றுரைத்தே னையா
தாய்தனைப் பிள்ளை பார்த்துத் தானேது சொன்னா லுந்தான்
நாயனை பொறுப்பீ ரையா ராசகோ பால மாலை. (30)

## 1428. கொன்றை வேந்தன்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1121
ஆ. ள/17

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்
ஆ. கொன்றை வேந்தன்
இ. நீதிநூல்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்
ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 3 செ. மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது
ஈ. ஒருபக்கத்திற்கு 4 வரி.
உ. சுமாரான எழுத்து
ஊ. ஏடுகள் முறிந்துள்ளன
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 1110 காண்க

## 1429. அரிச்சந்திர புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1122
ஆ. ந/96
சு. வி. 36

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ................

ஆ. அரிச்சந்திர புராணம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 263

3. தோற்றக் கூறுகள்

அ. 37 ஏடு; 74 பக்கம்.

ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 2 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்துக்கு 5, 6 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மகர தோரண வாயலும் நாஞ்சிலுஞ்
சிகர மாமதில் சூருஞ் செறிக்குஞ்
சகர வன்புகழ் சாற்றும் மயோத்திமா
நகர வண்மை சிறிது நடத்துவாம். (1)

ஆ. முடிவு

வாடிவிரு நூலுமிரு மால்வரை யும்நே
ரிடையுமா முலையுமாய்ச்
சூடிமக வானரிய னாரல்விளை யாடிவரு
தோகை மயிலே
யாடிநிழல் போலிதுள மேயணிகொள் தேர்மிசையு
மாக வருவோன்
நாடியறம் நாளும்வளர் மேதகயி லானவா
நாட னிவனே. (263)

அரிச்சந்திர புராணம்
நகர்ச்சிறப்புக் காண்டம் முற்றும்.

## 1430. அனுமார் தூது

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 1123

ஆ. ர/26

### 2. உள்ளீடு : நூல் விவரம்

அ. ..........

ஆ. அனுமார் தூது

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

### 3. தோற்றக் கூறுகள்

அ. 24 ஏடு; 48 பக்கம்.

ஆ. நீளம் 36 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. நல்லநிலை.

எ. குறை

### 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பள்ளிகொண்ட மாயவரும் பாரமலைச் சோகருகே
தெள்ளியதோர் லட்சுமணனார் தெண்டனிட உள்ளமெல்லாங்
கனிந்து கனிந்துருகிக் கமலபதம் போற்றி
அனுமந்தன் தொண்டு செய்தான் அனந்தருக்கு,

ஆ. முடிவு

வாரெங்குங் குவிமுலையாள் சானகியை
அசோக வனத்தில் வைத்தாய்
தேரோடே கெடுமென்று அன்றுநான்
சொன்னபுத்தி விரும்பாய் மன்னா
தூரோடே முடிகள்பத்து யிடந்தலறிப்
பதைக்கிறதைப் பார்க்க வெய்யோன்
தேரேறி வருகின்றான் தென்னிலங்கை
மாநகரிற் தெருவி னூடே. (26)

## 1431. உலகநீதி

### 1. நூலகக் குறிப்புகள்

அ. 1124

ஆ. ள/18

### 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. உலகநாத பண்டிதர்

ஆ. உலகநீதி

இ. நீதி நூல்.

ஈ. செய்யுள்;

### 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.

ஆ. நீளம் 43 செ. மீ.; அகலம் 3·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து.

ஊ. பதப்படுத்தப் பெறாத ஏடுகள். வளைந்து முறிந்த நிலை.

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஓதாம லொருநாளு மிருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாப்புச் சொல்லவேண்டாம்
மாதாவை யொருநாளும் இகழவேண்டாம்
வஞ்சனைகள் செய்வாரோ டிணங்க வேண்டாம்.

ஆ. முடிவு

ஓதி வைத்த வாத்தியார் உலகநாதன்
உண்மையாய்ப் பாடி வைத்த உலகநீதிக்
காதலுடன் கருத்துக் கேட்டிருக்க வல்லான்
கருத்துடனே கயிலாசங் காணலாமே.

# 1432. கல்வியொழுக்கம்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 1125
ஆ. ள/19

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்
ஆ. கல்வியொழுக்கம்
இ. நீதி நூல்
ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.
ஆ. நீளம் 41 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து.

ஊ. சுமாரான நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ, முடிவு

தொடர் எண்: 1114 காண்க.

## 1433. விவேக சிந்தாமணி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1126

ஆ. ள/20

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . .

ஆ. விவேகசிந்தாமணி

இ. நீதி நூல்

ஈ. செய்யுள் 40

3. தோற்றக் கூறுகள்

அ. 20 ஏடு; 40 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து.

ஊ. நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

ஆபத்துக் குதவாப் பிள்ளை அரும்பசிக் குதவா அன்னம்
தாபத்தைத் தீராத் தண்ணீர் தரித்திர மறியாப் பெண்டீர்
கோபத்தை யடக்கா வேந்தன் குருமொழி கொள்ளா சீஷன்
பாவத்தை தீராத் தீர்த்தம் பலனில்லை யேழுந்தோன(1).

ஆ. முடிவு

ஒருநான்கு மீரரையு ஒன்று கேளாய்
உண்மையுடன் அய்யரையும் அரையுங் கேட்டேன்
இருநான்கு மூன்றுமொரு ஒன்று சொல்லாய்
இம்மொழியைக் கேட்டபடி ஈந்தா யாகில்
பெருநான்கு மறுநான்கும் பெறுவாய் பெண்ணே
பின்னையொரு மொழியுரைக்க வேண்டாம் சொன்னேன்
சரிநான்கும் பத்துமொரு பதினைந் தாலே
சகிக்கமுடி யாதினியென் சகியே மானே. (40)

## 1434. கதிர்காம மாலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 1127

ஆ. ய/ 58

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ....................

ஆ. கதிர்காம மாலை

இ. சிற்றிலக்கியம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 13 பக்கம்.

ஆ. நீளம் 40 செ. மீ; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நித்தமு னைத்துதித்து நீணிலத்தோர் கொண்டாட
பத்துலட்சங் கோடிதமிழ்ப் பாடவரமே யருள்வாய்
அத்தன் அறுமுகவா ஆயோன் மருகோனே
கர்த்தனேஎங்கள் கண்டிக்கதிர் காமவேலோனே. (1)

ஆ. முடிவு

மன்னிமை யாலென்மேல் மனம்வைத்த நாள்முதலாய்
சொன்னீ ரிதைமறந்து தோகைதனக் குள்ளானார்
பன்னீர் தனக்கு பனிநீர் களுமோ
கன்னிநிகர் காணகண்டிக் கதிர்காம வேலோனே.

## 1435. தனிப்பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1128

ஆ. ற/71

2. உள்ளீடு: நூல் விவரம்

அ ......................

ஆ. தனிப்பாடல்கள்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 9 ஏடு; 17 பக்கம்.

ஆ. நீளம் 33 செ.மீ.; அகலம் 2•5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை

எ. குறை

### சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

எண்ணரிய கலியுக சகாப்த மதுஎண்
ணூற்றியெட் டான துக்குமேல்
எழில்பெற்ற வருஷம்இனிய வைகாசி மாதம்
மென்மைபதி மூன்று தேதியில்
நண்ணியசனி வாரமும் அமரபட் சத்துடன்
நலம்பெற சட்டி நாளில்
நளினமிகு பூராட சுபநாம யோகமும்
நாடுபா கரண மதிலே
மன்னவர்ம திக்கிங்கு லோத்துங்க சோழனுட
மந்திரித் தலைமை யானோம்
வளமைபெறு காவேரிபூம் பட்டணத் தையே
மகிமையோ டுதிரை கொண்டுமே
தண்மைபெரு அஞ்ஞாகு குலவணிசுர் தன்னையே
தனதுவச மேசெ யத்தால்
தரணிபுகழ் செட்டிவோ னாவுடைய னென்றுமுடித்
தான்பெருகச் சூடி னாரே

ஆ. முடிவு

சீரான கல்லை நகரம் நஞ்சதிகள் கரியபாடி முட்டமும்
நற்கடம்பங் குறிச்சி நாட்டிலுயர் செல்லகுல காராளர்
காணியோடு நானிலந்தனில் வாழ்கவே.

5. பிறசெய்திகள்

இச்சுவடியில், வெவ்வேறு ஏடுகள் கலந்துள்ளன. பாடல்கள் தொடர்ச்சியாகவும் முறையாகவும் இல்லை.

## 1436. விவேக சிந்தாமணி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1129

ஆ. ள/21

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..........

ஆ. விவேக சிந்தாமணி

இ. நீதி நூல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.

ஆ. நீளம் 30 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 5 வரி.

உ. பெரிய கையெழுத்து.

ஊ, நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச்செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 1126 காண்க.

இ. பிற்குறிப்பு

அ. பல்ல கவுண்டம் பாளையம் குப்பண்டாரம் மகன் பாமணன் ஏடு. வி. சிந்தாமணி.

## 1437. தனிப்பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1130

ஆ. ற/72

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ....................

ஆ. தனிப்பாடல்கள்

இ. பல்வகை நூல்கள்.

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 26 பக்கம்.

ஆ. நீளம் 40 செ மீ.; அகலம் 2.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 5 வரி.

உ. வெவ்வேறு கையெழுத்து.

ஊ. சுமாரான நிலை

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

கொங்கைக் குரும்பை முகவட்ட மான
குருமீநீ இன்ப வலையில்
சங்கற்ப மீறி மனமே சடைந்து
தடுமாறி யாவி விடுமுன்

திங்கட் கொழுந்து சடைதுறு கின்ற
சிவனே உன்நாமம் மறவேன்
மங்கைக் கிரங்கும் அருணா சலீசர்
வரவேணு மெந்த னருகே.

ஆ. முடிவு

மந்திரமும் அட்டசத்தி யெட்டுஞ் சேரும்
வாழ்கிரகம் ஒன்பதிலே ஐந்துஞ் சேரும்
கந்துருவர் கிணநாக ராசி வர்க்கம்
கலைக்கியானம் நால்வேதம் கலந்து வாழும்
நந்திமுதற் தேவர்களுங் கவுணர் யோகம்
நமஸ்கரித்து உன்பாதம் நாளும் போற்ற
அந்திரமாய் நிறைந்திருக்கும் கருடன் மீதில்
அன்புடனே ஏறிவந்து அருள்செய் வாயே.

5. பிற செய்திகள்

இறுதி ஏட்டில் வேறுசில பாடல்கள் எழுதப்பட்டுள்ளன

## 1438. அருணாசல புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1131

ஆ. ப/42

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. எல்லப்ப நாவலர்

ஆ. அருணாசல புராணம்: மூலமும் உரையும்

இ. தலபுராணம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 150 பக்கம் வரும்.

3. தோற்றக்கூறுகள்

அ 60 ஏடு; 120 பக்கம்.

ஆ. நீளம் 42 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 5 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சில ஏடுகள் முறிந்துள்ளன. பிற நல்ல நிலை.

எ. முறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மிக்க வேத வியாசர் விளம்பிய
விக்கதைக்கு வியன்றருள் செய்திட
முக்கண் வெற்பினை மும்மத வாரியை
கைக்க ளிற்றினை கைதொழு தேத்துவாம்.

ஆ. முடிவு

(எ. து.) வாரும் பிரமாவே, நீ வந்த வழி மனதிலே நினையாமல் மறந்தையோ. என்னுடைய நாபிக்கமலம் உனக்குத் தாயல்லவோ. என் திறத்தை நினைக்க மாட்டாமல் சொன்னாய் ஆனாலென்ன மாச்சுது. தகப்பனானவன் சிறு பிள்ளைகள் செய்த பிழையைப் பொறுக்க வேணுமென்பார். இப்படிக்கொத்த இகழ்ச்சியான சொல்லைக் கருவத்தினாலே சொன்னால் பொறுப்பரோ. பொறார்களென்று பின்னையுஞ் சொல்லுவார் மகா விஷ்ணு என்றவாறு. (25)

இ. பிற்குறிப்பு.

ஆதங்கில வருஷம் பங்குனி மாதம் 25 ஆம் தேதி தாராபுரத் தாலுகா தூரம்பாடிக் கிராமம் மடியூர் மணியம் நாச்சிமுத்துக் கவுண்டன் மகன் ராமசாமி அருணாசல புராணம் படித்து முகிந்தது முற்றும். இதை எடுத்து வாசித்துப் பார்த்தவர் ஏட்டுக்காரன் வசம் கொடுக்கவும். கொடாது போனால் ஆனைக் காலில் கட்டி கடமுடா வென்று அடிக்கவும். அதிலேயும் பயப் படாதுபோனால் ஊரைச்சுற்றி மண்ணுக்கூடை வைத்தடிக்கவும்,

## 1439. ஆத்திசூடி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1132

ஆ. ள/32

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்

ஆ. ஆத்திச்சூடி

இ. நீதிநூல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.

ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து.

ஊ. ஏடுகளின் ஓரங்களில் சிதைந்துள்ளன

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 1118 காண்க.

## 1440. கந்தரநுபூதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1133

ஆ. த/30

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. அருணகிரிநாதர்

ஆ. கந்தரநுபூதி

இ. பிறதோத்திரங்கள்

ஈ. செய்யுள் 66

## 3. தோற்றக் கூறுகள்

அ. 23 ஏடு; 46 பக்கம்.

ஆ. நீளம் 28 செ.மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சுமாரான நிலை

எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந் திடவே
தஞ்சத் தொடுசண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் பனுமா லைசிறந் தருள
பஞ்சக் கரயா னைபதம் பணிவாம்.

எந்தாயு மெனக்குள தந்தை யும்நீ
சிந்தா குலமான துதித்தெனை யாள்
கந்தா கதிர்வே லவனே உமையாள்
மைந்தா குமரா மயில்வா கனனே. (1)

ஆ. முடிவு

அய்யா றுடனே அய்யா றையுமாறு
அய்யா றையுமா றகலா தவனே
அய்யா ஆறுமுகா அயில்வே லரசே
அய்யா றையுமே அறிவித் தவனே,

# 1441. தனிப்பாடல்கள்

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 1134

ஆ. ற/73

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ....................

ஆ. தனிப்பாடல்கள்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள்;

## 3. தோற்றக் கூறுகள்

அ. 22 ஏடு; 44 பக்கம்.

ஆ நீளம் 44 செ.மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்குப் 4, 5 வரி.

உ. சுமாரான கையெழுத்து

ஊ. நல்ல நிலை.

எ, குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வண்டணி துளபத் தானை மணிமுடி மகுடத் தானை
கண்டனன் கண்டபோ தேயிரு கண்கொளாக் காட்சி பெற்றேன்
தெண்டிரை அயோத்தி வாழுந் தசரத மைந்தா யுன்னை
அண்டினேன் எனக்கு வந்த ஆபத்தை நீக்கு வாயே,

ஆ. முடிவு

மலைமீதி லிருந்துகொண் டெனதுமுறை கேளாமல்
மவுனங் கள்செய்தி டாதே
மாநிலந்தன் னிலெப்படிய டிமையா னுன்னை
மனத்தினில் நிகழ்த்தி டாதே
கலகவிழி வள்ளிதெய்வா னையைக் கையினால்
நினைந்து மறந்தி டாதே
காலத்தை நேரத்தை யோசித்து மிவ்வேளையிற்
கர்த்தனே கைவி டாதே
பலபலவி தங்களாய்நா னுன்னை நம்பினேன்
பழியுன்மேல் வைத்து விட்டேன்
பாவியான் செய்க்குற்ற மெல்லாம் பொறுத்துப்
பஞ்சம்வைத் தென்னை யாள்வாய்
வலவனுதை திருவனுமை நடனமிடு விசய
மங்கை வாசனே வேளே
மிகத்த கிரிபா லாகதித் தகிரி
வேலா யுதக்க டவுளே. (32)

## 5. பிற செய்திகள்

முதல் 6 ஏடுகளில் குழி வாய்பாடு எழுதப்பட்டுள்ளது. பிறகு, ராமாயணப் பாட்டு, அருணாசல ஈஸ்வரன் பேரில் கொச்சகம், சிவன்மலை யாண்டவர் பேரில் கலவித்துறை, நாட்டுராயன் பேரில் பாட்டு, பழனி யாண்டவர் பேரில் பாட்டு, வேல் விருத்தம், முத்தாலம்மன் பேரில் விருத்தம், சுப்பிரமணியர் பேரில், விநாயகன் பேரில் விருத்தம், கதித்த மலையாண்டவர் பேரில். அறப்பளீசுரன் பேரில் விருத்தம் என்னும் தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

# 1442. ஆத்திசூடி

## 1. நூலகக் குறிப்புகள்

அ. 1135

ஆ. ள/23

சு. வி. 37

2. உள்ளீடு: நூல்விவரம்

அ. ஔவையார்

ஆ. ஆத்திச்சூடி

இ. நீதிநூல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 3 ஏடு; 6 பக்கம்.

ஆ நீளம் 38 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.

உ. பெரிய கையெழுத்து

ஊ. சிதைவுற்ற நிலை.

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண் 1118 காண்க.

## 1443. மதுரைவீரன் அம்மானை

1. நூலகக் குறிப்புகள்

அ. 1136

ஆ. ர/27

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . . . . .

ஆ. மதுரைவீரன் அம்மானை

இ. நாட்டுப்பாடல்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 37 ஏடு; 74 பக்கம்.
ஆ. நீளம் 42 செ. மீ.; அகலம் 2.5 செ.மீ.
இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 5 வரி.
உ. பெரிய கையெழுத்து.
ஊ. பல ஏடுகள் சிதைவு
எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

(முதல் 5 ஏடுகள் முறிந்துள்ளன)

சுட்டபிணந் தின்னி சுடலைவனங் காத்தவளே
வாயிலே அஞ்சுபிணம் வலதுகையி லேழுபிணம்
மிஞ்சின பிணத்தை மிதியடியாய்த் தொட்டவளே
ஏந்திய காபாலம் எடுத்தாய் திரிசூலம்
..... ..... .... .....

ஆ. முடிவு

ஆரென்று சொல்லி அலறி யெழுந்திருந்து
தாதியிருந்து சக்கிலிய னென்று சொன்னார்
சக்கிலிய னென்றுசொல்லத் தவறிஎழுந் திருந்து
சாதங் கறியுடனே தட்டிற் பரிமாறி.
(இதற்குமேல் ஏடுகள் இல்லை)

## 1444. நீதியொழுக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1137
ஆ. ள/24

## 2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்

ஆ. நீதியொழுக்கம்

இ. நீதிநூல்

ஈ. செய்யுள்

## 3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.

ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 2•5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து

ஊ. வளைந்து, முறிந்த நிலையிலுள்ளது

எ. முழுமை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நீதி யொழுக்கம் நிறையுடன் படிக்க
ஆதி விநாயகன் அடியிணை காப்பு.

போற்றி போற்றி குருநாதா
புத்தி யெனக்குத் தருவாயே
தோற்றும் வகையா லெழுபிறப்பும்
தோன்றாக் கலியி லழுந்தாமல்

ஆ. முடிவு

போற்றி மாலை தான்முடிய
போதாப் படித்த பேர்களெல்லாம்
செல்வ மிகுத்து வாழ்வுகந்து
செங்கோ லரசு தான்வாழ்வார்.

ஔவையார் அருளிச்செய்த நீதியொழுக்கம் படித்து முகிந்தது. முற்றும்.

## 1445. சடாட்சர அந்தாதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1138
ஆ. ய/59

2. உள்ளீடு : நூல் விவரம்

அ. அகத்தியர்
ஆ. சடாட்சர அந்தாதி
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 26 ஏடு; 52 பக்கம்.
ஆ. நீளம் 45 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.
உ. பெரிய கையெழுத்து
ஊ. ஓரளவு சிதைவுற்ற நிலை.
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 820 காண்க.

## 1446. கல்வியொழுக்கம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1139
ஆ. ள/25

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்

ஆ. கல்வியொழுக்கம்

இ. நீதி நூல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.

ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 3 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து.

ஊ. வளைந்து, முறிந்த நிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 1114 காண்க.

## 1447. உலகநீதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1140

ஆ. ள/26

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. உலகநாதர்

ஆ. உலகநீதி

இ. நீதி நூல்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்
ஆ. நீளம் 41 செ.மீ.; அகலம் 3 செ.மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.
உ. பெரிய கையெழுத்து
ஊ. வளைந்து முறிந்த ஏடுகள்
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 1124 காண்க

## 1448. உலகநீதி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1141
ஆ. ள/27

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. உலகநாதர்
ஆ. உலக நீதி
இ. நீதி நூல்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 7 ஏடு; 14 பக்கம்.

ஆ. நீளம் 39 செ.மீ.; அகலம் 2.5 செ.மீ.

இ. இருபக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து

ஊ. வளைந்து, முறிந்தநிலை

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 1124 காண்க.

## 1449. ஆரவல்லி கதை

1. நூலகக் குறிப்புகள்

அ. 1142

ஆ. ர/28

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ..............

ஆ. ஆரவல்லிகதை

இ. நாட்டுப்பாடல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 23 ஏடு; 46 பக்கம்.

ஆ. நீளம் 40 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. ஏடுகளின் ஓரங்களில் முறிவு

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

முந்திவி நாயகனே முக்கண்ணார் தன்மகனே
சத்திக்க ணபதியே தையநல்லாள் புத்திரனே
வித்தைக்கு நல்ல விநாயகனே முன்னடவாய்
புத்திமிகத் தந்தருளும் புண்ணியனே முன்னடவாய்.

ஆ. முடிவு

அப்போது பஞ்சவர்கள் ஆனதொரு ஓலையிலே
இருந்ததொரு வார்த்தை இன்பமுடன் தான்பார்த்து
விருமனுட சொற்படியோ வேதியனார் சொற்படியோ
சிவனுடைய கற்பனையோ தெய்வங்கள் சோதனையோ
பாண்டவர்கள் ஐவருந்தான்....................

(இதற்கு மேல் ஏட்டில் இடம் இருந்தும் மேலே எழுதப் பெறவில்லை)

## 1450. மகாவிந்தம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1143

ஆ. ந/97

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ....................

ஆ. மகாவிந்தம்

இ. காப்பியம்

ஈ. செய்யுள் 102

3. தோற்றக் கூறுகள்

அ. 51 ஏடு; 102 பக்கம்.

ஆ. நீளம் 36 செ. மீ; அகலம்2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி

உ. பெரிய கையெழுத்து

ஊ. நல்லநிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

பொன்னிற மாக வுற்ற பொருவரை தன்னைச் சார்ந்து
அந்நிறம் பைம்பொன் மேனி ஆனபச்சி யாளைப் பார்த்து
தன்னிலே சந்தோ சித்துத் தான்வழி நடக்கும் போது
அன்னதோர் மாயா தாளை அறிவிலோர் குயில்தா னென்றார். (1)

ஆ. முடிவு

தஞ்சமா நாலா நரகம் தாக்குடன் கண்ட பின்பு
அஞ்சதா நரகங் கண்டு அடவுடன் அப்பாற் சென்று
மிஞ்சவே ஆறு நரக மிடுக்குடன் கண்டு தாண்டி
தஞ்சமா மகிமையென்று தர்மனார் தவித்து நின்றார். (102)

## 1451. சுப்பிரமணிய மாலை

1. நூலகக் குறிப்புகள்

அ. 1144

ஆ. ய/60

## 2. உள்ளீடு; நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .
ஆ. சுப்பிரமணிய மாலை
இ. சிற்றிலக்கியம்
ஈ. செய்யுள் 30

## 3. தோற்றக் கூறுகள்

அ. 15 ஏடு; 30 பக்கம்.
ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்குப் 4 வரி.
உ. சுமாரான எழுத்து.
ஊ. சுமாரான நிலை
எ. குறை

## 4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

சீர்பெருகுந் தென்பழனிச் சண்முகவேள்
சுப்பிரமண் ணியமாலை பாட
கார்பெருகுங் கரிமுகவேள் கணபதியை
அனுதினமுங் கருத்தி லெண்ணி
பார்பெருகும் பழனிமலைக் கந்தன்மேல்
பைந்தமிழால் மாலை பாட
ஆர்பெருகும் ஆனைமுகத் தைங்கரனே
அனுதினமும் அருள்செய் வாயே.

ஆ. முடிவு

அனுதின முன்னநான் மனதினில் நினைந்து
அர்ச்சனை செய்துநான் இருக்க
இனியென்ன மனதுஅறு முகாத ரிசினை
ஈந்திடாம லிருப்பதே னய்யா
புனிதா யுனதுவடி யேன்நான் செய்த
பிழையெல்லாம் பொறுத்தென் முன்கந்தா
மணிமுடி துலங்க அறுமுகா தரிசினை
கொடுத்து மனதுவைசுப் பிரமணியனே. (30)

இ. பிற்குறிப்பு

கோயமுத்தூர் சில்லா தாராபுரம் தாலூகா ஐய்யம் பாளையத்திலேயிருக்கும் அத்தி முதலி மகன் ராமணன் சுப்பிர மண்ய மாலை. எடுத்தவன் கொடுக்காவிட்டால் அஞ்சுமணிக் குறடாவில் கெஞ்சக் கெஞ்ச அடிக்கிறது.

## 1452. அருணாசல புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1145

ஆ. ப/43

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. எல்லப்ப நாவலர்

ஆ. அருணாசல புராணம் : மூலமும் உரையும்

இ. தலபுராணம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 100 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 48 ஏடு; 96 பக்கம்.

ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. பொதுவாக நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தொடர் எண்; 1131 காண்க.

ஆ. முடிவு

........இறக்கிறதும் பிறக்கிறதும் எண்ணிய படிக்.... அதுவல்லாமல் பறக்கப்பட்ட பட்சி சாதிகளும் கல்லுகளும் விருட்சங்களும் மற்றுமுள்ள யெ.........கும் குருடராகிய பேர் களும் நிருத்தமண்டபமாகிய சிதம்பரத்திலே நடனஞ் செய்யுங் கனகசபை........ரிசிக்கக் கூடுமோ. அதன் பலனுண்டான பேருக்குச் சில சில சீவனுக்கு நேரிடும் மொழி எல்லாருக்...... சிவனுக்கும் நேரிடாதே. மற்ற சீவனுக்கு அருமை அல்லவோ வென்று பின்னையு.......

(இதற்குமேல் ஏடுகள் இல்லை).

## 1453. ஆத்திசூடி

1. நூலகக் குறிப்புகள்

அ. 1146

ஆ. வ/28

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்

ஆ. ஆத்திச்சூடி

இ. நீதிநூல்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 4 ஏடு; 8 பக்கம்.

ஆ. நீளம் 34 செ.மீ.; அகலம் 2·5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5, 6 வரி.

உ. சுமாரான கையெழுத்து.

ஊ. சுமாரான நிலை

எ. முழுமை

4 சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம் ஆ. முடிவு

தொடர் எண்: 1118 காண்க.

## 1454. அருணாசல புராணம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1147

ஆ. ப/44

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. எல்லப்ப நாவலர்

ஆ. அருணாசல புராணம்: மூலமும் உரையும்

இ. தலபுராணம்

ஈ. செய்யுளும் உரைநடையும்;
அச்சில் ஏறத்தாழ 20 பக்கம் வரும்.

3. தோற்றக் கூறுகள்

அ. 13 ஏடு; 25 பக்கம்.

ஆ. நீளம் 34 செ. மீ.; அகலம் 3 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 6, 7 வரி.

உ. சுமாரான நிலை.

ஊ. 2 9, 11 ஆகிய ஏடுகள் முறிந்துள்ளன.
மற்றவை நல்ல நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ தொடக்கம்

தொடர் எண்: 1131 காண்க,

ஆ. *முடிவு

திணையளவாகிலு கொஞ்சத் தமிழ்ப் பாராட்டிய கல்வியினையுடைய பேர் முன்னே அதிக சூட்சமாகிய கல்வி யறிந்த பேர் நிற்கமாட்டார்கள். அதுயென்னில், வினைய மானமுடைய செங்கழனி நீலம் போலும் விழியினையுடைய அனிச்சம் பூப்போலும் மேனியையுற்ற சனங்களுக்கு மன மதனிற் புட்பபாணம் பொறுப்பதல்லாமல் கொடிதாகிய மல்யுத்த பாணங்கள் பொறுத்து நிற்பரோ, அப்படிப்போலத் தடியடி யாய்ச் சொல்லப்பட்டவர் முன்னே பெரியோர்கள் நின்று வசனி யார்கள் என்றவாறு. (19)

## 1455. நல்லையன் காதல்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1148
ஆ. ற/74

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . .
ஆ. கன்னிநகர் நல்லையன் காதல்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 29 ஏடு; 58 பக்கம்.

ஆ. நீளம் 41 செ.மீ.; அகலம் 2.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 5 வரி,

உ. சுமாரான எழுத்து

ஊ. நல்ல நிலை,

எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

அண்டர்புகழ் கன்னிநக ரரசாளும் அத்தயன்மேற்
தண்டமிழ்சேர் காதலுக்குச் சண்முகனே முன்னடவாய். (1)
சொற்தவறா வாக்குதவித் துலங்கி அரசாளும்
நல்மதுர வாக்குதவும் நல்லதந்த மாமுகனே. (2)

ஆ. முடிவு

செங்குன்னி குலத்துத் திருக்கை வேற்புலவர்
பண்புபெருங் காதல் பாடல்மிக வாழி
சாதகமாய்ப் புகழோதுஞ் சாமிநாதப் புலவர்
காதல்தனைப் புகழ்ந்த கவியே மிகவாழி
வாழி வாழி யென்றன் வையகத்திற்
கற்றநக ரருளியுள்ள காலமட்டும் உரைத்தேன்
உரைத்தேன் புவிவா ழியதே.

## 1456. தனிப்பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்:

அ. 1149

ஆ. ற/75

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ...............
ஆ. தனிப்பாடல்கள்
இ. பல்வகை நூல்கள்
ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 6 ஏடு; 12 பக்கம்.
ஆ. நீளம் 38 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.
ஈ. ஒரு பக்கத்திற்கு 4வரி
உ. பெரிய கையெழுத்து.
ஊ. சிதைவுற்ற நிலை
எ. முழுமை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

தனக்குவெகு புத்தியுண் டாகிலும் வேறொருவர்
தன்புத்தி கேட்க வேணும்
தானதிய சூர னாகிலுங் கூடத்
தளசேக ரங்கள் வேணும்
கனக்கின்ற வித்துவா னாகிலுந் தன்னிலுங்
கற்றோரை நத்த வேணும்
காசினியி லொருகுடையில் ஆண்டாலும் வாசலில்
கருத்துள்ள.................வேணும்
துணைக்கென்ற சங்கீதம் சாமர்த்திய னாகிலும்
சுருதிகூட்ட வொருவன் வேணும்
சுடர்விளக் காயிலும் நன்றாய் விளங்கவே
தூண்டுகோ லொன்று வேணும்
அனற்கண்ண னேபடிய சங்கரசு வண்ணனே
அய்யனே அருமை மதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரியில்வளர்
அறப்ப ளீசுவர தேவனே.

ஆ. முடிவு

வசுத்தனில் மெஞ்ஞான தேவ தேவாபுரம்
மைந்தனே வெகு பராக்கு.

வள்ளிதெய் வானைக்கு மணவாளனே
மயூரனே எச்சரிக்கை.

பச்சைமயில் வாகன பரமகுரு நாதனே
பராக்கிரமாய் வெகு பராக்கு.

பழமறைகள் புகழும் திருவாவினங் குடியிலுறை
பாக்கியா எச்சரிக்கை.

5. பிற செய்திகள்

இச்சுவடியில், அறப்பளீசுரர் பேரில், பள்ளிக்குடத்து விநாயகர் பேரில், விக்கினேஸ்வரன் பேரில் பத்தியம், பழனியாண்டவர் பேரில் கட்டியம் ஆகிய தலைப்புகளில் பாடல்கள் உள்ளன.

## 1457. முதுரை

1. நூலகக் குறிப்புகள்

அ. 1150
ஆ. ள/29

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. ஔவையார்
ஆ. முதுரை
இ. நீதி நூல்
ஈ. செய்யுள் 31

3. தோற்றக் கூறுகள்

அ. 8 ஏடு; 16 பக்கம்.
ஆ. நீளம் 39 செ. மீ.; அகலம் 2·5 செ. மீ.
இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. பெரிய கையெழுத்து

ஊ. ஏடுகள் வளைந்து, முறிந்துள்ள நிலை

ஏ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

நன்றி யொருவருக்குச் செய்தக்கா லந்நன்றி
என்றுதருங் கொலென வேண்டாம்—நின்று
தளரா வளர்ந்தெங்கும் தானுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால். (1)

ஆ. முடிவு

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தில் நிற்குமாம்
அவையல்லா நல்ல மரங்கள் — சவையகத்தில்
நீட்டோலை.........சிக்க நின்றான்ங் குறிப்பறிய
மாட்டா..............மரம். (31)

## 1458. கோவிந்த சதகம்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1151
ஆ. ய/61

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. நாராயண பாரதியார்

ஆ. கோவிந்த சதகம்

இ. சிற்றிலக்கியம்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 17 ஏடு; 34 பக்கம்.

ஆ. நீளம் 32 செ. மீ.; அகலம் 2.5 செ. மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4 வரி.

உ. சுமாரான எழுத்து.

ஊ. மிகவும் சிதைவுற்ற நிலை.

எ. குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

மாவேழுங் கூப்பிட வந்தா யுலகில் மகிழச்செவிப்
பாவேற வேயுனைக் கோர்சத கஞ்சொலப் பாரறியேன்
நாவேற வானத் துகின்றே நாமெனனை யாண்டருள் நான்முகர்க்குங்
கோவேசக் கராயுதனே அச்சுதா னந்த கோவிந்தனே. (1)

ஆ. முடிவு

மொழியும் படிநடவார் தன்கண் உனை..............
பழியுஞ் சுமக்கும்படிசெய் வாளை நம்பட்ட....
பொழியுஞ் சமரிடை ராவுத்தனைத் தள்ளிப்போட்டது
குழியும் பறித்தனவாம் அச்சுதா னந்த கோவிந்தனே.

## 1459. தனிப்பாடல்கள்

1. நூலகக் குறிப்புகள்

அ. 1152

ஆ. ற/76

2. உள்ளீடு: நூல் விவரம்

அ. . . . . . . . . . . . . . . . . .

ஆ. தனிப்பாடல்கள்

இ. பல்வகை நூல்கள்

ஈ. செய்யுள்

3. தோற்றக் கூறுகள்

அ. 40 ஏடு; 80 பக்கம்.

ஆ. நீளம் 38 செ.மீ.; அகலம் 2.5 செ.மீ.

இ. இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது.

ஈ. ஒரு பக்கத்திற்கு 4, 5, 6, வரி.

உ. சுமாரான எழுத்து

ஊ. சுமாரான நிலை

எ குறை

4. சிறப்புச் செய்திகள்

அ. தொடக்கம்

வஞ்சியம்மன் பேரில் பாட்டு

மட்டுலவுந் திருமூல நகரினில் வாழும்
வளர்வஞ்சி நாயகியே வனச மாதே
திட்டமுடன் எனதுண்டைய துய்ரஞ்சிந் தையுடன்
எந்த னுக்குத் திறமை கொள்வாய்
கட்டளையா யருள்புரிந்து வறுமை தீர்த்து
காரணியே எனக்குதவி கருணை செய்வாய்
அட்டதிசை யோர்புக்கும் வஞ்சி மாதே
அம்பிகையே உன்பாதம் அருள்கொண் டேனே.

ஆ முடிவு

சீர்கொண்ட அகத்தீசு வரர்அகி லாண்ட வல்லியும்
தேவிமா மேரு கெவுரியும்
செல்லாண்டி யம்மையும் கருப்பண சுவாமியே
தினந்தினம் பணியும் நேமா

